ஸ்ரீ

# இராமகிருஷ்ண வசநாமிருதம்

---

பாரதநாட்டிற்கும் மாநில முழுமைக்குமே லக்ஷிய
புருஷராக விளங்கும் குருநாதரின் சிஷ்யருள்
ஒருவரான ம— என்பவரால்
தொகுக்கப்பட்டது




*ஸ்ரீமதி அலமேலு அம்மாள் அவர்களால்*
*மொழி பெயர்க்கப்பட்டது*

இரண்டாம் பதிப்பு

1929

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
சென்னை.

 [விலை ரூபா 1—8—0.

# முன்னுரை

இந்நூல் உலகப் பிரசித்திபெற்ற ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தருடைய குருநாதரும், அவதார புருஷரு மான பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின் திருவாய் மொழிகளடங்கியது. பகவான் தமது அந்தரங்க சிஷ் யர்கள்—ஞானிகள், பக்தர்கள், கர்மயோகிகள்—துறவி கள், பிரம்மசாரிகள், கிருகஸ்தர்கள் ஆகிய அனைவருட னும் புரிந்த சம்பாஷணைகள் அடங்கியது. உயர்ந்த வேதாந்த உண்மைகள் மிக சுலபமான உபமானங்க ளால் விளக்கப்பட்டிருக்கும் இந்நூல் வெவ்வேறு நிலை களிலுள்ள எல்லா சாதகர்களுக்கும் இன்னும் அதிக மான பக்தி ஞான வைராக்கியங்களைப் புகட்டி முன் னேற்ற மடையும்படி செய்யவல்லதாகையால் இதனை வாசிக்கும் எவரும் நன்மையடைதல் எளிதாகும். மேற் கண்ட சம்பாஷணைகள் பகவானது முக்கிய கிரகஸ்த சிஷ்யராகிய ம— என்பவரால் அவ்வப்போது குறித்து வைக்கப்பட்டிருந்து பின்னர் அவராலேயே புத்தக ரூபமாக வெளியிடப்பட்டன.

இதன் முதற்பதிப்பு சேலம் இராமகிருஷ்ண ஆசிர மத்திலிருந்து சிலவருடங்களுக்குமுன் வெளியிடப் பட்டது. அதனை இப்பொழுது பிழையறத் திருத்தி யும் அதிகமான அத்தியாயங்களைச் சேர்த்தும் வெளி யிட்டுள்ளோம். இதன் மற்ற பாகங்களும் தொடர்ந் தாற்போல் வெளிவரும்.

சர்வசமய சமரசத்தை நிருவி உலகுக்கு சாந்தோபதேசம் செய்த இம் மகாபுருஷரின் ஒப்பற்ற வாழ்க்கையானது இக்காலத்தில் அனைவராலும் இலக்ஷியமாகக் கொள்ளத்தக்க தாகையால் இந்நூல் எல்லோராலும் போற்றப்படுமென்று நிச்சயமாக நம்புகிறோம். இது தமிழ்நாட்டின் ஒவ்வொரு இல்லத்திலும் இருந்து மாந்த ரனைவர்க்கும் நற்பயனளிக்கும் நன்னாளை எதிர்பார்க்கிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணமடம்,
மயிலாப்பூர்.

ஸ்வாமி யதீஸ்வராநந்தர்

## ஸ்வாமி விவேகாநந்தர்
## ம—வுக்கு எழுதிய கடிதங்கள்.

அன்புடைய ம—,

தக்க கருமமே புரிகின்றீர்! இப்பொழுது இதுவே தேவை. அன்ப, வெளியே வருக! வாழ்நாளெல்லாம் உறங்குதல் ஒழிக. சபாஷ்! இதுதான் வழி.

நீவிர் வெளியிட்டுள்ள இவ் வெளியீட்டிற்கு அநேக, அநேக வந்தனங்கள். மிகக் குறைவாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கும் இச்சிறு இதழ் போதாதோ வென்றுதான் அஞ்சுகின்றேன். * * * போதுமோ போதாதோ வென்பதிருக்கட்டும் — இப்பொழுது இது வெளிவருவதாக. அநேக ஆசீர்வாதங்கள் நும்மீது சோரியப்படும்; அதனினும் அதிகமான நிந்தனைகளுக்கும் ஆளாக நேரிடலாம்—எனினும், இதுவே தருணம்.

இங்ஙனம்

திருவருள் விலாசத்தில்

என்றும் நன்மையைக் கோரி நிற்கும்

ராவல்பிண்டி,
1897௵ அக்டோபர்மீ. } விவேகாநந்தா.

டேராடேன்,

1897ஆ நவம்பர்மீ 24உ

என்தன்புள்ள ம—

நீவிர் விடுத்த இரண்டாம் இதழுக்கு அநேக, அநேக, அநேக வந்தனங்கள். மெய்யாகவே இது அற்புதமாயிருக்கின்றது. நீவிர் அனுசரிக்கும் முறையும் புதுமையானதே; நம்மைப்போல, எழுதும் ஆசிரியருடைய கருத்துக்களால் பாதிக்கப்படாது, பெரிய ஆசாரியர் ஒருவரின் வாழ்க்கையை உலகத்தாரிடை எவரும் வெளியிட்டது கிடையாது.

நடையோ போற்றற் கரியதாயும், தெளிவாயும், சுலபமாயும் இருப்பதுடன், சுருங்கக் கூறி விளங்க வைப்பதாகவு மிருக்கின்றது.

இதை வாசித்து நான் இன்புற்றது இவ்வளவென்பதை என்னால் அறிவிக்கக் கூடவில்லை. இதனை வாசிக்குந்தோறும் நான் உண்மையில் பரவச நிலையை எய்துகின்றேன். இது விந்தையே யன்றோ? நமது குருநாதர் நூதன புருஷராக விளங்கினார்; நாம் ஒவ்வொருவரும் அவ்வாறே நூதன வழிகளில் தொண்டு செய்தல் வேண்டும்; இல்லையேல் வாளாவிருத்தல் வேண்டும். இவர் சரித்திரத்தை எழுத நாங்கள் எவரும் இதுகாறும் முயலாதிருந்ததன் காரணத்தை இப்பொழுதே நான் அறிகின்றேன். இவ்வுன்னத கருமம் உமக்கெனவே நின்றதுபோலும்! நம்மிடை அவர் உறைகின்றார் என்பது உண்மையே. அன்பும் நமஸ்காரமும் ஏற்க.

இங்ஙனம்,

விவேகாநந்தா.

நான்காவது அத்தியாயம்

கேசவசந்திரசேனருடன் கப்பலில் உலாவச்சென்றல்



ஐந்தாவது அத்தியாயம்

கமல குடீரத்தில் பகவான் கேசவசந்திர சேனருடன்







பகவான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர்

# முகவுரை

## ஸ்ரீ ராமகிருஷ்ண சரித்திரம்

'यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥'

"எப்பொழுதெல்லாம் தர்மம் குறைந்து அதர்மம் அதிகரிக்கிறதோ அப்பொழுதெல்லாம் நான் அவதரிக்கிறேன்."

'धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे'

"தர்மத்தை ஸ்தாபிப்பதற்காக யுகத்துக்கு யுகம் நான் பிறக்கிறேன்."

இவ்விதம் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனுக்குச் சொன்ன பிரகாரம் பூலோகத்தில் அவதாரம் செய்யவேண்டி ஏற்பட்டிருந்தது. ஐரோப்பியப் பழக்கமானது உலக முழுவதும் வியாபித்து இந்தியாவின் புத்திமான்களையும் விழுங்க ஆரம்பித்துவிட்டது. இப்பழக்கத்தின் மோகத்தால் மனிதன் கேவலம் தன் புத்தியையே நம்பினான். அதனால் தான் புதிதாகக் கண்டு பிடித்த சில இயற்கை ரகசியங்களை அறியத் தக்கவை யென்று நினைத்தான். அவ்விரகசியங்களின் அறிவைக்கொண்டு, தான் தன் சௌகரியத்திற்காக

இயற்றிய சில கருவிகளே அடையவேண்டிய புருஷார்த்தங்களென்று கர்வித்தான். இவ்விரகசியங்களின் அறிவையும் இக்கருவிகளையும் எம்மட்டும் ஒரு தேசத்தார் அடைந்திருக்கின்றனரோ அம்மட்டே அவர்கள் பயிற்சியையும் நாகரிகத்தையும் அடைந்தவர்களென்று உலகத்தில் அபிப்பிராயம் பலமாக ஏற்பட்டுவிட்டது. இந்தியர்களும் அப்படியே நம்ப ஆரம்பித்துவிட்டார்கள். எது செய்யவேண்டி வந்தாலும், எதுபேச வேண்டி வந்தாலும் ஐரோப்பிய சாஸ்திரிகள் என்ன சொல்லுகிறார்கள், அவர்கள் என்ன நினைப்பார்கள் என்று கேட்பது இயற்கையாய்விட்டது. ஆங்கிலத்தில் எழுதிய வாக்கியங்களுக்கு விசேஷ மரியாதை ஏற்பட்டுவிட்டது.

அப்படியில்லாமல் தம் மதத்தை அனுசரித்து வந்த ஜனங்களும், பேதபுத்தியுடையவர்களாய், தம் மதமே உண்மையென்றும், மற்றவையெல்லாம் பொய்யென்றும் வீண்வழக்குப் போட்டுச் சண்டை யிட்டார்கள். ஒரு காரியம் செய்யும்பொழுது புண்டரம் எப்படித் தரித்துக்கொள்ளவேண்டும், வஸ்திரத்தை எப்படி அணிந்துகொள்ளவேண்டும் என்ற விஷயங்களைப் பற்றி அடுக்கடுக்காகப் புத்தகங்கள் எழுதி வாதித்து வந்தார்கள். மகம்மதியர் ஒருபக்கம், கிறிஸ்தவர் ஒரு பக்கம் ஹிந்துக்களில் சைவர் ஒரு பக்கம், வைஷ்ணவர் ஒரு பக்கம் நின்று சண்டையிட்டுக் கூக்குரலிடும் சப்தம் நிரம்பியிருந்தது.

இம்மயக்கத்தின் வேகத்தைக் குறைத்து மனிதனுக்கு ஆத்ம ஞானமே சிரேஷ்டமான புருஷார்த்த

மென்று இவ்வுலகத்திற்கு வற்புறுத்திக்காட்டி எல்லா மதங்களும் ஒரே ஈசுவரனையே நாடுகின்றன என்பதை அநுபவத்தினுல் அறிந்து சொல்ல ஈசுவர சக்தியின் விசேஷமான ஓர் அவதாரம் அவசியமாயிற்று. பகவானுடைய திருவிளையாடல்களுக்கு உரிய புண்ணிய பூமியான ஆரியா வர்த்தத்தைவிட்டு வேறு எங்கு அவ்வவதாரம் நிகழக்கூடும்? அதிலும் இவ்வைரோப்பியப் பழக்கம் விசேஷமாகப் பரவி ஜனங்கள் அதிகமாகத் தங்கள் மதாசாரங்களினின்று திரும்பியிருந்த வங்கதேசமே இவ்வவதாரத்திற்குப் பிறப்பிடமாக ஏற்பட்டது.

ஏன் இந்தியாவில் இவ்வவதாரம் வரவேண்டும் ? இந்தியாவில்தான் தொன்றுதொட்டு ரிஷிகளும், யோகிகளும் பக்தர்களும் வாழ்ந்து, மனிதனுடைய மேம்பாடு ஊணிலும், உடையிலும், பேச்சிலும் அல்லவென்று திருஷ்டாந்தமாகக் காண்பித்தார்கள். இங்கேதான் மனிதன் தன் ஞானத்தினுலேயே, அதிலும் கடவுளை யறியும் ஞானத்தினுலேயே, சிரேஷ்டனுகிறுனென்பதைக் கேவலம் அறிவீனர்களும் சம்மதிக்கிறுர்கள். இங்கேதான் ஞானத்தை மாத்திரம் கைக்கொண்ட அந்தணர்கள் அரசருக்கும் மேம்பட்டவராக மதிக்கப்பட்டிருந்தார்கள். இங்கேயே அரசரும் ஞானமடைவதற்காகத் தங்கள் அரசைத் துறந்து காட்டையடைந்து மிகுந்த சிரமமான சாதனைகளையெல்லாம் கைக்கொண்டிருக்கிறுர்கள். இங்கேதான் அரணியத்திலுள்ள கூரைவேய்ந்த ஆசிரமங்கள் நகரத்திலுள்ள அரண்மனைக்கு மேலாக மதிக்கப்பட்டுவந்தன. ஐரோப்பாவில் ஒவ்வொருவனும், முற்காலத்தில் கொள்ளை யடி

த்து ஜீவித்துவந்த தலைவர்களுடைய வம்சபரம்பரை யைச்சேர்ந்தவன் என்று சொல்லிப் பெருமைகொள்வது போல இங்கே ஒவ்வொருவனும், பூர்வத்தில் மரவுரி தரித்து கந்தமூலங்களைப் புசித்துவந்த ஒரு ரிஷியின் சந்ததியோன் என்பதில் சந்தோஷமடைகிறான்.

இவ்விதம் குருபரம்பரை விளங்கிவந்த இத்தேசத்திய வித்வான்களனேகர் தங்கள் மதங்களும் ஆசாரங்களும், தாங்கள் பிரமாணங்களாகக்கொண்ட ஐரோப்பிய மதிப்புக்கு ஒவ்வும்படிச் சீர்திருத்தங்களைச்செய்ய முயன்றார்கள்.

இவ்விதச் சீர்திருத்தங்கள் கருத்தரித்திருக்கும் காலத்தில் 1836-ஆம் பிப்ரவரி-மீ 18-உ புதன்கிழமையாகிய சுபதினத்தில் வங்காள மாகாணத்தின் ஹூக்ளி ஜில்லாவில் காமர்புகூர் என்ற கிராமத்தில் ஒரு கௌடப்பிராம்மண வம்சத்தில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்தனர்.

அவர் தகப்பனார் பெயர் க்ஷுதிராம் சட்டர்ஜி. தாயார் பெயர் சந்திரமணிதேவி. இவ்விருவரும் மஹாபக்தர்கள். ஆசாரசீலர். அதிலும் விருந்தோம்பும் கிரகஸ்த தர்மத்தைத் தாம் எவ்வளவு ஏழையாயிருந்தாலும் கைவிடாதியற்றிவந்தனர். அவர்கள் பக்தியை யறிந்து அவர்கள் வீட்டை நாடிவரும் சாதுக்களுக்கு, வீட்டிலிருந்ததை யளித்துவிட்டு எத்தனையோ நாள் சந்திரமணிதேவி பட்டினியாயிருப்பதுண்டு. க்ஷுதிராம் சட்டர்ஜியோ மஹா சத்தியசந்தர். தாம் முன் செல்வத்துடன் வசித்துவந்த தேராய் என்னும் கிராமத்தின் ஜமீன்தார் தன் பக்கம் பொய்ச்சாக்ஷி

சொல்லும்படி செய்த வேண்டுகோளுக் கிணங்காததினால் உபத்திரவம் செய்ய அக்கிராமத்தைவிட்டுக் காமார்புகூருக்கு வந்தவர்.

இவர் ஒரு சமயம் கயாக்ஷேத்திரத்துக்குப் போயிருந்தபொழுது விஷ்ணுபகவான், இவர் கனவில் வந்து, தாம் இவருக்குக் குழந்தையாக அவதரிப்பதாய்ச் சொல்லக்கண்டார். அதேகாலத்தில் காமார்புகூரில் சந்திரமணிதேவி சிவன்கோவிலுக்குப் போயிருந்தபொழுது தான் வணங்கிக்கொண்டிருந்த விக்ரஹம் உயிர்பெற்று அசையவும், அதிலிருந்து ஜோதிக்கிரணங்கள் புறப்பட்டுக் கட்டிடம் நிறையவும், அக்கிரணங்களில் ஒன்று தன்மேல் பட்டு உட்புகவும் கண்டு மயங்கி மூர்ச்சிக்க, அருகிலிருந்த தனம்என்னும் தோழியாகிய ஏழைக் கொல்லப்பெண் தாங்கிக்கொண்டு உபசரித்துப் பிரக்ஞை வரச்செய்தாள். இது நடந்த சில நாளைக்கெல்லாம் இம்மாது சிரோமணிக்கு வயது 45 ஆயிருந்தபோதிலும் கர்ப்பச் சின்னங்கள் காணப்பட்டன.

இவ்விதம் புண்ணிய சகுனங்களோடு பிறந்த குழந்தைக்கு கதாதரன் என்று பெயரிட்டு சரியான வயதில் அக்ஷராப்பியாசமும் செய்தார்கள். கிராமப் பள்ளிக்கூடத்தில் எழுதப் படிக்கத் தெரிந்துகொண்டார். ஆனால் கணக்கில் மனம் செல்லவில்லை. வங்காளத்தில் விசேஷமாக உபயோகப்பட்டுவந்த கணித புத்தகங்களுக் காசிரியரான சுவங்கரி என்பவரால் தம் மனம் குழம்பியதேயொழிய வேறு பிரயோசனமில்லையென்று இவர் பிற்காலத்தில் சொல்வதுண்டு. ஆனாலும்

சில விஷயங்களில் விசேஷமான பயிற்சியை யடைந் திருந்தார். கிராமங்களில் நடக்கும் தெருக்கூத்துக்களி லும் மற்றக்காலங்களிலும் வரும் ஆட்டக்காரர்கள் இராமாயணம், பாகவதம் முதலிய இதிகாச புராணக் கதைகளை நடித்துக் காண்பிப்பதை ஊக்கமாகக் கவனி த்து அவர்கள் பாடும் பாடல்களையெல்லாம் மிகுந்த உருக்கத்துடன் பாடுவார். அவர்களைப்போல் நடிக்கவும் செய்வார். இப்படி யொருநாள் தாம் ராதையாக நடிக் கும்பொழுது பிரேமை மிகுதியால் ஒரு ஜோதியைக் கண்டு மூர்ச்சித்துவிழ,கூட நடித்துவந்த சிறுவர்களெல் லாம் பயந்து ஆட்டத்தை நிறுத்தினார்கள். பிற்காலத் தில் இவரிடம் விசேஷமாகக் காணப்பட்ட சமாதி நிலை யின் முதற்சின்ன மிதுவென்று அறியாத அவ்வூரார் கதாதரனுக்குக் காக்காய் வலிப்பு வந்துவிட்டதென்று நினைத்தார்கள்.

இவர் பள்ளிக்கூடத்திலும் பிள்ளைகளைச் சேர்த் துக்கொண்டு பாடுவதும் நடிப்பதும் உண்டு. இவ ருக்குப் பாடத்தெரியு மென்றுகேட்ட உபாத்தியாயர் ஒருநாள் பள்ளிக்கூடம் முடிந்ததும் இவரைப் பாடச் சொல்லிக் கேட்டு அவரது இனிய குரலையும், பாடும் உருக்கத்தையும் கண்டு வியந்து, அன்றுமுதல் இவர் பாட்டைப் பள்ளிக்கூடத்தின் கடைசி வேலையாக வைத் துக்கொண்டு, அவரிடம் மிக அன்பு பாராட்டி வந்தார். அக்காலத்தில் வங்காளத்துப் பள்ளிக்கூடங்களில் கற் பித்துவந்த முதற்பாட புஸ்தகத்தில் பிரகலாதன் கதை முதலியன செய்யுளிலிருந்தன. இவற்றை இவர் வெகு உருக்கத்துடன் பாடுவார். இவர் மிகவும் இனிய குர

லுடன் மிக வசீகரமான ரூபமும் வாய்ந்தவரானதால் அவ்வூரிலிருந்த யாவரும் இவரைத் தங்கள் வீட்டிற் கழைத்துக்கொண்டு போய்ப் பாடச் சொல்வார்கள்.

இவருக்கு ஏழு வயதானதும் இவர் பிதா பரலோகத்தையடைய, இவர் மூத்த தமையனை ராமகுமாரர் தலையில் குடும்பபாரம் ஏற்றது. ஆயினும் கதாதரருடைய ஜனனத்தின் பிறகு குடும்பத்திற்கு யாதொரு குறைவும் இல்லாதிருந்ததினால் குடும்ப பாரம் சிரமமில்லாதிருந்ததோடு, கதாதரர் பேரில் எல்லாருக்கும் விசேஷப் பிரியமும் மரியாதையும் இருந்தன. ஒரு வருஷத்திற்கெல்லாம் இவருக்கு உபநயனம் நிச்சயமாகி, பிரம்மோபதேசமானதும் குருகுலவாசம் செய்து பிக்ஷையெடுத்துண்ணும் பழைய பிராம்மண ஆசாரத்தைக் குறிப்பிக்கும் வழக்கப்படி, நீ யாரிடம் முதற் பிக்ஷை வாங்குவாயென்று இவரைக் கேட்டபொழுது தம் தாயாரின் தோழியும் கடவுட் பக்தியுடையவளும் தம்மிடம் அன்பினளுமான தனம் என்னும் கொல்லமாதைக் குறிப்பிட்டார். சீலமமைந்த பிராம்மணஸ்திரீயை வரிக்கவேண்டுவதாயிருக்க, இதுவரையில் வைதிக சிரேஷ்டர்களாயிருந்த தங்கள் குடும்பத்துச் சிறுவன் ஒரு சூத்திரஸ்திரீயை வரித்ததைப்பார்த்துத் தமையன்மாரும் மற்றவரும் இவரைக்கடிந்து எண்ணத்தை மாற்ற முயன்றார்கள். இவர் ஒரே பிடிவாதமாய் தனம் தான் தமக்குப் பிக்ஷையிடவேண்டு மென்று சாதித்து, ஒரு அறைக்குள் படுத்துக்கொண்டு ஒருநாள் முழுவதும் சாப்பிடாமலிருக்க, அவர் இளையதமையன் கடைசியாக இவரிஷ்டப்படியே நடக்கட்டுமென்று ஒப்

புக்கொண்டார். இவ்விதம் ஜாதி வித்தியாசம் பாராமல் அன்பும் சீலமும் நிறைந்தவிடத்திலேயே பிரியம் வைக்கும் இவரது பிற்காலத்தன்மை இளமைப்பருவத்திலேயே விசேஷமாகத் தோன்றிற்று.

பாட்டில் இவருக்கிருந்த திறமையோடு, நடிக்கும் திறமையும் விசேஷமாகவிருந்தது. பெண்போல் உடுத்திக்கொண்டு பேசினாரானால் யாவரும் பெண்ணென்றே கொள்வார்கள். பெண் உடையை நீக்கிச் சுயரூபத்தைக் காட்ட, மிகவும் ஆச்சரியமடைவார்கள்.

மேலும் இவ்வயதில் இவர் களிமண்ணினால் அழகான பிரதிமைகள் செய்வார். அவற்றைச் சந்தையில் விற்று அப்பணத்தைக் கொண்டு தம் சிநேகிதர்களுக்கு விருந்தளிப்பார். இதில் அவருக்கிருந்த திறமையை மெச்சித் தொழிலாளிகளும் தங்கள்வேலைகளைக் குறித்து இவர் அபிப்பிராயத்தை நாடுவார்கள்.

எழுதப்படிக்கத் தெரிந்துகொண்டதற்குமேல் கல்வி கற்றுக் கொள்ளாதபோதிலும் முன் சொன்னவைகளால் அக்கிராமத்தார் எல்லோருடைய அன்பையும் அவர் கவர்ந்தார்.

அவ்வூர்ப் பிரபுக்களின் வீட்டிற்குவரும் வித்துவான்களும் இவர் புத்திசாலித்தனத்தைப் பார்த்து வியந்தார்கள். அவ்வூரிலிருந்த தாழ்ந்த குலத்தினனை சீனிவாஸன் என்னும் ஒரு சங்குவளை வியாபாரி இவரை ஈசுவர அவதாரமென்று நினைத்து ஊருக்கு வெளியில் இரகசியமாக அழைத்துச்சென்று புஷ்பங்கள் மிட்டாய்கள் முதலியன கொடுத்து கண்ணீர் பெருக வணங்கினன்.

இவர் கிராமப் பள்ளிக்கூடத்தை விட்டதும், வீட்டிலிருந்த ரகுவீரரென்னும் பெயர்பூண்ட ஸ்ரீ ராம மூர்த்தியைத் தினசரி பூஜிக்கும் கடமை இவருக்கு ஏற்பட்டது. காலையிலெழுந்ததும் பகவந்நாம ஸங்கீர்த்தனத்துடன் மடியுடுத்து புஷ்பங்கொய்து ஸ்நாநமும் ஸந்தியாவந்தனமும் செய்து பூஜைக்கு உட்காருவர். புராணம் வாசிக்கும் இடங்களுக்கு ஊக்கத்துடன் சென்று கேட்பதனால், இராமாயணம், மஹாபாரதம், பாகவதம் முதலான புராண இதிகாசங்களை நன்கறிந்தார். எழுதப்படிக்கும் சாதாரணக் கல்வியில் இவர் பாண்டித்தியம் அடையவில்லை. இவர் தமது பதினேமூவது வயதில் கிருத்திவாஸர் என்பவர் செய்த வங்காள ராமாயணத்தின் யுத்தகாண்டத்தைப் பார்த்து எழுதியிருக்கிறார். இக்கையெழுத்துப் பிரதி பேலூர்மடத்தில் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. அதில், அஃது எழுதி முடிந்த காலம் 1256௵ ஆஷாடம் 19௳ என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் சிறுவர்களின் உருண்ட பெரிய எழுத்தில் எழுதப்பட்டு, எழுத்துப் பிழைகள் நிறைந்திருக்கிறது.

இவ்வயதில் இவர் திடசரீரியாயிருந்தார். கண்டோர்வியக்கும்படித் தம் சரீரத்தை எவ்விதமும் வளைத்துத் திருப்பக்கூடும். ஹடயோகிகள் அடையச் சிரமப்படும் எண்பதுவகை யாஸனங்களில் பெரும்பாலனவற்றை இவர் எளிதில் கொள்ள வல்லவர்.

பத்தொன்பதாவது வயதில் கல்கத்தாவிற்குச் சென்று, ஜாமாபுகூர் என்ற இடத்தில் வசித்தார். தமையனை, ராமகுமாரர் ஜாமாபுகூரில் ஒரு தர்மபாடசாலை

வைத்திருந்தார். கதாதரரைக் கல்கத்தாவுக்கு அழைப்பித்த காரணம், அவர் ஸம்ஸ்கிருதக் கல்வி பயிலுவதற்கும் குடும்ப சம்ரக்ஷணைக்குக் கொஞ்சம் உதவி செய்யவுமே. இவரும் தமையன் சொல்லுக்கிணங்கிச் சில பிரபுக்களின் வீடுகளில் பூசைசெய்ய ஒப்புக்கொண்டு ஸம்ஸ்கிருத வியாகரணமும் படிக்க ஆரம்பித்தார். இவர் பூஜைசெய்துவந்த வீடுகளிலுள்ளவர்கள், முக்கியமாய் மித்ரா என்பவரின் வீட்டுப் பெண்டுகள், இவரது பக்தியுள்ள பாடல்களைக் கேட்பதில் ஆனந்தமடைந்தவர்களாய் இவரிடம் மிகவும் அன்பு பாராட்டினார்கள்.

ஆனால் இவர் சில நாளையில் ஸம்ஸ்கிருதப்படிப்பை நிறுத்தி விட்டார். படிக்க ஏற்பட்ட சமயத்தில் இவர் சும்மாயிருப்பதைப் பார்த்த ராமகுமாரர் ஏன் படிக்கவில்லையென்று கேட்க, "இந்தப் படிப்பெல்லாம் வயிறு வளர்க்கத்தானே! கூலிக்குச் சுமை எடுப்பவனும் வயிற்றை வளர்த்துக்கொள்கிறான். எனக்கு இவ்விதமான கல்வி வேண்டியதில்லை. எதையறிந்தால் சரீரம்,மனஸ், ஆத்மா இம்மூன்றும் திருப்தியடைந்து வேறு தேடமாட்டாவோ அவ்வறிவே எனக்கு வேண்டும்" என்று சொல்ல, தமையன் சிரித்து, சிறுபிள்ளைத்தனமாகப் பேசுகிறானென்று, அவர் மனதை மாற்ற முயன்றார். கதாதரர், என்ன சொல்லியும் கேளாதிருக்கவே, வாஞ்சையுள்ள தமையனதால் தொந்தரவுபண்ணமல் இஷ்டம்போ விருக்கட்டுமென்று விட்டுவிட்டார்.

அக்காலத்தில் 1853-ஞு தனவதியும் மிகப்பக்தியுள்ளவளுமான ராணி ராஷ்மணி கல்கத்தாவிலிருந்து

நாலுமைலுக் கப்பாலுள்ள தக்ஷிணேசுவரத்தில் 12 லக்ஷம்ரூபாய்செலவுசெய்து ஆலயமொன்றுகட்டி அதற்குக் கும்பாபிஷேகம் நடத்த யத்தனித்தாள். அவள் தாழ்ந்த செம்படவ ஜாதியினளானதினால் பிராம்மணர்களொருவரும் கும்பாபிஷேகம் நடத்த ஒப்புக்கொள்ளவில்லை. ராமகுமாரர், கோவிலையும் அதன் சொத்துக்களையும் தன்குருவாகிய பிராம்மணன்பேரில் எழுதிவைத்துவிட்டால், யாதொரு ஆக்ஷேபணையுமிராதென்று சொல்ல, ராணி ராஷ்மணி சந்தோஷமாக அவ்விதமே செய்தாள். இராமகுமாரரும் கும்பாபிஷேகத்தை நடத்த ஒப்புக்கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமையனுடன் கும்பாபிஷேகத்திற்குச் சென்றார். அங்கு நடந்த சமாராதனையில் இவர் ஒருவரே பட்டினியாயிருந்தவர். சூத்திரான்னம் புசிக்கிறதாவென்று மாலையில் காலணாவுக்கு பொரிவாங்கித் தின்று பசியாறினர். ராமகுமாரர் கோவிலின் பிரதான அர்ச்சக வேலையையும் ஒப்புக்கொள்ளவே, ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமையனிடம் சூத்திர சேவை ஒப்புக்கொண்டதைப்பற்றி விசனித்துப் பேசவும், ராமகுமாரர் தாம் செய்தது பிசகில்லையென்று பிரமாணங்களை எடுத்துக்காட்ட, திருப்தியடைந்தார்.

இங்கே தம் தமயனுடனிருக்கும்பொழுது, ஒருநாள் கங்கைக்கரையிலிருந்து சிறிது களிமண்ணெடுத்து அதனால் விருஷபவாகனரூடராகச் சிவ உருவமொன்றமைக்க, அதை எல்லோரும் கண்டு வியந்தார்கள். ராணி ராஷ்மணியின் மருமகனை மதுரநாத விஸ்வாஸரும் ஒருநாள் அப்பிரதிமையைக்கண்டு அதைச்

செய்தவர் யாரென்று விசாரித்தார். ஸ்ரீ ராம கிருஷ்ண ரென்று தெரிந்ததும் அவரை எவ்விதமாவது கோவில் அர்ச்சகராக்க வேண்டுமென்று சமயம் பார்த் திருந்தார்.

அப்பொழுது அக்கோவிலின் விஷ்ணு விக்ரஹத் தின் கால் அர்ச்சகனுடைய அஜாக்கிரதையினால் கொஞ் சம் உடைந்துபோக, ராணி ராஷ்மணி அதற் கென்ன செய்வதென்று கவலையுடன் பண்டிதர்களைக் கேட்டாள். எல்லோரும் அவ்விக்ரஹத்தை எறிந்துவிட்டு, வே றொன்று செய்யவேண்டியதே யென்று சொன்னார்கள். மதுரநாதர் இதைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணரைக்கேட்க, "ராணி ராஷ்மணி தன் மருமகன் ஒருவனது கால் ஒடி ந்துபோனால் என்னசெய்வாள்? அவனைத் தூரத்தள்ளி விட்டு வேறு ஒருவனைச் சேர்த்துக்கொள்வாளா? அல் லது, வைத்தியர்களைக்கொண்டு காலைச் சுகப்படுத்து வாளா?" என்று பதில் சொன்னார். ராஷ்மணி சந்தோ ஷத்துடன் இவரையே அக்காலைச் செப்பனிடச்சொல்ல, அவரும் கால் உடைந்தது சிறிதும் தோற்றாதபடி அத னைச்செப்பனிட்டார். உடனே அவரை அவ்விக்ரஹத் துக்கு அர்ச்சகராகும்படி ராணி கேட்டுக்கொண்டாள். அவர் தம் மருமகன் ஹிருதயரும் தம் கூடக் கோவிலில் வசிக்கும்படி அநுமதிகொடுத்தால் ஒப்புக்கொள்வதா கக் கூறினார். அப்படியே அநுமதி கொடுத்து ஹிரு தயரைக் காளிதேவிக்கு உபபூஜகராகச் செய்தார்கள். சிலநாளைக்கெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணரை தேவிக்கு அர்ச்சகராக்கினார்கள்.

இக்காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மனது ஒருவிதமான மாறுதலடைந்து வந்தது. ஏற்கெனவே இவருக்கு தேவியின்பேரில் பக்தி அதிகம். பாலியத்தில் விளையாட்டாக தேவியைப் பூஜை பண்ணுவதுண்டு. உண்மையாகவே பூஜை செய்ய ஏற்படவே இவர் மனது முற்றும் அதில் அழுந்திற்று. அதிகாலையில் எழுந்து அருகிலுள்ள விசாலமான நந்தவனத்திலிருந்து திவ்வியமான புஷ்பங்களைப் பொறுக்கிக் கொய்து, தம் கையினாலேயே அழகாக மாலை தொடுத்து அம்பிகையை அலங்காரஞ் செய்வார். தாம்பூல நைவேத்தியத்திற்குப் பாக்கை வாசனை சேர்த்து நன்றாகப் பொடித்து வைப்பார். வெயில் உக்கிரமாக இருந்தால் கையில் விசிறியெடுத்து வீசிக்கொண்டே யிருப்பார். அம்பிகையின் விசேஷ பக்தரான ராமப்பிரஸாத சேனரின் பாட்டுக்களைப் பக்கத்தில் நின்று உருக்கமாகப் பாடுவார். ஒவ்வொரு சமயம் பூஜைசெய்ய ஆரம்பித்தாரானால் அதற்கு முடிவேயிராது. அப்படியே தீபாராதனைக் காலங்களில் மெய்ம்மறந்து தீபத்தைச் சுற்றிக் கொண்டே யிருப்பார்.

இவற்றையெல்லாம் கேள்விப்பட்ட சந்திரமணி தேவி மகனுக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ வென்று பயந்து உடனே விவாகம் பண்ணிவைக்கத் தீர்மானித்தாள். ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அப்பொழுது வயது இருபத்தைந்து. ஸ்ரீ சாரதாமணிதேவி என்ற ஒரு ஐந்து வயதுப்பெண்ணை இவருக்குக்கல்யாணம் செய்து வைத்தார்கள். இவர் விவாகமான சில நாளுக்கெல்லாம் திரும்பியும் தக்ஷிணேசுவரத்திற்கு வந்தார்.

இவருக்கு நாளுக்குநாள் ஈசுவரியை அடைய வேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது. 'தாயே நீஇருப்பது நிஜமா? அல்லது கவிகளின் கற்பிதமோ? உண்மையானால், ஏன் எனக்குப் பிரத்தியக்ஷமாகக் கூடாது? நீ உன் பக்தர்களுக்கு அப்படிப் பிரத்தியக்ஷமாகவில்லையா? நான் என்ன தவறுதல் செய்தேன்?' என்று கதறுவார். இவ்விதம் மனமானது எப்பொழுதும் ஒரே சிந்தையாயிருந்ததினால், இவர் முறைப்படி பூஜைசெய்ய முடியவில்லை. சில சமயங்களில் நைவேத்தியம் செய்ய மறந்துவிடுவார். சில சமயங்களில் தேவிக்காக உள்ள புஷ்பங்களைத் தம் தலைமேல் போட்டுக்கொள்வார். சில சமயம் தீபாராதனை செய்ய ஆரம்பிப்பவர் தீபத்தைச் சுற்ற மறந்துவிடுவார். இவருடைய இச்செயல்களையெல்லாம் விரோதமாக மதுரநாத விசுவாஸரிடம் கோவில் வேலைக்காரர்கள் போய்ச் சொன்னார்கள். ஆனால், இவருடைய உண்மையை அறிந்த அவர் ஒன்றும் செய்யாதிருந்தார். ஆயினும், இவ்வித நிலைமையில் அவரை இவ்வேலையில் வைத்திருப்பது முறையல்லவென்று ஹிருதயரைப் பூஜைசெய்ய ஏற்படுத்திவிட்டு இவரை இஷ்டம்போல் செய்ய விட்டுவிட்டார்கள்.

கோவிலுக்கருகில் பெரிய ஆலமரம் ஒன்றிருக்கின்றது. அது நிற்கின்றவிடம் ஒதுப்புறமாக மனித சஞ்சாரமின்றிக் காடடர்ந்து கிடந்தது. அவ்விடத்தின் பெயர் பஞ்சவடி. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்விடத்தில் தனியாக இருந்து அம்பிகையைத் தியானம் செய்யலாமென்று கருதி அங்கே துளசி முதலான செடிகளை நட்டுப் பயிரிட்டார். ஆனால் அவற்றை மாடுகள் மேய ஆரம்

பிக்கவே சுற்றி ஒரு வேலிபோட நினைத்தார். அதற்கான சாமான்கள் இல்லாமையாற் கவலையுற்று ஒருநாள் கங்காநதியைப்பார்த்து உட்கார்ந்து கொண்டிருக்கும் பொழுது பெரிய சுமையொன்று கங்கையின் அலைகளால் இவர் இருந்த பக்கத்தில் கரையில் தள்ளப்பட்டது. பக்கத்தில் இருந்த ஒரு தோட்டக்காரனைக்கொண்டு அச்சுமையைப் பிரித்துப் பார்க்கச் சொல்ல, அதில் சமநீளமான மரத்துண்டுகள், மூங்கிற்கழிகள், கயிற்றுச்சுருள் ஆகிய வேலிக்குவேண்டிய சாமான்கள் ஒரு கத்தியுள்பட இருக்கப்பார்த்து ஆச்சரியப்பட்டார். உடனே தாம் முன்னேயே துளசிநட்டுப் பயிர் பண்ணியிருந்த அவ்விடத்தைச் சுற்றி வேலிபோட ஆரம்பித்து, இவரிடம் பக்தியுள்ள அத் தோட்டக்காரன் உதவியினுல் சீக்கிரம் முடித்தார்.

இவ்விடத்தில் இவர்இராப்பகல் ஓய்வில்லாமல் உட்கார்ந்துகொண்டு லோகமாதாவைத் தியானம் செய்துகொண்டுவந்தார். சூரியன் உதிப்பதும் அஸ்தமிப்பதும் அநேக நாள் அவருக்குத் தெரியாது. நாள் முழுவதும் சென்று சாயங்காலபூஜைக்காக ஆலயத்தில் மணிகள்அடிக்கும் சப்தம் இவர் காதுக்கெட்டியதும் "தாயே! இந்த அற்ப ஆயுளில் ஒருநாள் போய்விட்டதே; நான் இன்னும் உன்னைப் பார்க்கவில்லையே! நான் என்ன தவறுதல் செய்தேன்? அதை நீ தெரிவிக்க வேண்டுவதில்லையா?" என்று பலவிதமாகக் கதறுவார். அவருக்கிருந்த ஆவலினுலும் துக்கத்தினுலும் தலையைத் தரையில் மோதிக்கொள்வார். இரத்தம் பெருகும்படி முகத்தைத் தரையில் தேய்ப்பார். அப்பொழுது அவருக்

இருந்த மனோநிலையைப் பிற்காலத்தில் விவேகாநந்த ஸ்வாமிகளுக்குப் பின்வருமாறு சொல்லி யிருக்கிறார். "குழந்தாய்! ஒரு அறையில் ஒரு பை நிறையப் பொன் னிருக்கிறதென்று வைத்துக்கொள். அடுத்த அறையில் ஒரு திருடன் இருந்தால் அவனுக்கு தூக்கம் பிடிக் குமா? ஒருநாளும் பிடிக்காது; அந்தப்பணத்தை எப்ப டிக் கைக்கொள்ளுவ தென்பதைப்பற்றி நினைத்துக் கொண்டே யிருப்பான். அதுபோல இத்தோற்றங் களுக்குப் பின்பாக ஒரு நித்தியவஸ்து உண்டென்றும், அது இவ்வுலக இன்பங்களையெல்லாம் மங்கும்படிசெய் யும் பரமானந்தத்தை யுடையதென்றும் அறிந்த ஒரு வன் அதையடையும்வரை சும்மாவிருப்பானா? ஒரு நிமிஷமேனும் அதற்காகப் பிரயத்தினஞ் செய்யாம லிருப்பானா? ஒருபொழுது மிரான். ஆசையினால் பித் துப்பிடித்திடுவான்."

இவ்வித தெய்வப்பித்து இவரைப் பிடித்தது. இவ்விதப் பைத்தியத்திலிருந்தே இவ்வுலகைச் சீர்திருத் திய சக்திகளெல்லாம் வந்தன. இவ்விதப் பைத்தியத்தி லிருந்தே இனிமேலும் சக்திகள் உலகைச் சீர்திருத்த வரப்போகின்றன. அக்காலத்தில் அவருக்குப் படிப் பிப்பார் எவரும் இல்லை. பக்கத்திலுள்ளவர்களெல் லாம் அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதென்பதை மட்டும் படிப்பித்தார்கள். ஆகாரம் நித்திரையென்பவை கிடையா. இவருடைய தமையன் ராமகுமாரரும் அப் பொழுது இறந்துபோய்விட்டார். மற்றொரு தமையன் ஊரில் காரியங்களைப் பார்த்துக்கொண் டிருந்தார். இவ ருடைய மருமகனான ஹிருதயர் கூடவிருந்து கஷ்டப்

பட்டுச் சிறிது ஆகாரம் ஊட்டுவார். சிலநாள் அதுவும் சாத்தியமில்லாமல் போய்விடும். ஏனெனில், நாள்கணக் காய்ப் பிரக்ஞை யற்றிருப்பார். ஒருநாள் தம்முள் ளிருந்த ஆவல்தாங்கமாட்டாமல் தேவிஆலயத்திற்குள் சென்று, அங்கே தொங்கவிட்டிருந்த வாளை எடுத்து, அவள் நிஜரூபதரிசனத்தை யடையாவிடில் உயிரை மாய்த்துக் கொள்வதாக ஓங்கவும், ஜகன்மாதாவான தேவி தன் திவ்விய ரூபத்தைக் காண்பித்து, 'குழந் தாய், விசனப்படாதே. உனக்கு வேண்டும் போதெல் லாம் நான் உன்னிடம் வருகிறேன்' என்று மதுர வசனங்களால் தேற்றினள். அப்பொழுதுதான் அவ ரது மனத்தின் குழப்பம் அடங்கிற்று.

ஒருசமயம் ஈசுவரியைச் சீதாப்பிராட்டியாகத் தியானத்தில் பார்த்ததாகவும் பிராட்டியார் புன்சிரிப் புடன் இவர்முன் தோன்றி, 'உனக்கு என்ன வேணும் கேள்' என்று கேட்க, லோகமாதாவான பிராட்டியின் திருவடிகளில் அன்பொன்றே தமக்கு வேண்டுமென் றுரைக்க, பிராட்டியார் சந்தோஷமடைந்து இவர்க்குள் ளேயே மறைந்ததாகவும், இவர் பின்னால் சொல்லியிருக் கிறார். பிற்காலத்தில் வியாதியினால் பீடிக்கப்பட்டு மெலிந்திருந்த தம் சரீரத்தைப் பார்த்து, மிகுந்த கஷ் டங்களை அநுபவித்த சீதாப்பிராட்டியைத் தாம் முத லில் தரிசனஞ் செய்ததனாலேயே தமக்கும் இவ்விதம் நேரிட்டதோ என்றும் சொல்லியிருக்கிறார். இவர் பிரக்ஞையற்றிருக்கும் நேரங்களில் ஏதோ தெய்வங் களைக்காண்பதுபோற் பேசுவதுண்டு. ஜகன்மாதாவே இவருக்குக் குருவாகவிருந்து சகலவிதமான ரகசியங்

களையும் காண்பித்துக் கொடுத்தாள். எப்பொழுதும் அம்பிகையினுடைய சரணாரவிந்தங்களிலேயே லயித்த இவருள்ளம் நாட்கணக்காக உலகஸ்மரணைக்கு வாராமலிருக்கும். அதனால் உண்டாகும் ஆகாரக் குறைவினாலும், பக்தியினது தாபத்தினாலுண்டான உஷ்ணத்தினாலும், சரீரம் மிகமெலிந்து, தலை சடைபிடித்து, அவருடைய அழகான முகம், உள்ளிருந்த சின்மயத்தினால் தேஜஸுடன் பிரகாசித்தபோதிலும் மெலிந்துவாடிப் பார்க்கப் பரிதாபத்தை உண்டாக்கியது.

அக்காலத்தில் மிகுந்த அழகினளாய், சகல சாஸ்திர வல்லமை யுள்ளவளான பிராம்மண சன்னியாசினியாகிய பைரவி ஒருவள் அங்கு வந்தனள். அவளிடமிருந்த பரிசுத்தம் கண்டோர் வணங்கும்படி பரிமளம் வீசியது. அவள் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நிலைமையைப் பற்றிக் கேள்விப்பட்டதும், அதன் நிஜத்தை யறிந்து உடனே அவரிடம் சென்றாள். அவரைப் பார்த்து 'குழந்தாய், உன்னைப்போல் பைத்தியம் பிடித்தவனுடைய பாக்கியமே பாக்கியம். உலகமெல்லாம் பைத்தியம் பிடித்தேயலைகிறது. சிலர் பணத்திற்காகவும் சிலர் சிற்றின்பங்களுக்காகவும், சிலர் கீர்த்திக்காகவும் இன்னும் நூற்றுக்கணக்கான அநித்திய விஷயங்களுக்காகவும் பித்துப்பிடித்தலைகிறார்கள். பகவானுக்காகப் பித்துப்பிடித் தலைபவர் எவ்வளவுசொற்பம்! அப்படிப் பைத்தியங் கொண்டவன் பாக்கியவானே' என்று சொல்லி, சில மூலிகைகளினால் அவரது தாபத்தைத் தணித்தாள்.

இவருக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரக்ஞை உண்டாகவே, தாம் ஈசுவரியின் சந்நிதானத்திலிருந்து

பிரிந்ததைப்பற்றி வருந்தினர். வேண்டும்பொழுது அச்சமாதிநிலேக்குச் செல்லலாமென்று அப்பிராம்மணி தைரியஞ் சொல்லத் தேறி, அவளிடத்தில் தந்திர முறைகளேயும், யோகமுறைகளேயும், நம்மதத்தின் அநேக பிரிவுகளின் இரகசியங்களேயும் கற்றுக்கொண்டார். அவர் பிற்காலத்தில் அவளே சாக்ஷாத் சரஸ்வதியின் அவதாரம் என்று சொல்வதுண்டு. அம்மாதின் உதவிபெற்று அவள் கற்பித்த முறைப்படியெல்லாம் சாதனேசெய்து அநுபவசித்தியடைந்தார். அவருக்கு அக்காலத்தில் அகோரமான பசி உண்டாயிற்று. அந்த அம்மாள், அநேகவிதமான பக்ஷியங்களேயெல்லாம் அவர் முன்னிலேயில் எப்பொழுதும் ஏராளமாக வைத்து அவருடைய பசியை ஆற்றினள். அம்மாது சிரோமணி சிலவருஷகாலம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பக்கத்திலிருந்து தனக்குத் தெரிந்ததையெல்லாம் அவருக்குக் கற்பித்தானவுடன் அவ்விடம் விட்டு நீங்கினள்.

இதன் பிறகு தோதாபுரி என்ற ஒரு அவதூத சந்நியாசி அங்குவந்தார். இவரை ஸ்ரீ ராமகிருஷ்ணர், நியங்டா என்று சொல்வார். அதாவது நிர்வாணமாயிருப்பவர். இவர் ஆஜாநுபாஹு; திடசரீரம் வாய்ந்தவர். ஓரிடத்திலும் மூன்றிரவிற்கு மேல் தங்குவதில்லே. வஸ்திரம் என்பது கிடையாது. உலகமெல்லாம் மித்தையென்று தாம் கொண்டிருந்த மதத்தை அநுசரித்து, வெயில் மழை குளிர் என்பதைச் சற்றும் பாராட்டாது எப்பொழுதும் வெளியிலேயே தங்குவார். இவ்வளவுக்கும், இவருடைய காலடி பட்டாலே தம் அரண்மனே சுத்தமாகித் தாங்களும் கிரு

தார்த்தர்களாவார்களென்று எத்தனையோ பிரபுக்களும் ராஜாக்களும் மதித்தார்கள். 'வங்காளத்தில் ஒரு ஜீவனுக்கு உபகாரம் செய்' என்று மனதில் ஒருஅசரீரி வாக்கு சொல்ல, கங்காஸாகரம் என்ற புண்ணியஸ்தலத்தை நோக்கிச் சென்ற இவர், தற்செயலாகத் தக்ஷிணேசுவரத்தில் இறங்கினர். அங்கே, ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்ததும் உபதேசத்திற்குரியவர் இவரேயென்றறிந்து நிர்க்குணப் பிரம்மோபதேசம் செய்கிறேனென்று அவருக்குரைத்தார். இதுவரையில் ஸ்ரீராமகிருஷ்ணர் ஜகன்மாதாவாகிய ஸகுணப் பிரம்மத்தின் உபாசனையையே அநுசரித்தவர். தமக்குப் பிரத்தியக்ஷமான ஜகன்மாதாவைக்கேட்டு அநுமதிவாங்கிக் கொண்டு தோதாபுரியிடம் உபதேசம் பெற்றுக்கொண்டார். குரு சொன்னபிரகாரம் தியானம் செய்து மூன்று தினங்களில் நிர்க்குணப் பிரம்மாநுபவமாகிற நிர்விகல்ப ஸமாதியை அடைந்தார். இதனால், தோதாபுரி தாம் நாற்பது வருஷம் சிரமப்பட்டு அடைந்ததை இவர் மூன்று நாட்களில் எப்படி அடையக்கூடும் என்ற சந்தேகத்துடன் இவரைச் சில கேள்விகள் கேட்க, அதற்கு அவர் கொடுத்த விடைகளினால் சமாதானமடைந்து ஆச்சரியப்பட்டார். எங்கும் மூன்றுநாளைக்கு மேல் தங்காத தோதாபுரி, அதன்மேல் அங்கே அநேக மாதகாலம் வசித்தார். அவர் ராமகிருஷ்ணருக்கு சந்நியாச ஆசிரமம் கொடுத்தார்.

தோதாபுரி ஹோமம் செய்த இடத்திலிருந்து ஒருநாள் ஒரு இழிகுலத்தான் அக்கினியெடுத்து சுருட்டுப் பற்றவைக்க, அவருக்கு மிகுந்த கோபம்

வந்துவிட்டது. அப்பொழுது பக்கத்திலிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரைப் பார்த்து 'ஸ்வாமி! சர்வமும் பிரம்மமென்று அறிந்திருக்கிற தாங்கள் இவ்வாறு கோபங்கொள்ளலாமா! சுருட்டுப் பற்றவைத்தவனும், சுருட்டும், அக்கினியும் பிரம்மமாயிற்றே' என, தோதாபுரி உடனே கோபம் தணிந்து ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து, 'அப்பா நீ என் சிஷ்யனல்ல; இனிமேல் எனது நண்பன்' என்றார். பிற்பாடு ஸகுணப்பிரம்மத்தின் உண்மையை யறியாது ஜகன்மாதாவிடத்தில் நம்பிக்கையற்றிருந்த தோதாபுரிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜகன்மாதாவைப் பிரத்தியக்ஷமாகக் காண்பித்துக் குருவானார்.

பிறகு ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்ரீராமசந்திரரைப் பார்க்கவேணுமென்று ஆசைகொண்டார். தன்னை ஹநுமானாகப் பாவித்துக்கொண்டு இராமசந்திரரை நினைத்துருகினார்; ராமசந்திர மூர்த்தியை வழிபட்டு அம்மூர்த்தியைப் பிரத்தியக்ஷத்தில் அநுபவித்த ஒரு மஹான் அப்பொழுது அவ்விடம் வந்து இவருக்கு அம்மூர்த்தியைக் காண்பித்தார். இவ்விதம் நாம் வணங்கும் ஒவ்வொரு மூர்த்தியும் உண்மையென்று அனுபவத்தில் அறிந்து கொண்டார்.

இவருக்குப் பெண்ணாசை பொன்னாசை இவ்விரண்டும் சுபாவத்திலேயே இல்லாதிருந்தது. அப்படி யிருந்தும் பொன்னுக்கும் மண்ணுக்கும் தோன்றும் வித்தியாசத்தைப் போக்கடித்துக்கொள்ள இவர் செய்த சாதனைகள் வியப்பைத் தருவன. ஒரு கையில் பொன்னும் மற்றொரு கையில் மண்ணும் எடுத்துக்

கொண்டு, 'இது மண், இது பொன்; மண்ணால் பாண்டங்கள் செய்கிறார்கள், வீடு கட்டுகிறார்கள்; மண்ணிலிருந்து உணவுக்குரிய தானியம் காய்கறி முதலியவை உண்டாகின்றன—பொன்னால் வஸ்திரம் முதலியவை வாங்கலாம். என்ன வித்தியாசம்? இரண்டும் மனிதனுக்கு உபயோகமுள்ளவை' என்று இவ்விதம் தியானித்து, இரண்டின் வித்தியாசத்தையும் மனத்தினின்றும் போக்கிப் பின் இரண்டையும் கங்கையில் எறிந்து விடுவார்.

அவ்வாறே ஆத்மாவுக்கு ஆண் பெண் என்ற வித்தியாச மில்லாததால், தாம் ஆண் என்ற எண்ணத்தைப் போக்கடிக்க, இவர் கொஞ்ச நாள் பெண்போல் உடுத்திக்கொண்டும், நடித்தும், பெண்கள் கூடவே பழகியும் வந்தார். பெண்களும் எள்ளளவும் வேற்றுமை காணாமல் அவரைப் பெண்ணாகவே பாவித்து அன்புடன் பழகி வந்தனர். தம்மை ராதையாகப் பாவித்துக்கொண்டு கிருஷ்ணபரமாத்மாவை நினைந்துருகிப் பாடி, அவரைத் தரிசித்து ஆநந்தித்தார். இவ்விதம் ஸ்திரீ புருஷ வித்தியாசத்தை ஜெயித்தார்.

ஆத்மாவுக்கு ஜாதிபேத மில்லையாதலால், தாம் உயர்குலத்தினர் என்ற எண்ணம்போக, ஒரு புலையனுடைய குடிசைக்கு, அவனும் அவன் பெண்டுகளும் வேலைக்காக வெளியே போயிருக்கும் சமயம் பார்த்துச் சென்று அவனுடைய கசுமாலம் முதலிய அசுத்தமான இடங்களைப் பெருக்கிச் சுத்தம் செய்து வந்தார்.

இவ்வித ஸாதனைகளினால் தம் மனதையும் சரீரத்தையும் தம் வழிப்படுத்தினார். மாசற்ற பரிசுத்த

நிலையை அவை அடைந்தன. அதனால் அவரறியாமல் பணம் அவரது சரீரத்திற் பட்டாலும், அது சிலிர்த்து அளவற்ற வேதனையை அடையும். எந்த ஸ்திரீயைக் கண்டாலும் 'தாயே' என்று நமஸ்கரிப்பார். சண்டாளர்களைப் பார்த்தால் பகவான் இவ்விதம் விளையாடுகிறார் என்பார்.

இந்நிலையில் இவர் மனைவியாகிய ஸ்ரீ சாரதாமணி தேவி இங்கு வந்தாள். ஈசுவரியின் நினைவிலேயே சதா மூழ்கியிருந்த அவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதென்றும் சந்நியாசியாய்ப் போய்விட்டாரென்றும் பலபலவிதமாக ஊரார் சொல்லக்கேட்டு, நேராகப்போய்ப் பார்க்கலாமென்று கால் நடையாக வந்தாள். வந்து பார்த்துச் சந்தேகந் தெளிந்தாள். ஊரார் கூற்றுக் காதாரமில்லை யென்றும் கணவர் முன்போலவே தம்மிடம் அன்பு வைத்துள்ளார் என்றும் உணர்ந்து ஆனந்தித்தாள். தெய்விக வாழ்க்கையைக் கொண்ட கணவருக்குத் தொண்டு செய்யும் பாக்கியம் கிடைத்ததே என்று மகிழ்ந்தாள். ஸ்ரீராமகிருஷ்ணர் தேவியைச் சோதிக்க எண்ணி ஒருநாள், 'நான் ஸ்திரீகளையெல்லாம் தாயாக பாவிக்கக் கற்றுக்கொண்டேன்; ஈசுவரியின் ரூபங்களென்றே கருதுகின்றேன்; எனவே, லௌகிகவாழ்க்கையை வாழ உன்னூற் கூடாதே; நீ இங்கு வந்தது ஏனோ?' என்று வினவினார். இதைக் கேட்டதும் தேவியானவள், 'நான் தங்களைக் கடவுளிடமிருந்து திருப்பவரவில்லை. தங்களது மேன்மையான நோக்கத்தையும் பதவியையும் அறிந்துகொண்டேன். என்னை ஒரு சிஷ்யையாக அங்கீகரித்துக் கடவுளிடம்

சேர்ப்பிக்கவேண்டும்' என்றாள். அப்படியே அன்று முதல் பிரதம சிஷ்யையாகவிருந்து அவருக்குத் தொண்டு புரிந்துவந்தாள். பிற்காலம் அவரிடம் வந்த சிஷ்யர்களுக்கெல்லாம் தாய்போலிருந்தாள்.

இவர் ஹிந்து மதத்தின் உண்மைகளையெல்லாம் அநுபவத்தில் தெரிந்துகொண்டு அப்படியே மற்ற மதங்களையும் பரீக்ஷித்தறிய விரும்பினார். ஒரு மகமதிய குருவையடைந்து அவர் சொல்லியபடியெல்லாம் அப்பியசித்து, கடவுளை யடைந்து, அம்மதமும் உண்மையே யென்று தெரிந்துகொண்டார். அப்படியே கிறிஸ்து மதத்தின் உண்மையையும் தெரிந்துகொண்டார்.

இவ்விதம் பற்பல வித்தியாசங்களை வெளிப்படையாக உடைய மதங்களெல்லாம் ஒரு கடவுளையே நாடுகின்றனவென்றும், அக்கடவுளே தேசகால வித்தியாசங்களினால் பாதிக்கப்பட்ட அன்பர்களுக்கு அவரவர்க்குத் தக்க ரூபத்துடன் கிருபை செய்தருளுகிறார் என்றும் அநுபவத்தில் தெரிந்துகொண்ட பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் அநுபவ பூர்வமான ஞானத்தை உலகுக்குப் புகட்டத் தயாராயிருந்தார். ஆயினும் உலகு தயாராகவில்லை. அப்பொழுது காளி கோவிலில் சென்று 'தாயே, எனக்குத்தெரிந்ததை யாருக்குச் சொல்வது? உலகத்தவரெல்லாம் பெண் பொன் ஆகிய இரண்டிலேயே கருத்தாயிருக்கிறார்களே யொழிய உன்னை நாடுகிறார்களில்லையே' என்று கதறினார். அப்பொழுது ஈசுவரி, 'அப்பா, கொஞ்சம் பொறு; நீ அடைந்த ஞானத்தை உலகமெல்லாம் பரவச்செய்யும் சிஷ்யர்கள் வருகிறார்கள்' என்று சமாதானப்படுத்தினாள்.

இவரிடமிருந்து ஞானமும் தூய்மையும் பரிமளம் வீச, மலர்ந்த புஷ்பத்திற்கு வண்டுகள் வருவதுபோல் இவரை நாடி அநேகர் வந்தார்கள். இவரும் பக்தியி லும் ஞானத்திலும் சிறந்தவர் யாராயினும் இருப்பதாகக் கேள்விப்பட்டால் அவர்களை நாடித் தாமே செல்வார். அப்படிப் பிரம்மசமாஜத் தலைவரான கேசவ சந்திர சேனருடைய பக்தியையும் வாக்சாதுர்யத்தையும் பற்றிக் கேள்வியுற்று, அவரைப் பார்க்கவேண்டுமென்று ஆவல்கொண்டார். கேசவசந்திர சேனர் பக்கத்திலுள்ள ஒரு தோட்டத்தில் சிஷ்யர்களுடன் விளையாட்டாக வந்திருக்கிறரென்று கேள்விப்பட்டு அங்கே சென்றார். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் புதிதாக யாராவது கியாதிபெற்ற மனிதர்களைப் பார்த்தால் சமாதியடைவது வழக்கம். அவ்விதமே கேசவசேனரைப் பார்த்ததும் சமாதியை யடைந்து கொஞ்சம் தெளிந்ததும், 'சரிதான் தெரிந்தது. உமக்கு வால் போய்விட்டது' என்றார். ஒரே வஸ்திரத்தை அரையில் கட்டி உடம்பின்மேலும் போட்டுக்கொண்டிருக்கும் இவர் வேஷத்தைப் பார்த்த கேசவசேனருடைய சிஷ்யர்கள் மேற்சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் ஏதோ பயித்தியக்காரனென்று சிரித்தார்கள். வைராகிகளிடமிருந்தும் கற்றுக்கொள்ளத் தயாராயிருந்த கேசவ சேனர் அவர்களை யமர்த்தி, பகவானைப்பார்த்து, 'தாங்கள் சொன்னதின் கருத்துப் புலப்படவில்லை; விளங்கச் சொல்லவேண்டும்' என்றார். அதற்குப் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் 'தவளைக் குஞ்சுகள் வாலிருக்கும் வரையில் ஜலத்திலேதான் இருக்கவேண்டும். கரை

யில் வந்தால் இறந்துபோம். வால் போய்விட்டதானல் கரையிலும் ஜலத்திலும் இருக்கலாம். அதுபோல் மனிதர்களுக்கு, உண்மையான ஞானமும் பக்தியும் ஜனித்து விட்டதானல் அவர்கள் ஸம்ஸாரத்திலிருப்பதனல் பாதகமில்லை' என்ருர். இதைக்கேட்டதும் எல்லோரும் மௌனத்தையும் ஆச்சரியத்தையும் அடைந்தார்கள். அதுமுதல் கேசவசேனர் ராமகிருஷ்ணரை அடிக்கடி தக்ஷிணேசுவர ஆலயத்தில் வந்து கண்டுகொண்டார். பிற்பாடு தாம் பதிப்பித்துவந்த பத்திரிகையில் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றியும் அவரது உபதேசங்களைப்பற்றியும் ஒரு வியாசமெழுதிஞர். இதஞல் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பேர் இன்னும்பரவிற்று. பிற்காலத்தில் கேசவசேனர், தம் கொள்கைகளை ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசத்திற்குத் தக்கபடி சிறிது மாறுதல்செய்து கடவுளைத் தாயாராக வழிபட ஆரம்பித்தார். விக்கிரஹாராதனை கூடாதென்ற பிரம்மசமாஜக் கொள்கைக்கு விரோதமாக தக்ஷிணேசுவரத்தில் கோயில் கொண்ட ஜகதீசுவரியை அவர் வணங்கினதாகக் கூடச் சொல்வார்கள்.

பின்பு கேசவசேனருடைய ஸகாக்களாகிய பிரதாப் சந்திர மஜும்தாரும், விஜயகிருஷ்ண கோஸ்வாமியும் வந்தார்கள். ஆரியஸமாஜத் தலைவரான ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதியும் வந்து தரிசித்தார். கடைசியாக விவேகானந்த சுவாமிகள் என்று உலகமெங்கும் புகழ் பெற்ற நரேந்திரநாத் தத்தரும், இன்னும் ராக்கால் (ஸ்வாமி பிரம்மானந்தர்), பாபுராம் (ஸ்வாமி பிரேமாநந்தர்), அநுமானுடைய அம்சமாகப் பாவிக்கப்பட்ட சசி

(ராமகிருஷ்ணானந்தர்), ஸ்வாமி சிவானந்தர், சாரதானந்தர், துரியானந்தர் முதலான அநேகர் பகவானையடைந்து சந்நியாசி யாசிரமம் பெற்று அவரது கிருபையினால் அவர் உபதேசங்களை உலகமெங்கும் பரவச்செய்தார்கள்.

மற்றும் பகவானையடைந்துப் பவித்திரர்களான கிரஹஸ்த சிஷ்யர்களில் முக்கியமானவர்களின் பெயரை இங்குச்சொல்லவேண்டும்:—ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அந்திய காலத்திலும் அதன் பின்னும், அவர் சந்நியாசி சிஷ்யர்களைக் காப்பாற்றிவந்த ஸுரேந்திரநாத மித்திரர், சகலத்தையும் ஈசுவர ரூபமாகப் பாவித்து, பாம்பு வந்தபொழுதும் 'தாயே! உன் இருப்பிடம்போ' என்று வேண்டிக்கொண்ட நாகமஹாசயர், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் சிஷ்யக் கூட்டங்களுடன் ஆனந்தமாகக் காலம்போக்கும்படித் தம் வீட்டை எப்பொழுதும் திறந்து வைத்திருந்த ஜமீன்தாரான பலராம் போஸ், அதிவிடனாயிருந்து பகவானுடைய கிருபையினால் மஹா பக்தனை கிரீஷ் சந்திரகோஷ் என்னும் பெயர் பெற்ற வங்காள நாடகக்கவி, ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதத்தை வங்காளத்திலும் ஆங்கிலத்திலும் எழுதிய மஹேந்திர நாதகுப்தர். இவர் தம் வினயத்தினாலும், தாம் எழுதியதெல்லாம் பகவானது அருளினாலென்ற எண்ணத்தினாலும் தம் பெயரை வெளியிடாது 'ம—' என்று மாத்திரம் வெளியிட்டிருக்கிறார்.

சதாகாலமும் இப்படித்தம்மைச் சூழ்ந்துவந்த சிஷ்யர்களுக்கும், தம்மைப் பார்க்கவந்தவர்களுக்கும் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் விடையளித்து சந்தேகங்களையெல்லாம் போக்கடித்து அவர் ஞானத்தைப் புகட்டினார்.

தக்ஷிணேசுவரம் கோயில் முற்றத்தின் வடமேற்கு மூலையில் இருக்கும் அவருடைய அறை எப்பொழுதும் திறந்திருக்கும். யார் வேண்டுமானாலும், எச்சாதியானாயினும், எம்மதத்தினனாயினும் அவரைப்போய்ப்பார்க்கலாம். வந்தவர்களுடனெல்லாம் தம் சரீர சிரமத்தைப் பாராமல் பேசிக்கொண்டிருப்பார். ஒரு சமயம் அவருக்கு வயிற்றுக்கடுப்பு கண்டு, உடம்பு எலும்பும் தோலுமாக இளைத்துப்போயிருந்தது. ஒரு டாக்டர் அவரைப் பார்க்க வந்தார். பகவான் சிஷ்யர்களுடன் பேசிக்கொண்டும், ஈசுவரனுடைய நாமத்தை மனமுருகிப் பாடிக்கொண்டும் இருந்தார். வைத்தியர் இதைப் பார்த்து, 'இதென்ன! இம்மனிதனுக்குப் பைத்தியமோ? இந்த உடம்பில் இப்படிப் பேசிக்கொண்டிருக்கிறாரே' என்று ஆச்சரியப்பட்டார்.

இவர் உபமானங்களாலும் கதைகளாலும் சமயோசிதமான உபதேசங்களைச் செய்துவந்தார். இவருடைய உபமானங்களின் அழகைச் சொல்லி முடியாது. 'எந்த விஷயத்தைச் சொன்ன போதிலும் அவர் வாயிலிருந்து வரும் வாக்கியங்கள், வைரம், சிவப்பு, பச்சை, நீலம், கோமேதகம் முதலிய ரத்தினங்களால் செய்யப்பட்ட கலிடாஸ்கோப் என்னும் கோலக்கண்ணாடி, எப்படித் திருப்பி யுதறினபோதிலும் விசித்திரமாயும், நூதனமாயும் கோலங்களைக் காட்டுவதுபோல் இருக்கின்றன' என்று ஐரோப்பிய ஸம்ஸ்கிருத பண்டிதர்களில் சிரேஷ்டரான மாக்ஸ்முல்லர் என்பவர் எழுதியிருக்கிறார்.

இதற்குச் சில உதாரணங்களை இங்கெடுத்துக் கூறலாம். ஒரு நாள் சிஷ்யர்கள் வாதம் பண்ணிக்கொண்

டிருந்தார்கள். அதில் ஈசுவரன் குணத்தோடு கூடின வரா, நிர்க்குணரா? ரூபத்துடன் கூடியவரா, அரூபியா? ஸ்தூலசரீரத்துடன் அவதாரம் செய்கிறாரா? என்ற கேள்விகளைக் குறித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். எல்லோரும் பேசி ஓய்ந்தார்கள், நரேந்திரர் கக்ஷி ஜயித் தாற்போல் தோன்றிற்று. அவருடைய சப்தம் எல்லா ருக்கும் மேல் கேட்டது. பகவான், தூரத்தில் நின்று கேட்டுக்கொண்டிருந்தவர் கொஞ்சம் சமீபம் வந்து பின் வரும் கருத்துள்ள பாடலைப் பாட ஆரம்பித்தார்:

"ஏ மனமே! இருட்டறையில் பைத்தியக்காரனைப் போல் நீயும் அந்தப் பரம்பொருளை வீணாய்த் தேடுகிறாய்.

"ஆறு சாஸ்திரங்களிலும் சென்றுபார்த்தாலும் அகப் படான். அப்படியே தந்திரங்களிலும், வேதங்களிலும். அவ னுக்குப் பிரியமான பக்தி யென்னும் தேனைக்கொண்டு போனால் வருவான்."

அவர்களுடைய வாதத்திற்குப் பதில் கிடைத்து விட்டது. அது, வாதத்தினால் அவனையடைய முடியாது; பக்தியினால் ஈசுவரனை நாடு; அவனையடைந்தால் அவ னுடைய குணம் பின்னால் உனக்குத் தெரியும் என்ப தாம்.

மற்றொரு சமயம், இப்படியே 'சாஸ்திரங்கள் உண் மையா? வேதங்கள் கடவுளிடத்திலிருந்து வந்தனவா? கடவுளின் தன்மையென்ன?' என்ற விஷயங்களைப்பற் றிப் பேசிக் களைத்தார்கள். பகவான் இவ்வாதத்தில் வெறுப்புற்று, எழுந்து தம்மறையின் தாழ்வாரத்திற்கு வந்தார். வந்ததும் அருகில் ஓடும் கங்கா நதியைப்பார்த் தார். பார்த்து இருகரைகளையும் சுட்டிக் காட்டினார்.

இதைப் பார்த்த சிஷ்யர்கள் எல்லாரும் வெளியே வந்து பகவானைச் சூழ்ந்து அவர் சுட்டிக்காட்டின விடத்தைப் பார்த்தார்கள். நதியின் இக்கரையில் சில நாய்கள் கூடி அக்கரையை நோக்கிக் குலைத்துக்கொண்டிருந்தன. அக் கரையில் சில நாய்கள் கூடியிருந்தன. ஆனால் அவைகள் இக்கரையைப் பார்க்க வில்லை. குலைக்கவும் இல்லை. அங்கே விழுந்துகிடந்த ஒரு பிராணியின் பிரேதத்தை வெகு முயற்சியுடன் தின்றுகொண்டிருந்தன. பகவானை யடையாதவர்களே இந்நாய்களைப்போல் குலைப்பார்க ளென்றும், பகவானையடைந்து அவனுடைய இனிமை யை அநுபவித்தவர்கள் பேச்சற் றிருப்பார்களென்றும், பகவானையடைய முயற்சி செய்யவேண்டுமே யொழிய வாதம் பிரயோஜனமில்லை யென்றும் இந்த உபமானத் தால் காண்பித்தார்.

ஒருநாள் ராணி ராஷ்மணியின் மருமகனான மதுர பாபு பகவானுடன் வாதஞ்செய்தார். ஈசுவரனும் பிர கிருதியின் சட்டங்களால் கட்டப்பட்டவராய் இருக்க வேண்டுமென்று மதுரபாபு சொல்ல, பகவான், 'அப்படி யல்ல, ஈசுவரன் வேண்டுமானால் பிரகிருதியை மாற்ற லாம்' என்றுசொன்னார். மதுரபாபு சமாதானமடையா மல், அங்கிருந்த செம்பருத்திச் செடியொன்றைக் காட்டி அதில் வெள்ளைப்புஷ்பம் பூக்கும்படி ஈசுவரனு லும் செய்ய முடியுமா என்று கேட்க, பகவான் 'செய்ய முடியும்' என்றார். மறுநாள் ஏதோ காரியமாக தோட் டத்துக்குச்சென்ற பகவான், ஒரு வெள்ளைப்பூவும் ஒரு சிவப்புப்பூவும் பூத்திருந்த ஒரு செம்பருத்திக் கொம்பை ஒடித்துக்கொண்டுவந்தார். மதுரபாபு, பக

வானை வணங்கி 'சுவாமி! நான் இனித் தங்களுடன் ஒரு விஷயத்தைப் பற்றி வாதம் செய்வதில்லை' என்றார்.

விவேகாநந்த ஸ்வாமிகளென்று உலகமெல்லாம் கீர்த்திபெற்ற நரேந்திர நாதர், பாலியத்தில், ஈசுவரன் இருப்பது உண்மையா என்ற சந்தேகத்தினால் வருந்தி, மதபோதகர்கள் எவர்களைக்கண்டாலும் 'நீங்கள் இவ்வளவு விமரிசையாகப் பேசும் கடவுளைப் பார்த்ததுண்டா' என்று கேட்டுவந்தார். ஒருவரும் இவருக்குச் சரியான பதில் சொல்லாததினால், தம் பந்து ஒருவரால் ஏவப்பட்டு ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்தார். வந்து, 'நீர் கடவுளைப் பார்த்ததுண்டா ?' என்று கேட்க, பகவான் 'ஆம், நான் பார்த்திருக்கிறேன். உன்னைப் பார்ப்பதை விடப் பன்மடங்கு அதிகத் தெளிவாக நான் அவரைப் பார்க்கிறேன் ; உனக்குவேண்டுமானால் காண்பிக்கிறேன்' என்றார்.

இப்படி அனுபவத்தில் கடவுளை அடைந்தவராதலால், தம் சிஷ்யர்களுக்கும் அனுபவத்தில் ஈசுவரனை அடையவேண்டுமென்று போதித்து அதற்குள்ள வழிகளையெல்லாம் காண்பித்தார். தம்மைப்பற்றி அவர்கள் மனத்திற்பட்ட சந்தேகங்களையெல்லாம் போக்கக் கூடிய எல்லாச்சோதனைகளுக்கும் உடன்பட்டார்.

பகவான் உடம்பில் தங்கம் வெள்ளி முதலியஉலோகங்கள் பட்டால் உடம்பு வலியெடுத்துச் சிலிர்த்துப் போகும் என்று பகவானிடமிருந்தே கேள்விப்பட்ட நரேந்திரர் ஒருநாள் இதைப்பரீக்ஷிக்க விரும்பி, அவர் வெளியில் போயிருக்கும்பொழுது, ஒருவரும் அறியாது ஒரு ரூபாயைப் படுக்கையில் வைத்துவிட்டார். பக

வான் அதனை அறியாது வந்து உட்காரவும், உடம்பு சிலிர்த்துக் கூச்சலுடன் படுக்கையிலிருந்து துள்ளிக் குதித்தார். இதன் காரணம் தெரியாது பக்கத்தி லுள்ளவர்கள் திகைத்தனர். படுக்கையில் பாம்பு ஏதேனும் இருக்குமோவென்று படுக்கையை யுதறவும், ரூபாய் கீழே விழுந்தது. அப்பொழுது அதைப் பார்த்துக்கொண்டிருந்த நரேந்திரர் பேசாது வெளியே சென்றுவிட்டார். இதிலிருந்து நரேந்திரரே தம்மைப் பரீக்ஷிப்பதற்கு இவ்விதம் ரூபாயை வைத்திருக்க வேண்டுமென்று பகவான் அறிந்து அதன் பொருட்டு சந்தோஷம் கொண்டார்.

ஒருசிஷ்யன், ஸ்ரீசாரதாமணி தேவியார் பகவா னது அறைக்குள் இராக்காலத்தில் சில சமயங்களில் போவதைப் பார்த்துச் சந்தேகங்கொண்டான். ஒருநாள் அத்தேவியார் போய்க்கொண்டிருக்கக்கண்டு மெதுவா கப் பின்சென்று பார்த்தான். அறை கொஞ்சம் திறந் திருந்தது. உள்ளே தீபம் எரிந்துகொண்டிருந்தது. பகவானுடைய குரல் கேட்டது. சிஷ்யன் சந்தடி செய்யாமல் மெதுவாகக் கதவின் பக்கம் சென்று ஒட் டுக்கேட்டான். பகவான், கையில் புஷ்பத்துடன் தேவியாரை ஜகதம்பிகையாகப் பாவித்து ஸ்தோத்தி ரம் பண்ணிக்கொண்டிருந்தார். சிஷ்யன் வெட்கத்துடன் அங்கிருந்து நீங்கி யோடிவிட்டான். பகவானைப் பார்க்க மனம் எழவில்லை. பகவான் சிலநாள் இச்சிஷ் யனைக் காணுமலிருக்கவே, மற்ற சிஷ்யர்களைக்கொண்டு அழைத்துவரச்சொல்லி, அவனைப்பார்த்து 'அப்பா நீ சந்தேகப்பட்டதினுல் பாதகம் ஒன்றுமில்லை. சந்

தேகத்தை உன் கண்ணால் பார்த்துத் தீர்த்துக்கொண் டாயே; அதுதான் சிலாக்கியம். இப்படி ஒவ்வொன்றை யும் சந்தேகமறப் பரிசோதிப்பாயானால் உனக்கு முக்தி நிச்சயம்' என்றார்.

தாம் ஒவ்வொன்றையும் சந்தேகமறப் பரீக்ஷித் தறிந்ததனால் மற்றவர்களுடைய சந்தேகத்தைப்பற்றி அவர் வருந்தவில்லை. இவருக்கு ஜகன்மாதா பிரத்தி யக்ஷமான பிறகு, ஒரு சந்தேகம் ஜனித்தது. 'இதெல் லாம் கேவலம் மனோகல்பிதமாயிருக்குமோ? அல்லது சொப்பனமாயிருக்குமோ?' என்று சந்தேகப்பட்டார். அந்தச் சந்தேகத்துடன் ஜகன்மாதாவைப் பார்த்து, 'நான் உன்னைப் பார்க்கிறேனென்பது வாஸ்தவமானால் ராணிராஷ்மணியின் இருபெண்களும் இன்று மத்தி யானம் என் முன்னிலையில் வரவேண்டும்' என் றார். ஆச்சரியம்! கோஷாக்களாய், சாதாரணமாய் அச்சமயத்தில் எப்பொழுதும் அக்கோவிலுக்கு வராத அப்பெண்கள் அன்று அகஸ்மாத்தாய் தக்ஷிணேசு வரம் வந்து, மரத்தடியில் இருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண ரைப்பார்த்து விசாரித்துவிட்டுப் போனார்கள். இன் னும் இவர், சந்தேகத்தை மாற்ற அம்பிகையினது விக் கிரஹத்தின் முன் பிடித்த நூலானது, மூச்சுவிட்ட காற்றினாலசைவதுபோல் அசைந்ததாகவும், விக்கிரஹம் முன் நகர்ந்து வந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. மேற்சொன்னவை சிறு பிள்ளைகளுக்காக எழுதும் கதைபோலிருக்கின்றன வென்று சிலர் புன்னகை கொள்ளலாம். ஆனால் இத்துடன், நம் கொள்கை களில் சிறிதும் நம்பிக்கையில்லாத பிரம்மஸமாஜத் தலை

வரான பிரதாபசந்திர மஜூம்தாரும், மாக்ஸ்முல்லர் துரையும், மற்றவர்களும் இவரது பெருமையைப்பற்றி எழுதியிருப்பதைப் பார்த்தால், ஆத்மாவின் அபார சக்தியையும் அச்சக்தியை வெளிக்காட்டும் வழிகளை யும்பற்றி வெகுவாய் எடுத்துப்பேசும் நம் சாஸ்திரங் களில் நம்பிக்கையுள்ள நம்போன்றவர்களுக்கு மேற் சொன்னவற்றில் அவநம்பிக்கைப் படும்படியானதொன் றுமில்லை. மாக்ஸ்முல்லருடைய அபிப்பிராயம் கொஞ் சம் முன்னமே சொன்னோம். அவர் இவரை, 'ஒரு உண்மையான மஹாத்மா' என்று அழைத்து, அப்பெ யருள்ள வியாசம் ஒன்று ஒரு பிரபலமான ஆங்கில பத்திரிகையில் எழுதினார்.

பிராதாபசந்திர மஜூம்தார் தம் சமாஜப் பத்திரி கையில் 1879-ஞ அக்டோபர்மீ இவ்விதம் எழுதினார்.

'அந்த அற்புத மனிதன் போகுமிடமெங்கும் எப்பொழுதும் அவரிடமிருந்துபரவும் தேஜோமயமான ஆகாசத்தில் என் மனம் இன்னும் மிதந்துகொண்டிருக் கிறது. நான் அவரைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவரிடமிருந்து என் மனதிற்குள் பாய்கின்ற சொல்ல முடியாத ரஹஸ்யமான ஆனந்தம் என் மனத்தைவிட்டு இன்னும் அகலவில்லை. எனக்கும் அவருக்கும் பொது வானது என்னவிருக்கிறது? நானோ ஐரோப்பிய நாக ரிகத்தையடைந்தவன். தன்னையே மேலாகப் பாவிப் பவன்; படித்தவனென்று சொல்லப்பட்டவன்; எதை யும் வாதஞ்செய்பவன். அவரோ ஏழை; படிப்பற்ற வர்; நாகரிகமற்றவர்; விக்கிரஹங்களை வணங்குபவர்; அநாதையான ஹிந்து. எத்தனையோ ஐரோப்பியப்

பண்டிதர்களுடைய பிரசங்கங்களையும், சம்பாஷணைகளையும், கேட்டிருக்கிற நான், ஏன் இவருடைய சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு நெடுநேரம் உட்கார்ந்திருக்க வேண்டும் ?

'கிறிஸ்துவை வியந்து வழிபட்டு, மனோவிசாலமுள்ள கிறிஸ்தவப்பாதிரிகளின் குணங்களை வியந்து, அவர்களுக்கு நண்பனாய், யுக்தி வாதத்தையேகொண்ட பிரம்மசமாஜத்துக்காக ஊக்கத்துடன் உழைக்கும் நான் ஏன் அவருடைய வார்த்தைகளினால் மயங்கவேண்டும் ? நான் மாத்திரமல்ல. என்போன்ற எத்தனையோபேர்கள் அங்ஙனம் செய்கிறார்கள்.

* * * *

'அவர் சொல்லுவதெல்லாவற்றையும் குறித்து வைத்தால் ஆச்சரியமான ஞானத்தையுடைய ஒரு புத்தகமாகும்...........அதை வாசிப்பவர் முன் காலத்திய ரிஷிகளின் அபரோக்ஷ ஞானமானது திரும்பவந்துவிட்டதென்று நினைப்பார்கள்...........

'இந்தப் புண்ணியவான் ஹிந்து மதத்தின் ஆழத்திற்கும் இனிமைக்கும் ஓர் அத்தாக்ஷி. இவர் தம் சரீரத்தை முற்றிலும் அடக்கி விட்டார். அதனால் மாம்சபிண்டமான அச்சரீரம் ஆத்மமயமாய், ஆனந்தமயமாய் நிர்மலமாய் விளங்குகிறது. இவ்வுலகின் பொய்மையையும் ஸாரமின்மையையும் விளக்கிக் காட்டவே சித்திகள் பெற்றார் போலும்.........அவருக்கு இவ்வுலகில் கடவுளைத்தவிர வேறு எண்ணமாவது, வேறு வேலையாவது, வேறுபந்துவாவது, வேறு நண்பனாவது இல்லை..... அவரது களங்கமற்ற பரிசுத்தமும் சொல்லுக்கடங்காத

ஆனந்தமும், சாஸ்திரங்களின் ஆராய்ச்சியின்றிச் சுயமாய் வந்த அளவற்ற ஞானமும் குழந்தை போன்ற சாந்தமும், எல்லாமனிதரிடத்திலும் அன்பும், சகலத்தைபும்தகித்து விழுங்கும் ஈசுவர பக்தியுமே அவருக்கு ஈசுவரன் கொடுத்த பலன்.'

மேற்சொல்லியபடி எழுதிய மஜூம்தார் பகவானுடைய சிஷ்யரல்லர். பகவானுடைய கொள்கைகளைச் சம்மதிக்காதவர். நம்மதக் கொள்கைகள் பலவும் தப்பென்றெண்ணினவர்.

பகவான் நரேந்திரரைப் பார்த்தவுடனே, 'அப்பா வா; உனக்காக வெகுநாள் காத்துக்கொண்டிருக்கிறேன்" என்றார். நரேந்திரரைப் பார்த்தால் அவருக்கு மிகவும் பிரியம். அவரைச் சிவனது அம்சமென்று சொல்லியிருக்கிறார். தம் சிஷ்யர்களில் சிரேஷ்டராக ஏற்படுத்தினர். 'நரேந்திரன் தன் வலிமையால் உலகமுழுதையும் அதிரச்செய்வான்' என்று சொன்னர். அப்படியே நரேந்திரர் பிற்காலத்தில் விவேகானந்த ஸ்வாமிகளென்ற பெயருடன், அமெரிக்காவிலும், மற்றமேல் நாடுகளிலும், வேதாந்தத்தின் உண்மைகளை விளங்கச் செய்து நம் நாட்டுக்குப் புகழ்விளைத்தார். நம் நாட்டு ஜனங்களுக்குள்ளும் வேதாந்த தத்துவங்கள் மறுபடியும் தழைத்தோங்கச் செய்தார். நாம் இப்பொழுது எங்கும் விசேஷமாகத் தழைத்து வளரப்பார்க்கும் நம்நாட்டுணர்ச்சிக்கும் சுதேசாபிமானத்திற்கும் விவேகாநந்த சுவாமிகள் ஒரு முக்கிய காரணம். அப்படிப்பட்ட லோகோபகாரியை முன்னுக்குக் கொண்டுவந்ததே பகவானது அவதாரமகிமையைக் காட்டுகிறது.





தக்ஷிணேசுவர ஆலயம்

கடைசியில், பகவானுக்குத் தொண்டையில் புண் தோன்றி பேச வருத்தமாகவே, சிகிச்சைக்காகத் தக்ஷிணேசுவரத்தைவிட்டு கல்கத்தாவில் சியாம்புகூருக்கு வந்தார். அக்காலத்தில் பேர்பெற்ற டாக்டர் மஹேந்திரலால் ஸர்க்கார் என்பவர் பார்த்து வந்தார். இவ்வைத்தியர் தம்வேலையை எல்லாம் விட்டுத் தினம் 4, 5, மணி நேரம் பகவானுடனே காலம்போக்குவார். பகவானைப் பேசக்கூடாதென்று இவர் வற்புறுத்தியும், பகவான், அதைக்கேளாது, வந்தவர்களுடன் பேசிக்கொண்டும், ஈசுவரநாமங்களைக் கீர்த்தனம் செய்துகொண்டும் இருந்தார். வியாதி அதிகரித்து, வைத்தியரும் பிரயோஜனமில்லையென்று சொல்லவே, கொஞ்சம் மாறுதலுக்காக பக்கத்திலிருந்த காஸிப்பூர் என்ற ஊருக்குப் பகவானையழைத்துச்சென்றார்கள். அங்கே ஒரு பங்களாவில் சில காலம் சிஷ்யர்களால் மிகுந்த அன்புடன் பாதுகாக்கப்பட்டு 1886ஸ்ரீ ஆகஸ்டுமீ மஹாஸமாதியடைந்தார்.

இந்தப் பரமபுருஷனுடைய திவ்விய சரித்திரத்தைச் சுருக்கமாகக் கூறினேம். இவருடைய உபதேசங்களிற் பெரும்பான்மையும் பின்வரும் பக்கங்களில் காணலாம்.

## தக்ஷிணேசுவர ஆலயம்

### ஸ்ரீராமகிருஷ்ணரும் பக்த ஜனங்களும்

ஞாயிற்றுக்கிழமை தினம்; பக்தர்களுக்கு ஓய்வு நாள். ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிக்கும் பொருட்டு அவர்கள் கூட்டங்கூட்டமாக தக்ஷிணேசுவரம் வந்திருக்

கின்றனர். வேற்றுமையின்றி யாவர்க்கும் அவர் இடம் தருகிறார். சமயம் அல்லது வகுப்பு, நிறம்அல்லது வயது முதலிய யாதொரு பேதமும் காணமல் எல்லோரிடமும் தாராளமாகப் பேசுகிறார். சாதகர்களான துறவிகள், அன்றி அனுபூதிபெற்ற மகான்கள், வைதிக ஹிந்துக்கள், கிறிஸ்துவர்கள், பிரம்ம சமாஜ அங்கத்தினர்கள், சக்தி உபாசகர்கள், வைஷ்ணவர்கள், ஆடவர், பெண்டிர் யாவரும் இவரைத் தரிசிக்க வருகின்றனர். ஓ ராணி ராஷ்மணி! உனக்கு மங்களமுண்டாகுக; உன்பக்தியின் மேன்மையாலன்றோ இக்கோயில் எழுப்பப்பட்டது. இந்த ஜன நாயகனை, தெய்வத் திருவுருவை, கல்லாலும் செம்பாலும் ஆன விக்கிரகம் போலன்றி பக்தர்கள் ஆனந்திக்க எழுந்து நடமாடும் மூர்த்தியைத் தரிசித்துப் பூசிக்கும்படியான பாக்கியத்தை எங்களுக்குத் தந்ததும் நீயே!

## வாயில்மண்டபமும் பன்னிரண்டு சிவன்கோவில்களும்

தக்ஷிணேஸ்வர ஆலயம், கல்கத்தாவிற்கு வடக்கே நான்குமைல் தூரத்தில் புண்ணிய நதியான கங்கைக் கரையில் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயிலுக்குப் படகில்போகும் ஒருவன், செங்கற்களாற் கட்டப்பட்ட அகன்ற படித்துறை யொன்றில் இறங்குகிறான். ஸ்ரீராமகிருஷ்ணர் இத்துறையிலேயே நீராடுவதுண்டு. இதற்குக் கிழக்கேயுள்ளது வாயில் மண்டபம். இம் மண்டபம், பெரும்பாலும் இராக்காலங்களில் கோவிற் காவலர்கள் இருக்க உபயோகப் படுகின்றது. காவற்காரர்களின் மரப்பெட்டிகள் சிலவும், நீரருந்தும் லோட்

டாக்கள் இரண்டொன்றும் அங்கேயிருக்கக் காணலாம். அருகாமையில் வசிக்கும் சில கனவான்கள் இப்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதன் பொருட்டு அடிக்கடி அங்கே வருவதுண்டு. ஸ்நானம் செய்யுமுன் சற்று அப்படிகளில் உட்கார்ந்து சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருப்பர். இக்கோயிலுக்கு வரும் பக்தர்கள் பூசைவேளை வரும் வரையில் இம்மண்டபத்தில் காத்துக் கொண்டிருப்பர்.

இம்மண்டபம் வரிசையாயிருக்கும் சிவன்கோவில்களுக்கு மத்தியில் இருக்கிறது. இவைகளில் ஆறு கோயில்கள் இம்மண்டபத்துக்கு வடபாகத்திலும், மற்றைய ஆறு தென்பாகத்திலு முள்ளன. படகில் போய்க்கொண்டிருக்கும் ஜனங்கள் முன்னால் தெரியும் இப்பன்னிரண்டு கோயில்களையும் சுட்டிக்காட்டி, "அதோபார்! ராணி ராஷ்மணி கட்டிய ஆலயம்" என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வர்.

## இராதாகிருஷ்ணர் ஆலயம்

உட்புறம், இம்மண்டபத்திற்கும், பன்னிரண்டு சிவன் கோவில்களுக்கும் கிழக்கே செங்கற்றளவரிசை போடப்பட்ட ஒருபெரிய முற்றமிருக்கின்றது. அதன் நடுவில் இரண்டு கோவில்கள் உள்ளன. வடபாரிசத்திலுள்ளது மேற்கு முகமாகவும், தென்பாரிசத்தி லுள்ளது தெற்கு முகமாகவும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. வடபாகத்திலுள்ளதே இராதாகிருஷ்ணரது ஆலயம். உள்ளே இராதை, கிருஷ்ணன் ஆகிய இரண்டு மூர்த்திகளிருக்கின்றன. முற்றத்திலிருந்து

இக்கோயிலுக்குப் படியின் மூலமாகவே மேலே ஏறிச் செல்ல வேண்டும். கோயிலறைச் சலவைக் கற்களால் தளவரிசை யிடப்பட்டுள்ளது. முன் பக்கமாக வுள்ள தாழ்வாரத்தில் கூரையிலிருந்து அநேக குளோப் விளக்குகள் தொங்குகின்றன. அவ்விளக்குகள் சிவப்புத்துணியால் மூடப்பட்டிருக்கின்றன. உற்சவ காலங்களில் மாத்திரம் அவை ஏற்றப்படும். இவ்வாலயத்தின் வாயிலில் எப்போதும் ஓர் காவற்காரன் உட்கார்ந்திருப்பான். சாயங்கால வேளைகளில் கதிரவனது கிரணங்கள் விக்கிரகங்கள் மேல் படாதவண்ணம் தாழ்வாரத்தின் முன்னிலையில் திரைகள் தொங்கவிடப்படுகின்றன. இத்தாழ்வாரத்தின் தென்கிழக்கு மூலையில் கங்காதீர்த்தம் நிரப்பப்பெற்ற பெரிய தொட்டியொன்றிருக்கிறது. கோயிலறையின் வாயிற்படியண்டை ஒருசிறிய பித்தளைப்பாத்திரத்தில் சரணாமிருதம் வைக்கப்பட்டிருக்கின்றது. பக்தர்கள் இச்சன்னிதியில் வணங்கித் தொழுது சரணாமிருதத்தில் கொஞ்சம் பெற்றுப் பக்தியுடன் அதனையுட் கொள்வர்.

## ஜகதம்பிகையின் ஆலயம்

தென்பாகத்திலுள்ள கோயில்தான் அம்பிகையினுடையதாகும். இவளுக்குப் பவதாரணி என்று பெயர். இங்கும் கோயிலின் உட்புறம் சலவைக்கற்களால் தளவரிசையிடப் பெற்றிருக்கிறது. அம்பிகையின் விக்கிரகம் ஒருயர்ந்த மேடையின் மீதுள்ள அழகிய வெள்ளிவிமானத்திற்குள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றது. மேடையின் முன்புறத்தில் சிறு

படிகளிருக்கின்றன. அம்மேடையின் மேல் வெள்ளியால் செய்த ஆயிரம் இதழ்களைக்கொண்ட வெண் தாமரைமலரின்மீது நிர்க்குணப் பிரம்மத்தைக் குறிக்கும் சிவபிரான், தெற்கே தலையும் வடக்கே காலுங் கொண்டு படுத்திருக்க, தேவியானவள் ஒருகாலை சிவனது மார்பிலும், மற்றொன்றை துடையின் மீதும் வைத்து மலர்ந்த முகத்துடன் நிற்கிறாள். இவள் பிரகாசமான காசிப்புடவையும், அநேக அழகிய ஆபரணங்களும் தரித்திருக்கிறாள். அவளது பாதாரவிந்தங்கள் பலவித ஆபரணங்களாலும், சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களாலும், அழகிய மலர்கள் வில்வத் தளிர் முதலியவற்றாலும் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றன. தேவியினது புஜங்களும், கைகளும் வைரக்கற்களா லிழைக்கப்பெற்ற அநேக பொன்னுபரணங்களால் திகழ்கின்றன. கழுத்திற் பொன்சரடும், ஏழு கோர்வைகளையுடைய ஓர் முத்துமாலையும், முப்பத்திரண்டு கோர்வைகளுள்ள பொன்மாலையொன்றும், ஒரு சங்கிலியும் தரித்திருக்கிறாள். மனிதத் தலைகளாலான நீண்ட மாலையொன்றைக் கழுத்திலும், கரங்களாலான மாலையொன்றை இடுப்பிலும் அணிந்திருக்கிறாள். காதில் தரித்திருக்கும் கம்மல் முதலிய ஆபரணங்கள் பிரகாசிக்கின்றன.

முக்கண்படைத்த முதல்வியிவள். நெற்றியிலுள்ள மூன்றாவது கண் ஞானக்கண்ணாகும். கரங்கள் நான்குடையவள். இடதுகைகளில் ஒன்று புதிதாகச் சேதிக்கப்பட்ட ஒருமனிதத்தலையையும், மற்றொன்று ஒரு கூரியவாளையும் கொண்டிருக்கின்றன. வலது

கைகளிலொன்று தன்னையண்டிய பக்தர்களுக்கு வேண்டிய வரங்களைக்கொடுத்துக்கொண்டும், மற்றொன்று அபயமளித்துக்கொண்டுமிருக்கின்றன. தலையும் வாளும் அழித்தற்றொழிலைச் செய்யும் கோரஸ்வரூபத்தையும், வரந்தந்து ரக்ஷித்தல் தேவியின் கங்குகரையில்லா அருட் பிரவாகத்தையும் காட்டுகின்றன.

சந்நிதியின் ஈசானிய மூலையில் அம்பிகை துயிலுறுவதற்கான அழகிய மஞ்சமொன்றிருக்கின்றது. இதனருகில் தூய்மையான வெண்ணிறமுள்ள சாமரமொன்று தொங்குகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இச்சாமரத்தால் பவதாரிணிக்கு அடிக்கடி வீசுவதுண்டு.

லோகமாதா அருந்துவதற்கென முன்னேயுள்ள படிகளின்மீது சிறுபாத்திரங்களில் தண்ணீர் வைக்கப்பட்டிருக்கின்றது. தேவியின் திருவடிக் கருகாமையில் அழகிய சிங்கமொன்றும், மேடையின் தென்மேற்கு மூலையில் ஒரு பெண் நரியும், கிழக்கே கருநிறமான எருதொன்றும், தென்கிழக்கே ஹம்ஸம்ஒன்றும் ஆகிய இவ்விருதுகளின் பிரதிமைகள் தேவியைப் பார்த்தவண்ணமாக நிற்கும்படி வைக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் படிகளின்மீது சாலக்கிராமமும்,சிவலிங்கமும், ஜடாதாரி என்னும் மஹானிடமிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் பெற்ற 'ராமலால்' என்னும் ராமச்சந்திரருடைய விக்கிரகமும் வைக்கப்பட்டிருக்கின்றன. இச்சன்னிதியிலும் வாயிற்படியண்டை தேவியின் சரணாமிருதம் வைக்கப்பட்டிருக்கின்றது. இங்கும் ஓர் காவற்காரன் உட்கார்ந்திருப்பதைக் காணலாம். தேவியை வலம் வருவதற்காக சுற்றிலும் ஒரு பிரகாரமும் ஆலயத்தின் எதிரில் ஒரு பெரிய

அழகான நடனமண்டபமும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. இம்மண்டபத்தில் நவராத்திரி முதலிய முக்கிய காலங்களில் விசேஷ பூஜைகள் நடைபெறும். உற்சவ காலங்களில் பஜனைகளும் ஹரிகதைகளும் செய்யப்படுகின்றன. இந்நடன மண்டபத்தின் தென்புறத்தில் பலிபீட மொன்றிருக்கின்றது.

## அதிதிசாலை

கோயிலின் மேற்குத்திசையில் வரிசையாக வுள்ள பன்னிரண்டு சிவாலயங்களைப்பற்றி முன்பே கூறியுள்ளோம். மற்ற மூன்று பக்கங்களிலும் அநேக அறைகளும் நீண்டதாழ்வார மொன்று மிருக்கின்றன. கீழ்த்திசையிலுள்ள அறைகள் பண்டசாலையாகவும் மடப்பளியாகவும் உபயோகப்படுகின்றன. இச்சமையலறைகளிலொன்று தேவிக்கு நிவேதனம் தயாரிக்கவும், மற்றொன்று மாம்சம் மச்சம் முதலியன சேர்க்காமல் இராதாகிருஷ்ணனுக்கு நிவேதிப்பதற்காகச் சுத்தமாக சமைப்பதற்கும் உபயோகப்படுகின்றன. மற்றுமுள்ள அறைகள் பக்ஷணங்கள் சேர்த்து வைப்பதற்கும் தினந்தோறும் ஆராதனைக்குவேண்டிய பழங்கள் நறுக்குவதற்குமாக உபயோகப்படுகின்றன. தாழ்வாரத்தில் அதிதிகளான சாதுக்கள் பக்தர்கள் பிச்சைக்காரர் முதலியவர்களுக்குத் தினந்தோறும் பிரசாத மளிக்கப்படுகின்றது.

## காரியாதிகாரியும் காரியாலயமும்

தென்புறத்திலுள்ள அறைகளிலொன்று காரியாலயமாக உபயோகப்படுகின்றது. காரியாதிகாரியும், கணக்

குப்பிள்ளையும் எப்போதும் அங்கிருப்பார்கள். இன்னும் ஆலயத்தில் ஊழியம் செய்பவர்கள் வசிப்பதற்காக அவ்வரிசையில் அநேக அறைகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. மேலும் கோயிலுக்குச் சொந்தமான அநேக பெரிய பாத்திரங்கள், ஜமக்காளங்கள், உற்சவகாலங்களில் உபயோகிக்கப்படும் மற்றுமுள்ள விலையுயர்ந்த சாமான்கள் ஆகியவை இன்னும் சில அறைகளில் வைத்துப் பூட்டப்பட்டிருக்கின்றன. இவ்வறைகளி லநேகம் ஜனன தின உற்சவகாலங்களில் பண்டசாலையாக உபயோகப்படுவது வழக்கம். அக்காலங்களில் இவ்வறைகளுக்குத் தென்புறமாயுள்ள பெரிய தோட்டத்தில் சமையல் நடைபெறுவதுண்டு. கோயிலின் வடபாரிசத்தில் ஜனங்கள் உள்ளே வருவதற்கான வாயிலொன்றிருக்கிறது. இங்கும் சில காவற்காரர்கள் இருக்கக் காணலாம்.

## பகவான் வசித்த அறை

கோயிலின் வடமேற்கு மூலையில் அதாவது வடகோடியிலுள்ள சிவாலயத்தி னருகாமையில் இருக்கும் இவ்வறையானது மிகவும் பிரக்யாதி பெற்றதாகும். இங்கு தான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது நாட்களை ஈஸ்வரத்தியானத்திலே கழித்து வந்தார். இவ்வறைக்கு மேற்குப் பக்கத்தில் அரைவட்டமான தாழ்வாரமொன்றிருக்கின்றது. ஸ்ரீராமகிருஷ்ணர் இத்தாழ்வாரத்தில் அடிக்கடி வந்து நிற்பதுண்டு. எதிரேயுள்ள கங்கையை நோக்கும் அவர் இது தேவியின் சொரூபமே என்று நினைத்து ஆனந்திப்பார். இவ்வறையைத் தரிசிக்கச்செல்லும் பக்தர்கள் பகவான் உபயோகித்து வந்த பெருமை

வாய்ந்த இரண்டு கட்டில்கள் இப்பொழுதும் அங்கிருப்பதைக்காண்பர். சிறிதாயிருக்கும் கட்டிலின் மீதிருந்தே பெரும்பாலும் தம்மை வந்தடைந்த சிஷ்ய கோடிகளுக்கு அவர் கடவுளைப்பற்றி எடுத்துரைப்பது வழக்கம். அவர் அங்கிருந்தபோது சுவற்றில் தொங்கவிடப்பட்டிருந்த படங்கள் சில இன்றைக்கும் அங்கே தொங்கிக் கொண்டிருக்கின்றன. இப்படங்களை நேரிற் பார்ப்பவர்க்கு பரமஹம்ஸரால் போதிக்கப்பட்ட சர்வமத சமரஸக் கொள்கை ஞாபகத்திற்கு வரும்.

## நஹபத் கானு

பகவானது அறைக்கு வடக்கே கோயிலுக்கு வெளிப்புறத்தில் சிறிதுதூரம் தள்ளி ஒருசிறு கட்டிடம் அமைக்கப் பட்டிருக்கிறது. இதே மாதிரி கோயிலுக்குத் தென் புறத்திலும் ஒன்று இருக்கக் காணலாம். இவ்விரண்டினுடைய மேல் அறைகள் மேளம் முதலிய வாத்தியங்கள் முழங்கும் இடங்களாக உபயோகிக்கப் பட்டுவந்தன. பகவானது தாயார் தக்ஷிணேசுவரம் வந்திருந்த காலத்தில் வடபாரிசத்திலுள்ள இச்சிறு கட்டிடத்தின் கீழறையில் தங்கியிருந்தார்கள்.

## பஞ்சவடி

பஞ்சவடி யென்பது ஐந்து மரங்கள் சேர்ந்த ஓர் இடமாகும். ஸ்ரீராமகிருஷ்ணர் கடுந்தவம் புரிந்த காலத்து அதற்குத் தக்க இடமொன்று வேண்டியிருந்ததால் அவர் விருப்பப்படியே, நஹபத் கானுவுக்குச் சற்று வடபுறத்தில் ஆல், அரசு, வேம்பு, நெல்லி, வில்வம் ஆகிய ஐந்து வகை மரங்கள் வைத்துப் பயிராக்கிப்

பஞ்சவடியொன்று அமைக்கப்பட்டது. பகவான்பிருந்தா வனத்திலிருந்து வந்தபோது தாம் அவ்விடத்திருந்து கொண்டுவந்த மண்ணை இங்கே தெளித்து இப்புது விடத்தையும் ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகச் செய்து விட்டார். தக்ஷிணேசுவரம் செல்லும் யாத்திரிகர்கள் அனைவரும் இவ்விடத்தைத் தரிசிக்காமற் போவ தில்லை. இவ்விடத்தில் ஒரு அறையாகக் கட்டப் பட்ட சிறு கட்டிடமொன்று இருப்பதைக் காணலாம். முன்னே அது ஒரு குடிசையாக இருந்தது. இக்குடி சையிற்றான் பகவான் கடுமையான பலவகை சாதனங் களைப் புரிந்து ஒப்புயர்வற்ற உன்னத நிலையை யடைந் தார். எனவே இவ்விடத்தைப் பக்தர்கள் ஒரு புனித மான இடமாகக் கருதுவதில் ஆச்சரியம் என்ன? இவ்விடத்திலேயே புராதனமான ஆலமரமொன்றும் அதைச் சேர்ந்தாற் போல் அரசமரமும் உண்டு. இம் மரங்களைச் சுற்றி வட்டமான பெரிய மேடையொன்று கட்டப் பட்டிருக்கிறது. பகவான் தவம் செய்த முக்கிய இடங்களில் இம்மேடையும் ஒன்றாகும். யாத்திரிகர் களிற் பலர் சாந்தமாகச் சிறிதுநேரம் கழிக்குமெண் ணத்தால் இம்மேடையின்மீ தமர்ந்து தியானம் ஜபம் முதலியன செய்வர்.

பகவான் தந்திர சாதனங்கள் செய்த மற்றொரு முக்கிய இடமும் உண்டு. இது தோட்டத்தின் வடமூலை யில் உள்ள ஓர் வில்வமரத்தின் அடியாகும். இம்மரத் தைச் சுற்றி வட்டமான ஒரு சிறு மேடையிருக்கிறது. இம்மேடைமீதிருந்துதான் பகவான் கடுமையான அறு பத்து நான்கு தந்திர சாதனங்களைச் செய்து சித்தி பெற்றார்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதம்

## முதல் அத்தியாயம்

### பிரிவு. 1

### குரு தரிசனம்

வஸந்தகாலம்—செடிகொடிகளும் மற்ற எல்லாச் சராசரங்களும் புன்சிரிப்புடன் உல்லாசமாயிருக்குங் காலம். ஆயிரத்து எண்ணூற்று எண்பத்திரண்டாம் 1882) வருஷம் பங்குனிமாதம் (March) ஒருநாள் மாலை சூரிய அஸ்தமான சமயத்தில் ம— (M) என்பவர் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரை முதலில் தரிசனம் செய்ய வந்தார்.

கல்கத்தாவிற்கு வடக்கே தக்ஷிணேசுவரம் என்கிற கிராமத்தில் கங்காநதிக்குக் கீழ்க்கரையில் அம்பாள் கோயிலை வெகுநாளாகத் தமதிருப்பிடமாகக் கொண்டு வந்தார் மஹான் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர்.

அவர், பரிசுத்தமானதும் சகல பாவங்களைப் போக்கும் வல்லமைவாய்ந்த புண்ணிய தீர்த்தமுமாகிய அக்கங்காநதியின் முகமாக நோக்கி யிருக்கும் தமது அறையில் ஒரு கட்டிலின்மீது வீற்றிருக்கிறார். அவருடைய சிஷ்யர்களும், மற்ற பக்தர்களும் கீழே தரையின் மீது உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்கள் கருணையோடும் புன்சிரிப்போடும் கூடிய அம்மஹானின் முகத்தைப்

பார்த்துக்கொண்டும், ஜீவர்களை உத்தாரணம் செய்யும் மகிமை பொருந்திய அவருடைய திருநாவிலிருந்து எழும் வாக்கியங்களாகிய அமிருதத்தைப் பானம் பண்ணிக்கொண்டு மிருந்தார்கள்.

புன்சிரிப்புடன் கிழக்கு முகமாக வீற்றிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் ஈஸ்வரனைப்பற்றிப் பேசுகிறார்.

அப்படிப் பகவானைப்பற்றிப் பேசுபவரான ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்த்து, 'இவர் சுகதேவரோ' என்று ஆச்சரியத்துடன்பேசாமல் சலனமற்றுநின்றார். 'அநேக புண்ணிய ஸ்தலங்களெல்லாம் ஒன்று சேர்ந்து இருக்குமிடத்தில்தான் நான் இருக்கின்றேனோ' என்றெண்ணினார். இன்னும் 'சைதன்ய தேவர், இராமானந்தர், ஸ்வரூபர் முதலிய மற்ற பக்தர்களோடு புண்ணிய ஸ்தலமாகிய பூரியில் பகவானுடைய புண்ணிய நாம ஸங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டு அவருடைய அனந்த கல்யாண குணங்களையும் அற்புதமான செய்கைகளையும் பற்றிப் பேசிக்கொண்டிருக்கப்பட்ட இடமோ இது' என்றும் எண்ணி ம— ஆச்சரியத்துடன் நின்றார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர் சொல்லுகிறார்: "பகவானுடைய நாமத்தை உச்சரிக்கும்பொழுதும் ஸ்மரிக்கும்பொழுதும் உனக்கு மயிர்க்கூச்சலிடவோ, அல்லது உன் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பெருகும்படியான நிலைமை ஏற்படவோ செய்தால் நீ பகவானுக்கு வேலை (கர்மா) செய்யவேண்டிய காலம் முடிவடைகிறதென்று நான் உறுதியாகச் சொல்லுவேன். உதாரணமாக, பிராம்மணனுக்குக் காலை ஸந்தியாவந்தனம், மாத்தியான்னிகம், மாலை ஸந்தியாவந்தனம் முத

லான நித்திய கர்மானுஷ்டானங்கள் ஏற்பட்டிருக்கின்றன. முன்சொன்ன நிலைமை ஏற்படும் வரைக்கும் நீ இவைகளைச் செய்துகொண்டே வரவேண்டும். அந் நிலை ஏற்பட்டுவிட்டால் கர்மாவானது தானாகவே நழுவி விடும். அந்நிலைமை எப்பொழுது ஏற்படுகின்றதோ அப் பொழுது பக்தன் பகவானுடைய திருநாமமாகிய 'ராம' 'ஹரி' ஏகாக்ஷரமாகிய 'ஓம்' என்பவற்றையே மேன் மேலும் உச்சரித்துக்கொண்டே இருக்கிறான். அதுவே அவனுக்குப்போதுமானது. வேறெதுவும் அவன்செய்ய வேண்டுவதில்லை.''

திரும்பவும் பகவான் சொல்லுகிறார்: ''ஸந்தியாவின் முடிவு காயத்ரி. காயத்ரி பிரணவாக்ஷரமாகிய 'ஓம்' என்றதில் அடங்கியிருக்கின்றது.''

ம— என்பவர் தக்ஷிணேசுவரம் என்ற கிராமத் திற்கு அருகிலிருக்கும் வாரநாகூரில் வசித்து வரு கிறார். ஒருநாள் ஸாயங்காலம் உலாவுவதற்காக அவர் ஸித்து என்ற தம் சிநேகிதர் ஒருவரோடு கோயில் நந்தவனத்திற்கு வந்து சேர்ந்தார். அன்று ஞாயிற்றுக் கிழமையாகையால் அவர்களுக்கு வேலையில்லை.

அவர்கள் அப்படிப் போகும் வழியில் முதலில் பி. பானர்ஜீ என்பவருடைய தோட்ட பங்களாவைப் பார்த்துவிட்டுச் சென்றனர். அப்பொழுது ஸித்து, ''கங்காநதிக்கரையில் மிகவும் அழகான தோட்ட மொன்றிருக்கின்றது. நாம் அவ்விடம் போவோம். பரமஹம்ஸர் என்று அழைக்கப்படும் ஒரு புண்ணிய புருஷர் அவ்விடம் வசித்து வருகிறார்'' என்றார். அப் படியே இருவரும் அங்கே போனார்கள். பரமஹம்ஸ

ரது வசனங்களைக்கேட்டதும் ம— ஸ்தம்பித்து நிற்கிறார். "இந்த இடம் எவ்வளவு அழகாயிருக்கின்றது! என்ன மஹா புருஷர்! இவருடைய வாக்கியங்கள் எவ்வளவு இனிமையாகவும் கருணையோடு கூடியனவாகவுமிருக்கின்றன! இவ்விடத்தைவிட்டுப் போகலாமென்று நினைத்தமாத்திரத்திலேயே ஆத்மா பதை பதைக்கின்றதே! ஆனால் நாம் முதலில் இந்தக்கோயிலுக்குள்போய் எங்கும் சுற்றிப்பார்ப்போம். பிறகு திரும்பிவந்து இந்தமஹானுடைய பாதகமலங்களில் வணங்குவோம்" என்று நினைக்கிறார்.

அவர்கள் அவ்வழகான முற்றங்களின் வழியாக ஒவ்வோரிடமாகக் கடந்து முதலில் சிவசன்னிதானத்திற்கு வந்து சிவதரிசனம் செய்து, பிறகு ராதாகிருஷ்ணர் ஸன்னிதானத்திற்கு வந்து தரிசனம் பண்ணிவிட்டுக் கடைசியாக அம்பிகையின் சந்நிதிக்கு வந்தார்கள். அப்பொழுது பூஜாகாலமாகவிருந்தது. அர்ச்சகர்கள் விக்கிரஹங்களுக்குக் கற்பூர தீபாராதனை முதலானவைகள் செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது மேளவாத்தியங்கள் அதிகோஷமாக முழங்கிக்கொண்டிருந்தன. கோவில் நந்தவனத்தின் தென்கோடியிலிருந்து வீசும் மிருதுவான இளந்தென்றற்காற்றானது கோயில் வாத்தியக்காரர்கள் நாகஸ்வரம் முதலான இசைக்கருவிகளால் வாசிக்கும் இனிய கீதங்களை அடித்துக்கொண்டு வந்தது. இந்த ஸங்கீதங்களாகிய அலைகள் கங்காநதியைக் கடந்து எல்லையில்லாத அகண்ட வெளியான ஆகாயத்தில் லயமடைந்துகொண்டிருந்தன. அநேக புஷ்பங்களிலிருந்து நறுமணங்கமழ்ந்த இனி

மையான வாஸனையுடன் மந்த மாருதம் வீசிற்று. அப்பொழுதுதான் மெல்லெனச் சந்திரன் உதயமாகவும், உடனே அந்தக்கோயிலும், அதைச் சூழ்ந்த நந்தவனமும் அதி ரமணீயமான வெண்ணிலாவாகிய அமிருதப் பிரவாகத்தில் மூழ்கியிருந்தன. அக்காட்சியானது எப்படி யிருந்ததென்றால், மனிதனும் அவனைச்சூழ்ந்த பிரபஞ்சமும் மனமகிழ்ந்து சாயங்காலவேளையில் பகவானை ஆராதனைசெய்ய மிகவும் ஆவல் கொண்டதைப்போலத் தோன்றிற்று.

இத்திவ்விய மங்கள காட்சியினால் ம— ஆனந்த பரிதரானார். அப்பொழுது ஸித்து சொல்லுகிறார்: 'இக்கோவில் ராணி ராஷ்மணி யென்ற சீமாட்டியினால் கட்டப்பட்டது. இவ்விடத்தில் தேவதாராதனைகள் தினே தினே திரிகாலபூஜையுடன் மிக விமரிசையாக நடைபெற்றுவருகின்றன. இன்னும் இவ்விடத்தில் துறவிகளுக்கும், ஏழைகளுக்கும் தினமும் பகவத் பிரசாதமாகிய அன்னமளிக்கப் படுகின்றது.'

இவ்விரண்டு நண்பர்களும் அவ்வழகான முற்றங்களின் வழியாக ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இருக்கும் அறையை நோக்கிச்சென்றனர். அறையின் அருகில் வந்ததும் கதவு மூடப்பட்டிருப்பதைக் கண்டனர். ம—ஆங்கிலம் படித்தவராகையால் அவ்வாங்கிலஆசார முறைப்படி அவர்கள் அறிவிப்பின்றி உள்ளேபோவது மரியாதைக்குறைவென்று எண்ணி இருவரும் வாயிலில் நின்றார்கள்.

அவ்வறை, சாம்பிராணி ஊதுவத்தி முதலியவைகளின் வாசனை நிறையப்பெற்றிருந்தது.

அறையின் வாயிற்கதவருகில் வேலைக்காரி பிருந்தா நின்றுகொண்டிருந்தாள். ம— அவளுடன் பேசுகிறார்:

ம—:—உள்ளே இருக்கிறாரா அந்தப் புண்ணிய புருஷர்?

பிருந்தா:—ஆம், அவர் அறைக்குள் இருக்கிறார்.

ம—:—அவர் எவ்வளவு காலமாக இவ்விடத்தில வசித்து வருகிறார்?

பிருந்தா:—ஓ, அநேக வருஷங்களாக.

ம—:—அவர் அநேகம் கிரந்தங்கள் படித்தவர் என்று நினைக்கிறேன்.

பிருந்தா:—ஓ, இல்லை; ஒரு சிறு புத்தகம்கூட அவரிடமில்லை. அவருடைய நாவே பரமோத்கிருஷ்டமான ஒவ்வொரு தத்துவத்தையும் நன்றாய் விளக்கியருளும்.

ம—:—புதிதாகக் கலாசாலையை விட்டவராகையினால், பகவான் படித்தவரல்லரென்றுகேட்டு அதியாச்சரியத்துடன் திகைத்து நின்றார்.

ம—:—ஸரி, அவர் இப்பொழுது அவருடைய சாயங்கால அனுஷ்டானத்திற்காகப் போவாரா? நாங்கள் உள்ளே வரலாமா? தயவுசெய்து நீ அவரிடம் சென்று, நாங்கள் அவரைப்பார்க்க மிகவும் ஆவலாயிருக்கிறோம் என்று சொல்லுவாயா?

பிருந்தா:—என், நீங்கள் உள்ளே போகலாம்; குழந்தைகாள், உள்ளே போங்கள்; போய் அவரெதிரில் உட்காருங்கள்.

அதற்குமேல் அவர்கள் உள்ளே போனார்கள். அவ்விடம் வேறொருவரும் இல்லை. அவர்மட்டிலும் ஒரு

சிறுகட்டிலின் மீது உட்கார்ந்திருக்கிறார். ஊது வத்திகள் எரிந்துகொண்டிருக்கின்றன. கதவு மூடப்பட்டிருக்கிறது. ம— கைகூப்பி வணங்குகிறார். பாய் ஒன்று கீழே தரையின்மீது விரிக்கப்பட்டிருக்கிறது. அவரது அனுமதியின்பேரில் ம—,சித்து இருவரும் உட்காருகிறார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் அவர்களைப்பற்றிப் பலவிதமாக விசாரிக்கிறார்: 'உன்பெயரென்ன ? நீ எவ்விடம் வசிக்கிறாய் ? உன் உத்தியோகம் யாது? நீ எதற்காக வாரநாகூர் வந்திருக்கிறாய் ?' என்று பலவிதமான கேள்விகளைக்கேட்கிறார். ம— இவைகளுக்கெல்லாம் பதிலளிக்கிறார். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்விதமாகப் பேசிக்கொண்டிருக்கிறா ரெனினும், அவருடைய மனம் வேறு யேதோ ஒன்றை நினைத்துக் கொண்டிருப்பதாக ம— அறிந்துகொண்டார்.

'இதுதான் பிரம்ம சாக்ஷாத்காரமோ!' என்று ம— பின்வருமாறு தமக்குள் நினைத்துக்கொள்கிறார்:—ஒரு மனிதன் தன் கையில் தூண்டிற்கோலுடன் ஓர் ஏரிக்கரையில் மீன்பிடிக்க உட்கார்ந்து கொண்டிருக்கின்றான். அத்தூண்டில் முள்ளிலிருக்கும் ஆகாரத்தை மீன் வந்திழுக்கும்பொழுது மிதப்பு அசைகிறது; அப்பொழுது அதை அதிக ஆவலுடன் பார்க்கிறான். அவன் முழு மனத்தையும் பலத்தையும் அதில் செலுத்தித் தூண்டிலை இழுக்கிறான். அவன் அப்பொழுது ஒருவருடனும் பேசுகிறதில்லை. ஒரே கருத்தாகவே யிருக்கிறான்.

(அவர் வெளியுலக உணர்வை அறவே மறந்து ஸமாதி என்னும் நிலையை ஒவ்வொருநாளும் அநேகந்தரம் அடைகிறார் என்று ம— பின்னால் அறிந்தார்.)

ம— (ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்து):—தாங்கள் இப்பொழுது தங்களுடைய சாயங்கால அனுஷ்டானத்திற்காகப் போகும் ஸமயம்போலிருக்கிறது. ஆகையால் நாங்கள் இப்பொழுது தங்களைத் தொந்தரவு செய்யவேண்டாம் என்று நினைக்கின்றோம். இனியோர் சமயம் வருகிறோம்.

ஸ்ரீராமகிருஷ்ணர்:—இல்லை இல்லை; நீங்கள் அதற்காக அவசரப்பட வேண்டாம்.

திரும்பவும் அவர் சிறிதுநேரம் மௌனமாயிருந்தார். கடைசியாக அவர் வாய்திறந்து சொப்பனத்தில் பேசுவது போன்ற குரலில் 'சாயங்கால அனுஷ்டானமா? இல்லை, இல்லை, அதில்லை' என்றார்.

சிறிதுநேரம் சென்றதும் ம— பகவானை வணங்கி நின்றார். 'திரும்பவும் வா' என்று சொல்லி பகவான் அவருக்குப் போக விடையளித்தார்.

வ்ராநாகூர் போகிற வழியில் ம— தமக்குள் யோசிக்கலானார்: "இந்தப் புண்ணிய புருஷர் யாராயிருக்கக்கூடும்? திரும்பவும் அவரைப் பார்க்கவேண்டுமென்று இந்த மனம் எவ்வளவு ஆவலாயிருக்கிறது! கல்விப் பயிற்சி யில்லாமலே ஒரு மனிதன் இவ்வளவு உயர்ந்த நிலைக்கு வருவது சாத்தியமான காரியமா? அவருக்காக இம்மனம் இவ்வளவு ஆவல் கொள்ளுவதின் காரணமென்ன? அவர் என்னை மறுபடியும் வரும்படி கட்டளையிட்டிருக்கிறார். நான் நாளைக்கு வரவேண்டும். அல்லது மறுநாளைக்காகிலும் நிச்சயம் வரவேண்டும்."

பிரிவு 2

## குருவும் சிஷ்யனும்

இரண்டு நாள் சென்றதும், ஒரு நாள் காலை எட்டு மணிக்கு ம— திரும்பவும் வந்தார்.

பகவான் அப்பொழுது க்ஷௌரம் செய்துகொள்வதற்காக நாவிதன்முன் உட்கார்ந்திருந்தார். குளிர் நடுக்கிக்கொண்டிருந்தது. அவர் சிவப்புக் கரைபோட்ட மஸ்லின் சால்வையொன்று போர்த்திருந்தார். ம— வருவதைப் பார்த்து பகவான் "சரி நீ வந்திருக்கிறாய்; மிகவும் சந்தோஷம்; இவ்விடம் உட்காரு" என்றார்.

இச்சந்திப்பு, அவருடைய அறைக்குப் போகிற வழியாகிய தெற்குத் தாழ்வாரத்தில் நிகழ்ந்தது. பகவான் சால்வை போர்த்து, பாதரக்ஷையோடு க்ஷௌரம் செய்பவனுக் கெதிரில் உட்கார்ந்துகொண்டு ம—வுடன் பேசுகிறார். அவர் முகம் எப்பொழுதும் போலப் புன் சிரிப்புடன் கூடியிருந்தது. பேசும்பொழுது மட்டிலும் சிறிது திக்கலுடன் பேசுகிறார்.

ஸ்ரீராம (ம—வைப் பார்த்து):—உன் வீடு எங்கே?

ம—:—ஸ்வாமி, கல்கத்தாவில்.

ஸ்ரீராம:—நீ வாரநாகூரில் யாருடன் வசிக்கிறாய்?

ம—:—ஸ்வாமி நான் ஈசன் கவிராஜருடைய வீட்டில் என் சகோதரியுடன் வசிக்கிறேன்.

ஸ்ரீராம:—ஓ, ஈசனுடைய வீட்டிலா? கேசவர் இப்பொழுது எப்படி யிருக்கிறாரென்று உனக்குத் தெரி

யுமா? அவர் மிகவும் அசௌக்கியமாக இருப்பதாக நான் கேள்விப்பட்டேன்.

ம—:—ஆம், ஸ்வாமி; நானும் அதேமாதிரிதான் கேள்விப்பட்டேன். ஆனால் அவர் இப்பொழுது சௌக்கியமாயிருப்பாரென்று நம்புகிறேன்.

ஸ்ரீராம:—கேசவருக்கு உடம்பு சௌக்கியமாவதற்காகத் தேங்காய் சர்க்கரை முதலானவைகள் ஜகன்மாதாவிற்கு நைவேத்தியம் செய்கிறேனென்று நான் பிரார்த்தனை செய்து கொண்டேன். சில சமயம் இரவில் நான் பாதி நித்திரையினின்றும் எழுந்திருந்து, 'ஓ என் தாயே! கேசவர் சௌக்கியமடைய அருள்புரி' என்றும், 'கேசவர் பிழைக்காவிட்டால், என் தாயே, நான் கல்கத்தாவிற்குச் சென்றால் யாருடன் பேசுவது' என்றும் கதறுவேன்.

"சமீபத்தில் கல்கத்தாவிற்கு வந்திருந்த மிஸ்டர் குக் என்பவரை உனக்குத் தெரியுமா? அவர் உபந்நியாசங்கள் செய்துவந்தாரென்று நான் நினைக்கிறேன். அன்றைக்கோர்நாள் கேசவர் என்னைக் கப்பலில் அழைத்துச்சென்றார். அப்பொழுது அவர் அவ்விட மிருந்தார்."

ம—:—ஆம் ஸ்வாமி, நான் அவரைப்பற்றி மிகவும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அவர் உபந்நியாஸம் செய்வதைக் கேட்க எனக்கு ஒருபொழுதும் சமயமேற்படவில்லை. அவரைப்பற்றி எனக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது.

பகவான்:—பிரதாப் என்பவருடைய சகோதரன் இவ்விடம் வந்து சில நாள் தங்கியிருந்தான். அவன்,

தான் இவ்விடம் வசிக்க வந்ததாகச் சொன்னான். அவனுக்கு வேலை ஒன்றும் இல்லை; அவன் தன் குழந்தைகளையும், மனைவியையும் தன்னுடைய மாமனார் பாதுகாப்பின்கீழ் வைத்துவிட்டு வந்திருந்தான். ஆனால் நாங்கள் இவ்விடத்தில் மரியாதையற்ற அவனுடைய செயலுக்காக அவனைக் கடிந்தோம். அத்தனை குழந்தைகளைக் காப்பாற்றி வளர்க்கவேண்டியிருக்க அதை விட்டு இம்மாதிரியான வழியில் போவது மிகவும் தவறல்லவா? அன்னியர்களா அவர்களைக் காப்பாற்றவேண்டும்! தன் குடும்பக்கவலையை அன்னியர் தயவில், அதிலும் தன் மாமனாரிடத்தில் விடுவதில் அவன் சிறிதும் வெட்கப்படவில்லையே! நான் அவனை அவனுடைய வேலைக்குப் போகும்படியாகச் சொல்லிப் பலதரம் கடிந்துகொண்டேன். அவனுடைய அறிவின்மையை இவ்விதமாக எடுத்துக் காண்பித்தபிறகு அவன் போய்விட்டான்.

**பகவான்** (ம— வைப்பார்த்து):— உனக்கு விவாகம் ஆயிருக்கிறதா?

**ம—**:—ஆம், ஸ்வாமி! ஆயிருக்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்வார்த்தையைக் கேட்டதும் திடுக்கிட்டார். "அந்தோ இவனுக்கு மனைவியும் இருக்கிறாள்! பகவான் அவனுக்குக் கிருபை செய்யட்டும்" என்றார்.

இதைக்கேட்டதும் ம— மனங்கலங்கி மதிமயக்கத்துடன் இருந்தார். அவர், தாம் ஏதோ பெரிய குற்றம் செய்தவரைப்போலத் தலைகுனிந்துகொண்டு பேச நாவெழாமல் உட்கார்ந்திருந்தார். அப்பொழுது

ம— தமக்குள் நினைத்துக்கொள்ளுகிறார்: "மணம் செய்துகொள்வது அவ்வளவு கெடுதியா?"

ஸ்ரீ ராம:—உனக்கு குழந்தைகளிருக்கின்றனவா?

ம— இவ்வார்த்தையைக் கேட்டதும் அவருடைய ஹிருதயம் துடிப்பது அவருக்கே நன்றாய்க் கேட்டது. ஆம் ஸ்வாமி யென்று அவர் மெல்லிய ஸ்வரத்தில் பதிலளித்தார்.

இதைக்கேட்டதும் பகவான் திடுக்கிட்டார். அவர் ம— வைக் கடிந்து கொண்டு, "அந்தோ, குழந்தைகளைக்கூடவா காப்பாற்ற வேண்டியவனாயிருக்கிறாய்" என்றார். ம— தம் அஹங்காரத்திற்கு ஓர் பலமான சூடொன்று கொடுக்கப்பட்டதாக உணர்ந்தார்.

சிறிது நேரம் சென்ற பிறகு, பகவான் அன்புடன் அவரை நோக்கி இனிய குரலில் பேச ஆரம்பித்தார்: "குழந்தாய், மேலான நற்சின்னங்கள் சில உன்னிடம் காணப்படுகின்றன. அவைகளை, உன் கண்களிலிருந்தும், புருவங்களிலிருந்தும் நான் அறிகிறேன்."

"பூர்வ ஜன்மத்தில் ஈசுவர பாவனையில் தங்களுடைய நாட்களைக்கழித்த யோகிகளுடைய கண்கள் ஓர் விசேஷ பார்வையை உடையவை. அவர்களிற் சிலர் இப்பொழுதுதான் யோகாஸனத்தை விட்டெழுந்தவர்கள் போலக் காணப்படுகின்றனர்."

ஸ்ரீ ராம:—சரி, உன்னுடைய மனைவி யெப்படிப்பட்டவள்; அவள் பகவானிடம் பக்தி செலுத்தக் கூடிய வித்தியா சக்தியுடையவளா? அல்லது, அஞ்ஞானத்திற்கு இட்டுச்செல்லும் அவித்யா சக்தியுடையவளா?

ம—:—மிகவும் நல்லவள்தான்; ஆனால் அஞ்ஞான முடையவள்.

ஸ்ரீ ராம (சுறுக்கென்று):—அவள் அஞ்ஞான முடையவள்; நீ ஞானி! நீ ஞானம் அடைந்து விட்டதாகவா நினைக்கிறாய்? அப்படித்தானே?

ம— எது உண்மையான ஞானம், எது அஞ்ஞானம் என்பதை அறியமுடியவில்லை. எவன் அநேக புஸ்தகங்களைப் படித்திருக்கிறானோ அவனே ஞானியென்பது அவருடைய எண்ணம். (பின்னால் இந்தத் தப்பபிப்பிராயத்தைநீக்கி, பகவானை அடைவதே உண்மையான ஞானமென்றும், அவரை அடையாமையே அஞ்ஞான மென்றும் அறிந்துகொண்டார்).

எப்பொழுது, பகவான் "நீ ஞானமடைந்துவிட்டதாகவா நினைக்கிறாய்?" என்று சொன்னாரோ, அப்பொழுது ம— வுடைய அஹங்காரத்திற்கு இரண்டாவது சூடு கிடைத்தது.

ஸ்ரீ ராம:—உனக்கு, ஈஸ்வரனை ரூப முடையவனாகத் தியானிக்க விருப்பமா, அல்லது, அரூபியாகத் தியானிக்க விருப்பமா?

இக்கேள்வியானது அவரை மதிமயங்கவும், யோசனையிலாழவும் செய்தது. ஈஸ்வரனை அரூபியாகவும், அதே சமயத்தில் ஓர் ரூபியாகவும் நம்புவது சாத்தியமானதா? அல்லது ஒருவன் அவனை ரூபி என நம்பினால், அரூபி எனவும் எப்படி நினைப்பது? ஒரே வஸ்துவில் ஒன்றுக்கொன்று பேதமான இரண்டு குணங்கள் பொருந்தியிருப்பது கூடுமோ? பால்போன்ற 6 ப

பான வஸ்துக்கள் அதே சமயத்தில் கறுப்பாயிருக்கவும் கூடுமா?

இவ்விதமாகச் சிறிதுநேரம் ம— யோசனைசெய்து பிறகு சொல்லுகிறார்: "ஸ்வாமி, நான் பகவானை ரூபியாகத் தியானிப்பதைவிட அரூபியாகத் தியானிக்கவே விரும்புகிறேன்."

ஸ்ரீ ராம:—அது நல்லது; ஈஸ்வரனை எந்த விதத்தில் நோக்கினும் குற்றமில்லை. ஆம், அவரை நிர்க்குணப் பிரம்மமாகப் பார்ப்பது முற்றிலும் சரி. ஆனால் நீ ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இவ்வழி மட்டும் மெய்யென்றும் மற்றவைகளெல்லாம் பொய்யென்றும் நினைத்துவிடாதே. ஈஸ்வரனை ரூபியாகத் தியானிப்பதும் சரியே. ஆனால் நீ பகவானை அடைகிற வரையில், (பகவானைப் பார்க்கிறவரையில்)உன் சொந்தக் கொள்கையைக் கைவிடாமல் கடைப்பிடித்துக்கொண்டு வரவேண்டும். அப்பொழுது ஒவ்வொரு வஸ்துவும் தெளிவாக விளங்கும்.

இவ்விதமாகப் பகவான் எடுத்து விளக்கவும் ம—மற்றுமோர் முறை ஸ்தம்பித்துப் பேசாமலிருக்கிறார். அவர் ஒன்றுக்கொன்று எதிரிடையான உண்மை வாக்கியங்கள் ஈஸ்வரனுக்குப் பொருந்துவன என்பதை பகவானிடத்திலிருந்து அடிக்கடி கேட்கிறார். அவருடைய புஸ்தகங்களில், இவ்வளவு வியப்பைத் தரக்கூடிய ஓர் வாக்கியமாகிலும் அவர் ஒருபொழுதும் பார்த்ததில்லை. இப்புத்தக ஞானத்தைத் தவிர வேறு அறிவு அவருக்கில்லை. அவருடைய அஹங்காரத்திற்கு மற்றுமோர் இடி விழுந்தது. ஆனால் அது இன்னம் முற்றிலும் கீழே

வீழ்ந்துடைந்து நசுக்கப்படவில்லை. ஆகையினால் அவர் பகவானுடன் மேன்மேலும் வாதம் செய்கிறார்.

ம—:—ஸ்வாமி, ஒருவன் ஈஸ்வரனை ரூபமுடையவராகக்கருதலாம்; ஆனால், அவர், நிச்சயமாக, பூசைசெய்யப்படும் மண் முதலானவைகளினால் செய்யப்பட்ட விக்கிரஹங்களல்லவே ?

பகவான்:—நீ யேன் அதை மண்ணினால் செய்த விக்கிரஹமென்று சொல்லவேண்டும்? நிச்சயமாக தெய்வஸ்வரூபம்; சின்மயமானது.

ம— இதை அறிந்துகொள்ள முடியவில்லை. அவர் மேலும் சொல்லுகிறார்: "ஆனால் ஸ்வாமி, விக்கிரஹாராதனை செய்பவர்களுக்கு, அவர்கள் பூசித்துவரும் களிமண்ணினால் செய்த விக்கிரஹங்கள் பகவான் அல்லவென்றும், பகவானைக் கருத்தில் வைக்க வேண்டுமே தவிர விக்கிரஹங்களை வைக்கக்கூடாதென்றும் தெளிவாக விளக்கிக்காட்டுவது ஒருவனுடைய கடமையல்லவா ?"

ஸ்ரீ ராம (சுறுக்கென்று) :— கல்கத்தா வாசிகளாகிய உங்களுக்குப் பிரசங்கம் செய்வது, மற்றவர்களுக்கு ஞானோபதேசம் செய்வது ஆகிய எண்ணங்களும், பேச்சுகளும் மட்டிலுமே நாளுக்கு நாள் பழக்கமாக ஏற்பட்டு வருகின்றன! போகட்டும், நீ எப்படி ஞானம் தேடிக்கொள்ளப் போகிறாய் சொல்லு? மற்றவர்களுக்கு உபதேசம் செய்ய நீயார்? அவசியமானால், உலகங்களைப்படைத்த கடவுள் மனிதர்களுக்கு உபதேசம் செய்வார். எவர் சூரிய சந்திரர்களையும், மனிதர் மிருகங்களையும் சிருஷ்டித்தாரோ, எவர் அவர்களுக்குப்

போஷணைக்கு வேண்டிய மற்றப் பொருள்களையும் சிருஷ்டித்தாரோ, எவர் மாதா பிதாவையும், இம்மாதிரி யாக மற்ற அநேக வகைகளையும் சிருஷ்டித்தாரோ அந்தப் பகவான் அவர்களுக்கு வேண்டிய ஞானத்தைக் கொடுக்கமாட்டாரா? வேண்டுமென்றால் அவர் கொடுப்பது நிச்சயம்.

"மனிதரின் ஹ்ருதயமாகிய ஆலயத்தில் பகவான் வசிக்கிறார். நம்முடைய அந்தரங்கமான எண்ணங்களையும் அவர் அறிகிறார். விக்கிரஹாராதனையில் ஏதாகிலும் குற்றமிருந்தாலும், எல்லாப் பூசனைகளும் தம்மைக்கருதியே செய்யப்படுகின்றன வென்பது அவருக்குத் தெரியாதா? உன்னால் அசாத்தியமான சங்கதிகளிலெல்லாம் தலையிட்டுக்கொண்டு, நீ ஏன் உன்னைத் தொந்தரவு படுத்திக் கொள்ளுகிறாய்? நீ பகவானை வணங்கி அவரை அடையும் வழியை நாடு; பகவானிடம் அன்பு கொள். இது தான் நீ செய்யவேண்டிய கடமை."

ம—வுடைய அஹங்காரம் இப்பொழுது முற்றிலும் நசித்தது. அவர் தமக்குள் யோசிக்கலானார்: "இம்மஹாபுருஷர் சொல்லுவது முற்றும் உண்மையாகத்தானிருக்கிறது. மற்றவர்களுக்குப் போதனை செய்வதில் எனக்கென்ன காரியம்? நான் பகவானை அறிந்தேனா? நான் பகவானைப் பூசிக்கிறேனா? இது எப்படியிருக்கிறதென்றால், 'எனக்குப் படுக்கப் படுக்கையில்லாமலிருக்கும்பொழுது, என் சிநேகிதன் சங்கரனுக்கு என் படுக்கையில் படுத்துக்கொள்ள நான் உபசாரம் செய்வது' போலிருக்கிறது. பகவானைப்பற்றி எனக்கொன்றும் தெரியாது. அப்படியிருக்க மற்ற

வர்களுக்கு நான் உபதேசம் செய்யப்புகுவது, மிகவும் இழிவானதும், அறிவீனமானதுமே. அதற்காக நான் வெட்கப்படவேண்டியதுதான். இது (பகவானை அறிவது), கணிதமோ, அல்லது சரித்திரமோ இலக்கியமோ எதுவுமல்ல ; இது பிரம்ம வித்தை. ஆம், நான் இம்மகாத்மாவின் வாக்கியங்களின் மஹிமையை நன்றாயறிகிறேன்.''

இதுதான் ம— முதலில் பகவானுடன் தர்க்கம் செய்ய எத்தனித்தது. நல்ல வேளையாய் இதுவே கடைசியாக முடிந்தது.

பகவான் :—நீ விக்கிரகங்கள் களிமண்ணால் செய்யப்பட்டவை யென்று சொன்னாய். ஸரி, இப்படிப் பட்ட விக்கிரஹங்களைக்கூட ஆராதிக்கும்படியான அவசியம் சிலசமயங்களி லேற்படுகின்றது. ஈசுவரனே இப்படிப் பலவிதமான ஆராதனை ஏற்படுத்தியிருக்கிறார். அவர்களுடைய அறிவு நிலைமைக்குத் தக்கவாறு ஒவ்வொருவருக்கும் பொருந்தும்படி இவைகளை ஏற்படுத்தியிருக்கிறார்.

''தாயானவள், தன் குழந்தைகளின் வயிற்றிற்கு எவ்விதம் ஒத்துக்கொள்ளுகிறதோ அவ்விதம் ஆகாரம் தயார் செய்கிறாள். ஓர் தாய்க்கு ஐந்து குழந்தைகளிருப்பதாக வைத்துக்கொள்வோம். அவள் ஓர் மீனை வைத்துக்கொண்டு பலவிதமாகச் சமைக்கிறாள். அவள் தன் ஒவ்வொரு குழந்தைக்கும் எது வயிற்றிற்கு ஏற்குமோ அதைத்தானே கொடுக்கவேண்டும். பலஹீனத்தினால் ஜீரண சக்தி குறைந்த ஒருகுழந்தைக்கு வெறும் ரஸம் செய்துவார்க்கிறாள். வேறோர்

குழந்தைக்குப் புளிபோட்டுக் குழம்பு செய்துபோடு கிறாள். மற்றோர் குழந்தைக்கு அதை வறுத்துக்கொடுக் கிறாள். இவ்விதமாகவே ஐந்து குழந்தைகளுக்கும் அவ ரவர்கள் வயிற்றிற்குத் தக்கபடியாக வேண்டியதைச் சரியாகத் தெரிந்து செய்கிறாள். இது உனக்குத் தெரியவில்லையா?"

ம—:—ஆம், ஸ்வாமி; நான் இப்பொழுது அறி கிறேன். பக்தன் ஆரம்பத்தில் பகவானை விக்கிரஹங் கள் மூலமாய்ப் பூஜிக்கவேண்டும். மேலே போகப் போக விக்கிரஹமில்லாமலேயே அவரை வழிபடலாம்.

**பகவான்:**—ஆம். இன்னும், ஒருவன் எப்பொழுது ஈஸ்வரனைத் தரிசிக்கின்றானோ அப்போது விக்கிரஹங் களையும் மற்ற எல்லாவஸ்துக்களையும் சுத்த சைதன்ய மாகக் காண்கிறான். அவனுக்கு விக்கிரஹமுள்பட சகல மும் சைதன்யமாய்விடுகின்றன.

ம—:—ஸ்வாமி, ஒருவன் பகவானிடம் எவ்வித மாகத் தன் மனதைச் செலுத்துவது?

பகவான்:—அதற்காகப் பகவானுடைய அனந்த கல்யாண குணங்களையும், அவருடைய பல திருநாமங் களையும் இடைவிடாது உச்சரித்துக்கொண்டே வர வேண்டும். எப்பொழுதும் ஸத்ஸங்கங்களை நாட வேண் டும். ஈஸ்வரனுக்காக இவ்வுலக ஆசையை வெறுத் தவர்களையோ அல்லது பக்தர்களையோ பின்பற்றி அவர்களுக்கிடையே இருக்கவேண்டும். இவ்வுலகக் கவலைகளுக்கும் ஆசைகளுக்கும் நடுவில், ஒருவன் தன் மனதைப் பகவான்பால் செலுத்துவது மிகவும்கடினம். அதற்குச் சந்தேகமே இல்லை. ஆகவே பகவானைத்தியா

னம் செய்வதற்காக அடிக்கடி ஏகாந்தத்தில் இருக்க வேண்டும். ஆத்மஞான மடைவதற்காகவுள்ள முதல்படியாகிய இந்நிலைமையில் ஒருவன் ஏகாந்தமில்லாமல் முடியாது.

“செடிகள் சிறியவைகளா யிருக்கும்பொழுது, அவைகளுடைய ரக்ஷணைக்காக வேலி அவசியமாக விருக்கிறது. அதில்லாவிடில் ஆடுமாடுகள் அவைகளைத் தின்றுவிடும்.

“மனம், தனியிடம், வனம், இம்மூன்றும் தியானத்திற்குற்ற இடங்கள். நித்தியாநித்திய வஸ்துவைப் பற்றி விசாரணையும் செய்யவேண்டும். இவ்விதம் ஓர் மனிதன் செய்துவந்தால், இந்திரிய சுகம், அதிகாரம், கீர்த்தி, ஐசுவரியம் முதலான இவ்வுலக வஸ்துக்களின் பற்றுதலை உதறித் தள்ளக்கூடும்.”

ம—:—ஸ்வாமி, ஓர் கிருஹஸ்தன் இவ்வுலகில் எம்மாதிரி நடந்துகொள்ளவேண்டும்?

பகவான்:—நீ உன் மனத்தையெல்லாம் ஈஸ்வரனிடம் செலுத்தி நீசெய்யவேண்டிய கடமைகளைச் செய். உன் பெற்றோர், மனைவி, மக்களை உன் சொந்தம் போல் பாவித்து அவர்களுக்கான உன் கடமையைச் செய்; ஆனால் நீ உன் அந்தரங்கத்தில் அவர்களைச் சொந்தமல்ல வென்றறி. அல்லது, அவர்களும் பகவானைப் பஜிப்பவர்களா யிருந்தால் உன் சொந்தமாகப் பாவிக்கலாம். பகவான் ஒருவரே உனக்கு நிஜமாகச் சொந்தமானவர். அவருடைய பக்தர்களும் அப்படியே.

“ஒரு தனவானுடைய வேலைக்காரி தான் செய்ய வேண்டிய வேலைகளை யெல்லாம் சரிவரச் செய்கிறாள்;

ஆனால் அவளுடைய மனம் எப்பொழுதும் தன்சொந்த வீட்டிலேயே சென்றுகொண்டிருக்கும். அவள் எஜமானனுடைய வீடு அவளுடையதன்று. அவள், தன் எஜமானனுடைய குழந்தைகளைத் தன் சொந்தக் குழந்தைகளாகப் பாவித்து, 'என் ராமா,' 'என் ஹரி' என்றழைத்து உண்மையாக அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்கிறாள். ஆனால் எப்பொழுதும் அக் குழந்தைகள் தன்னுடையனவல்லவென்று அவள் நன்றாயறிவாள்.

"ஆமை தன் ஆஹாரத்தைத் தேடிக்கொண்டு ஜலத்தில் சஞ்சரித்துச் செல்கிறது. ஆனால் அதன் மனம் எவ்விடம் இருக்கிறதென்று நினைக்கிறாய்? நிச்சயமாக ஆற்றின் கரையில் தன் முட்டைகளிருக்கும் இடத்தில் தான். அதேமாதிரியாக நீ இவ்வுலகில் உன் வேலையைச் செய்துகொண்டிரு. ஆனால் உன் மனம் எப்பொழுதும் அத்தியந்த சிரத்தையுடன் ஈஸ்வரனுடைய திருவடியிலேயே லயமடைந்திருக்கட்டும்.

"பயிற்சியினால் ஈஸ்வரனிடத்தில் உனக்கு ஆழ்ந்த பக்தி உண்டாவதற்குமுன், நீ உலக விஷயத்தில் புகுவாயானால் உண்மையாக அதில் சிக்கிக்கொள்வாய். துக்கமும், கஷ்டமும், இன்னும் பலவிதமான சரீர நோய்களும் உன் மனச் சமாதானத்தைப் போக்கடித்துவிடும். நீ எவ்வளவுக்கெவ்வளவு உலக வியவகாரங்களில் நுழைந்து அவற்றில் சிரமப்படுகிறாயோ, அவ்வளவுக் கவ்வளவு உலக ஆசை அதிகரிக்கும்.

"பலாப்பழம் நறுக்கவேண்டுமென்ற விருப்பமிருந்தால், முதலில் உன் கையில் எண்ணெயைத் தடவிக்

கொள்ளவேண்டும். இல்லாவிட்டால், அதினின்றும் வரும் பிசின் உன் கையில் ஒட்டிக்கொள்ளும். அது போல நீ முதலில் பக்தியென்னும் எண்ணெயைத் தடவிக்கொண்டு பிறகு உலக விஷயத்தில் ஈடுபடு.

"பக்தியடைவதற்கு ஏகாந்தம் அத்தியாவசியம். நீ வெண்ணெயெடுக்க வேண்டுமானால், பிரைகுத்தின பாலை ஓர் தனிமையான இடத்தில் வை. நடுவில் அதை அசைத்தால் அது தோயாது. அடுத்தபடியாக நீ அமைதியுடன் உட்கார்ந்து கடையவேண்டும்.

"நீ ஏகாந்தத்தில் உன் மனதை ஈஸ்வரனிடம் செலுத்தினால், தியாகம், பக்தி, இவைகளை அடைவாய். அதே மனதை இவ்வுலக விஷயத்தில் செலுத்தினால், அது கீழ்நோக்கி இழிவாகிய காமினி காஞ்சனம் (மண், பெண்) முதலான உலக விஷயத்திலேயே அழுந்திவிடும்.

"இவ்வுலகை ஜலத்திற்கும் மனதைப் பாலுக்கும் ஒப்பிடலாம். பால் ஒரு தரம் ஜலத்தோடு கலந்துவிட்டால் திரும்பவும் அதைச் சுத்தமான நிலைமைக்குக் கொண்டுவரமுடியாது. ஆனால் நீ அதை வேறொரு நிலைமையாக மாற்றினால் மறுபடியும் ஜலத்தில் சேர்க்கலாம்; அதாவது, பாலை வெண்ணெயாகச்செய்து பிறகு அதை ஜலத்திலிடு. உன் மனமென்னும் பாலை ஏகாந்தத்திலிருந்து சாதனையினால் பகவத்பக்தியென்னும் வெண்ணெயாகச்செய். வெண்ணெய் ஒருபொழுதும் ஜலத்துடன் கலக்காது. அது மேலே மிதந்துவரும். அது போலவே, உன் மனமும் இவ்வுலகில் பற்றற்றிருக்கும். உலகிலிருந்தபோதிலும், உலகமயமாகாது. உண்மை

யான ஞானம், அல்லது பக்தியை ஒரு தரம் அடைந்து விட்டால், அது எப்பொழுதும் உலகில் பற்று நீங்கியிருக்கும்.

“இதோடுகூட விவேக விசாரணை செய்: ‘பெண் பொன் இவ்விரண்டும் பொய்; பகவான் ஒருவரே மெய். பணத்தினால் என்ன உபயோகம்? அது நமக்கு உணவும், உடையும், வசிக்க இடமும் கொடுக்கிறது. இவ்வளவே அதனால் உபயோகம். இதற்குமேல் அது போகிறதில்லை. நிச்சயமாகப் பணத்தின் உதவியினால் நீ பகவானை யடையமுடியாது. உயிர்வாழ்க்கையின் முடிவு உண்மையில் தனமல்ல.’ இவ்விதமாக யோசனை செய்வதுதான் விசாரணை. இது உனக்குத் தெரிகிறதா?”

ம—:—ஆம் ஸ்வாமி; தெரிகிறது. நான் இப்பொழுது சமீபத்தில் ‘பிரபோத சந்திரோதயம்’ என்ற ஸம்ஸ்கிருத நாடகத்தைப் படித்தேன். அதில் விசாரணையைப்பற்றி விரிவாக எழுதப்பட்டிருந்தது.

பகவான்:—ஆம், விசாரணை—தனம், ஸ்திரீயின் அழகு, இவற்றில் என்னவிருக்கிறது சொல்? நீ நன்றாய் விசாரணை செய்து பார்த்தாயானால், மிகவும் அழகுடைய ஸ்திரீயின் சரீரமானது இரத்தம், சதை, நரம்பு, மாமிசம், தோல், இவைகளினால் செய்யப்பட்டதென்றும், அதுவுமல்லாமல், மற்ற மிருகங்களைப் போலவே மலம் மூத்திரம் முதலானவைகளால் நிரப்பப்பட்ட குடல் முதலானவை யுடையதென்றும் நீ நன்றாய்அறிந்துகொள்வாய். ஒரு மனிதன் பகவானைவிட்டு, இப்படிப்பட்ட அற்ப விஷயங்களில் தன் மனதைச் செலுத்துவது மிக ஆச்சரியம்!

ம—:—ஸ்வாமி, பகவானைப் பார்க்கமுடியுமா?

பகவான்:—நிச்சயம் முடியும். அதைப்பற்றிச் சந்தேகமே வேண்டாம். பகவானைப்பார்ப்பதற்கு, இவை சில முக்கிய சாதனங்கள்:— ஏகாந்தத்தில் அடிக்கடி போயிருந்து பகவத் தியானம் செய்தல்; அவருடைய அனந்த கல்யாண குணங்களையும், திருநாமங்களையும் இடைவிடாமல் உச்சரித்துக் கொண்டேயிருத்தல்; விவேகவிசாரணைக்காகப் பிரயாசைப்படுதல்; ஊக்கத்துடன் அதி தீவிரமாகப் பகவானை நினைந்துருகித் தோத்திரம் செய்து பிரார்த்தித்தல்.

ம—:—ஸ்வாமி, எவ்வித மனோநிலையினால் பகவத் காட்சி கைகூடும்?

பகவான்:—நீ ஈஸ்வரனுக்காக உள்ளன்புடன் அதி தீவிரமான பக்திகொண்டு உருக்கமுடன் கதறு. அவர் உனக்கு நிச்சயமாகப் பிரசன்னமாவார். ஜனங்கள், மனைவி மக்களுக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் விட்டுக் கதறியழுவார்கள்! இன்னும், அவர்கள் பொருள் சம்பாதிப்பதன் பொருட்டு, தாங்கள் கதறியழும் கண்ணீராகிய நீர்ப்பெருக்கினால் அடித்துக்கொண்டுபோகப் படுவதற்குத் தயாராகவிருக்கிறார்கள்! ஆனால் பகவான் பொருட்டு யார் கதறுகிறார்கள்? பகவானை அடைவதற்காகக் கதறு. வெறும் வெளி வேஷத்திற்காக வேண்டாம். உள்ளன்புடனும், உருக்கமான ஹ்ருதயத்துடனும் பிரார்த்தனை செய்.

"சூரியோதயத்திற்கு முன் செவ்வானம் ஒளிர்கின்றது. அதுபோலவே, மனம் நெக்கு நெக்குருகுவது பின்னால் ஈஸ்வர தரிசனம்அடைவதற்கு அறிகுறியாம்.

"லௌகிகனுக்கு உலகவிஷயங்களிலுள்ள பற்று, தாய்க்குத் தன் குழந்தையினிடம் உள்ள பற்று, ஒரு பதிவ்ரதைக்குத் தன் கணவனிடம் இருக்கும் பற்று ஆகிய இம்மூன்றும் ஒன்று சேர்ந்தால் எவ்வளவு பலமாக விருக்குமோ அவ்வளவு பலமாக பகவானிடம் பற்றுதல் வைத்தாயானால் அவரை நீ பார்க்க முடியும். பகவானையடைய வேண்டுமானால் ஹிருதய பூர்வமாக அவரிடம் பக்தி செலுத்தவேண்டும். ஒருவன் செய்யும் பிரார்த்தனைகள் ஜகன்மாதாவைச் சென்றடையும் படியான அவ்வளவு தீவிரமாக இருக்கவேண்டும்.

"பூனைக்குட்டிகளுக்குத் தங்கள் தாயினிடம் 'ம்யா' 'ம்யா' என்று கத்துகிறதற்குமட்டிலுந்தான் தெரியும்; மற்றவைகளெல்லாம் தாய்ப்பூனைக்கே தெரியும். ஒரு சமயம் சமையலறையிலும், மற்றோர் சமயம் அவ்வீட்டு எஜமானனுடைய மிருதுவான படுக்கை யருகிலும், இவ்விதமாகத் தனக்கு இஷ்டமான விடங்களில் தன் குட்டிகளை ஒளித்து வைக்கிறது. பூனைக்குட்டிகள், எவ்விதம் தங்கள் தாயினிடம் கத்தவேண்டும் என்பது மட்டிலும் அறியும்."

## பிரிவு. 3

### சம்பாஷணையும் சமாதியும்

கோவிலுக்கு ஒரு மைல தூரத்திலிருக்கும் வாரநாகூரில், தன்சகோதரி வீட்டில், ம— இருந்துவருகிறார். ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்ததுமுதல், அவரை நினையாமல் ம— அரை நிமிஷமேனும் இருக்கமுடியவில்லை. எப்பொழுதும் குருநாதன் புன்சிரிப்புடன் தம் எதிரிலிருப்பதாகவும், அமிருதம்போன்ற அவருடைய இனிய வாக்கியங்களைத் தாம் கேட்டுக் கொண்டிருப்பதாகவும் அவருக்குத் தோன்றுகிறது. ம— அடியில் வருமாறு தமக்குள் சிந்திக்கிறார்: "எவ்விதம் இப்பேதைப்பிராம்மணர் ஆத்மஞான ரகசியங்களையறிந்திருப்பார்! அவருடைய உபதேசங்கள் எவ்வளவு தெளிவாக இருக்கின்றன!" ம—வுடைய உற்சாகம் ஆச்சரியப்படத்தக்க விதமாய்ப் பொங்க ஆரம்பித்தது. மற்றோர்தரம் அம்மஹானைப் பார்க்க எப்பொழுது சமயம் ஏற்படுமோ என்று ம— இரவும் பகலும் ஏங்கிக்கொண்டிருக்கிறார். அடுத்த ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம், இரண்டு மூன்றுமணி சுமாருக்கு, வாரநாகூரிலிருக்கும் நேபால் பாபுவோடு ம— ஆலயத்துக்கு வருகிறார்.

பகவான் முன் எந்த அறையில் எந்த ஆசனத்தில் வீற்றிருந்தாரோ அதேவிதமாய் வீற்றிருந்தார். அவ்வறை முழுவதும் பக்தர்கள் நிறைந்திருக்கிறார்கள். ஞாயிற்றுக்கிழமை யாகையால் அவர்களுக்கு இன்று வேலை கிடையாது. அவர்களில் ஒருவரையேனும்

ம—அறியார். அவர் பகவானைக் கைகூப்பி வணங்கியதும் ஒரு பக்கத்திலுட்காருகிறார். அங்கிருக்கும் பக்தர்களிடம் பகவான் புன்சிரிப்புடன்பேசுகிறார். அவ்விதம் அவர் பேசும்பொழுது, அடிக்கடி, பத்தொன்பதுவயது வாலிபரான நரேந்திரர் (விவேகாநந்தர்) என்பவரைப் பார்த்துப்பேசுகிறார். நரேந்திரர் ஒரு கலாசாலை மாணாக்கர்; ஸாதாரண பிரம்மஸமாஜத்தின் அங்கத்தினர்; அவருடைய வார்த்தைகள் மிகவும் கம்பீரமாயிருக்கின்றன. அவரது கண்கள் கறுத்து விசாலமானவைகளா யிருக்கின்றன. அவை சைதன்னியத்திறைல் பிரகாசித்து, உள்ளிருக்கும் ஆத்ம மகத்துவத்தை யறிவிக்கின்றன. அவர் பக்தனுடைய சகல லக்ஷணங்களும் நிறைந்து விளங்குகிறார்.

பிரம்ம விசாரத்திலிருப்பவர்களை அவமதிப்பாகப் பேசும் லோகாயதர்களின் நடத்தையைப்பற்றியும் அப்படிப்பட்டவர்களிடம் எப்படி நடந்துகொள்வது என்பதைப்பற்றியும் சம்பாஷணை நடந்துகொண்டிருப்பதாக ம— அறிந்தார்.

பகவான் (சிரித்துக்கொண்டு, நரேந்திரரிடம்):— உன் அபிப்பிராயமென்ன, நரேந்திரா? உலகவாழ்க்கையிலிருக்கும் மனிதர்கள் பக்தர்களைப்பற்றிப் பலவாறுகப் பேசுகிறார்கள். ஒரு யானை தன் வழியாகச் செல்லும்பொழுது பல நாய்களும் இன்னும் இதர மிருகங்களும் அதனைப் பின்தொடர்ந்து குலைத்துக்கொண்டும் கூச்சலிட்டுக்கொண்டும் ஓடுகின்றன. ஆனால் யானையோ, கொஞ்சமேனும் செவிகொடாமல் தன் வழி நோக்கியே செல்லுகிறது. அப்பா, உன்னைப்பற்றி

உன் மறைவில் இகழ்ச்சியாகப்பேசும் மனிதர்களைப் பற்றி நீ என்ன நினைப்பாய் ?

நரேந்திரர்:—நான் அம்மனிதர்களை என்பின்னின்று குலைக்கும் தெரு நாய்களுக்குச் சமானமாக நினைப்பேன்.

பகவான (சாந்தத்துடன்கொண்டு):—இல்லை; அப்பா, நீ அவ்வளவு தூரம் போகக்கூடாது. (யாவரும்சிரித்தல்) சேதனம் அசேதனமாகிய எல்லாவற்றிலும் பகவான் வாசம் செய்கிறார் என்றறி. ஆகையினால், மனிதர், மிருகம், பக்ஷி, தாவரம், உலோகம் முதலான எல்லாவற்றிலும் நாம் கடவுளைப்பார்த்து வணங்கவேண்டும்.

"நாம் மனிதர்களோடு பழகும்பொழுது, துஷ்டர்களை விலக்கி நல்லவர்களோடு பழகவேண்டும். பகவான் புலியினிடமும் இருப்பது நிஜமே. ஆனால் எவனாவது அக்காரணத்தைக்கொண்டு புலியைத் தழுவிக்கொள்ள வேண்டுமென் றேற்படவில்லை. 'புலியும் கடவுளின் ஓர் ரூபந்தானே ; நாம் ஏன் அதைக்கண்டு ஓடவேண்டும்?' என்று சிலர் சொல்லலாம். ஆனால் புலியினிடம் அகப்படாமல் ஓடிவிடு என்று சொல்லும் மனிதர்களும் கடவுளின் வேறு ரூபங்கள் அல்லவா ? அப்படியிருக்க அவர்கள் வார்த்தையை நாம் ஏன் அலக்ஷியம் செய்யவேண்டும் ?

"ஒரு வனத்தில் யோகி ஒருவர் தம் சிஷ்யர்களோடு இருந்து வந்தார். ஒருநாள் சிஷ்யர்களைப்பார்த்து, 'பகவான் ஸர்வவியாபி. அவர் எல்லாவற்றிலுமிருக்கிறார். ஆகையினால், இதை அறிந்து நாம் எந்தவஸ்து

வைப்பார்த்தாலும் பகவானைப் பூஜிப்பது போலவே வணங்கிப் பூஜிக்கவேண்டும்' என்றார். இப்படியிருக்கையில், சிஷ்யர்களிலொருவன் ஒருநாள் ஹோமத்துக்கு ஸமித்து கொண்டுவருவதற்காகச் சென்றான். அப்பொழுது, 'யானை மதம்பிடித்து ஓடிவருகிறது; வழியில் நிற்கவேண்டாம்; விலகிப்போ, விலகிப்போ' என்னும் சத்தத்தைக்கேட்டான். இதைக்கேட்டதும் சிஷ்யனைத் தவிர மற்றெல்லோரும் ஓடிவிட்டார்கள். சிஷ்யனோ தனக்குள்ளே, 'இந்தயானையும், பகவானுடைய ஒரு ரூபந்தானே; இப்படியிருக்க நான் ஏன் ஓடவேண்டும்?' என்று சிந்தித்து யானையைப் பகவானென்று நமஸ்கரித்துநின்றவிடத்திலேயே இருந்து ஸ்தோத்திரம்செய்ய ஆரம்பித்தான். யானைப்பாகனோ திரும்பவும், 'எதிரில் நில்லாதே, விலகிப்போ, விலகிப்போ' என்று சொல்லியும் சிஷ்யன் ஓரடியும் நகரவில்லை. கடைசியாக அம்மத யானை தன் துதிக்கையினால் அச்சிஷ்யனை எடுத்து ஓர் பக்கமாக எறிந்து விட்டது. சிஷ்யன் உடம்பெல்லாம் காயமடைந்து, இரத்தப்பிரவாகத்துடன் கீழே விழுந்த வண்ணம் மூர்ச்சை யடைந்தான்.

"குரு இச்சங்கதியைக் கேட்டு மற்றச்சிஷ்யர்களோடு அவ்விடம் வந்துசேர்ந்தார். வீழ்ந்துகிடக்கும் சிஷ்யனைத் தமது இருப்பிடம் எடுத்துச் சென்று மூர்ச்சை தெளியும்படியாக மருந்துமுதலானவைகொடுத்து, சிஷ்யன் மூர்ச்சைதெளிந்து எழுந்தவுடன், அவர், 'யானைப்பாகன் மதயானை வருகிறது விலகிப்போ என்று கூவும் போது நீஏன்வழிவிடவில்லை?' என்று அவனைக்கேட்டார். அதற்கு அவன் 'பகவான் ஸர்வ வியாபியென்றும், உயிர்

வாழ்வனவாய எல்லாப்பிராணிகளிலும் இருக்கிறார் என்றும், தாங்கள் சொன்னதினால், நான் யானையையும் பகவானாகப் பாவித்துப் பயமற்று வழியிலேயே நின்றேன்' என்றான். அதற்கு குரு, 'அப்பா, நீ யானையைப்பகவானாக பாவித்தது நியாயமே. ஆகிலும் யானைப்பாகனாகிய பகவான் உன்னை வழிவிட்டு விலகு என்று எச்சரிக்கவில்லையா? பகவான் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறானென்பது வாஸ்தவம். ஆதலால், பகவான் யானையில் வசிக்கிறதாயிருந்தால், அதுபோலவே யானைப்பாகனிலும் அவர் இருக்கவில்லையா? யானைப்பாகனாகிய பகவானுடைய எச்சரிக்கையை நீ யேன் அலக்ஷியம் செய்தாய்?' என்றார்.

"நமது வேதங்களில், ஜலம் பகவத்ஸ்வரூபமென்று சொல்லப்பட்டிருக்கிறது. சில ஜலம், பகவத் அபிஷேகத்திற்கு அருகமாயிருக்கின்றன. சில, கைகால் அலம்புவதற்கும் ஆடைகள் பாத்திரங்கள் முதலியன சுத்தம் செய்வதற்கும் உபயோகப்படுகின்றன. ஆனால் இவை பானம் பண்ணவாவது சுவாமிக்கு அபிஷேகம் செய்யவாவது உதவா. அவ்விதமே மனிதர்களில் சிலர் நல்லவர்களாகவும், சிலர் துஷ்டர்களாகவும், அதாவது சிலர் சதா பகவானை நாடுகிறவர்களாகவும், சிலர் கனவிலும் அவரை நினையாதவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களெல்லோரிடத்திலும் பகவானிருக்கிறாரென்பதுண்மையே. ஆனாலும், பின்சொன்னவர்களோடு நாம் நெருங்கிச் சகவாசம் செய்யக்கூடாது. சிலருடன் தலையசைப்பு மாத்திரம் வைத்துக்கொள்ள வேண்டும். மற்றும் சிலருடன் அதுவும்கூட வைத்துக்

கொள்ளக்கூடாது. அப்பேர்ப்பட்டவர்களிட மிருந்து முற்றும் விலகியிருப்பதே தகுதி."

நரேந்திரர்:—ஸ்வாமி, துஷ்டர் நம்மைத் தொந் தரவு செய்ய வந்தாலோ, அல்லது நமக்குத்தீங்கு செய் தாலோ நாம் சும்மாதா னிருக்கவேண்டுமோ?

பகவான்:—ஜன சமூகத்திலிருக்கும் ஒருவன், அதிலும் நகரவாசியாகிய ஒரு கிருஹஸ்தன், தன்னைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகவேண்டித் துஷ்டர்களை நிக்ரஹம் செய்பவனைப்போல் பாவனைசெய்ய வேண்டும். ஆயினும் பதிலுக்குப் பதில் தீங்கு செய்யாமல் ஜாக்கிர தையாயிருக்கவேண்டும்.

"ஒரு காலத்தில் மாடுமேய்க்கும் சிறுவர்கள் சிலர் தங்கள் மாடுகளை ஒரு மைதானத்தில் மேய்த்து வந் தார்கள். அவ்விடத்தில், பயங்கரமான கொடிய சர்ப்பம் ஒன்று இருந்து வந்தது. ஒரு நாள், ஒரு மஹான் அவ் வழியாக வந்தார். அச்சிறு கோபாலர்கள் அவரிடம் ஓடி, 'ஓ சுவாமி! தாங்கள் அவ்வழியாய்ப் போகவேண் டாம். அவ்விடம் கொடிய சர்ப்பம் ஒன்றிருக்கிறது' என் றார்கள். அப்புண்ணிய புருஷர் அவர்களை நோக்கிச் சொன்னதாவது: 'குழந்தைகாள்! உங்கள் சர்ப்பத்தி னிடம் எனக்குப் பயமில்லை. எவ்விதத் தீங்கிலிருந் தும் என்னைக் காப்பாற்றிக்கொள்ள எனக்கு மந்திரங் கள் தெரியும்' என்று சொல்லிக்கொண்டு அவர் அவ் வழியாகச்சென்றார். அச்சிறுவர்கள் சர்ப்பத்தின் பயத் தினால் அவரைப் பின்தொடர்ந்து போகவில்லை. அம் மஹானைக் கண்டவுடனே அந்தச் சர்ப்பம் படத்தை

எடுத்துக்கொண்டு சீறி அவரை நோக்கி ஓடிவந்தது. அவர் ஏதோ ஒருமந்திரம் ஜபிக்க, அக்கொடிய சர்ப்பம் புழுவைப்போல அடங்கி அவர்காலடியில் வீழ்ந்தது.

அப்போது அவர் அச்சர்ப்பத்தை நோக்கி, 'ஏ சர்ப்பமே! நீ யேன் இவ்விதமாக மற்றவர்களுக்குத் தீங்கு செய்கிறாய்? நான் உனக்கு ஓர் பகவன்னாமத்தை உபதேசம் செய்கிறேன். நீ அதை இடைவிடாமல் ஜபித்து வந்தாயானால் உனக்குப் பகவத்பக்தி ஏற்படும். பகவான் உனக்குப் பிரத்தியக்ஷமாவார். தீங்கு செய்யும் குணம் உன்னைவிட்டு விலகும்' என்று சொல்லி, அப்பெரியார் பகவான் திரு நாமத்தை அதற்கு உபதேசித்தார். அப்பொழுது சர்ப்பம் அவர் காலில் விழுந்து நமஸ்கரித்து, 'ப்ரபோ! மோக்ஷ ஸாம்ராஜ்யம் அடைய நான் என்ன செய்யவேண்டும்?' என்று வினவியது. அதற்கு அம்மஹான், 'உனக்கு நான் உபதேசித்ததை இடைவிடாமல் ஜபித்துவா! பகவத் சிருஷ்டி ஒன்றிற்கும் தீங்கு செய்யாதே. நான் திரும்பவும் வந்து உன்னைப் பார்க்கிறேன்' என்று சொல்லித் தம் வழியே சென்றார்.

"நாட்கள் சில கழிந்தன. அச்சிறு கோபாலர்கள் சர்ப்பம் கடிக்காததை யறிந்தார்கள். அவ்விதம் அது கடிக்கிறதில்லை என்று நன்றாய் அறிந்ததும் அதன் மேல் கற்களை விட்டெறிந்தார்கள். அந்தச் சர்ப்பமோ, தீங்கற்ற புழுவைப் போல் அடங்கி ஒடுங்கியிருந்தது. அப்பொழுது அச்சிறுவர்களி லொருவன் அந்த சர்ப்பத்தின் வாலைப் பிடித்திழுத்துக் கிறுகிறுவென்று சுழற்றிப் பூமியின்மேல் அனேகந்தரம் அடித்

தான். சர்ப்பம் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு குற்றுயிராய் மயங்கிக் கிழேகிடந்தது. அன்றிரவு நெடுநேரம் கழித்துத் தன்னறிவு வரவும், மெல்ல மெல்ல நகர்ந்துத் தன் புதரை அடைந்தது. அதன் சரீர முழுவதும் காயமடைந்திருந்தது.

"வெகுநாள் வரைக்கும் இரை தேடக்கூடச் சக்தியற்று, மிகவும் மெலிந்து போயிற்று. அச்சிறுவர்களின் பயத்தினால், அது இரவில்தான் இரை தேட வெளியில் வரும். மஹானால் உபதேசம் பெற்றநாள் முதல், பகவத் சிருஷ்டி எதற்கும் தீங்கு செய்வதை ஒழித்து, அந்தச் சர்ப்பம் புற்பூண்டுகளையே உணவாகக் கொண்டு தன் வாழ்நாளைக் கழித்துவந்தது.

"இப்படிச் சிலகாலம் சென்றதும் அம்மஹான் திரும்பவும் அங்குவந்தார். சர்ப்பத்தை வெகு நேரம் தேடியும் காணவில்லை. அச்சிறு கோபாலர்கள் சர்ப்பம் மரித்துவிட்டதென்று சொன்னார்கள். அம்மஹாத்மாவோ, தம் மந்திரத்தின் சக்தியினால் பகவானை அடைகிறவரைக்கும் அச்சர்ப்பும் மரணமடையாதென்றுள்ள நம்பிக்கையினால், அச்சிறுவர்களின் வார்த்தையை நம்பவில்லை. பலதரமும் அந்தச் சர்ப்பத்தின் பெயரைச் சொல்லி யழைத்த பிறகு, அது தன் புற்றினின்றும் வெளியே வந்து குருவை நமஸ்கரித்தது.

"பின்னர் அவர்கள் இருவருக்கும் நடந்த சம்பாஷணை வருமாறு:—

மஹான்:—என்ன, சௌக்கியமா?

சர்ப்பம்:—பிரபோ, பகவத் அநுக்ரஹத்தினால் சௌக்கியமாக விருக்கிறேன்.

மஹான்:—ஏன், மிகவும் இளைத்து வெறும் எலும்பும் தோலுமாயிருக்கிறாயே! யாது காரணம்?

சர்ப்பம்:—ப்ரபோ, தங்கள் ஆக்ஞைப்படி எந்தப் பிராணியையும் இம்ஸிக்காமலிருக்க முயலுகிறேன்; இலை முதலானவைகளை உணவாகக் கொள்ளுகிறேன். அக்காரணத்தினால் நான் முன்னிருந்ததைவிட இப்பொழுது இளைத்திருக்கலாம்.

மஹான்:—ஆகாரத்தினால் மட்டும் உனக்கு இம்மாதிரியான நிலைமை வந்திருக்கமாட்டாது என்று நினைக்கிறேன். வேறு ஏதாகிலும் காரண மிருந்திருக்க வேண்டும். யோசித்துப்பார்.

சர்ப்பம்:—ஆ ஹா! இப்பொழுதுதான் எனக்கு ஞாபகம் வருகிறது. ஒரு நாள் கோபாலச் சிறுவர்கள் என் வாலைப் பிடித்துச் சுழற்றிப் பூமியின்மீது அனேகந்தரம் அடித்தார்கள். என்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட பெரிய மாறுதல்கள் எளியோரான அச்சிறுவர்களுக்குத் தெரியாது. நான் அவர்களைக் கடிக்கமாட்டே னென்றாவது அல்லது தீங்கொன்றும் செய்யமாட்டேனென்றாவது அவர்களுக்கு எப்படித் தெரியும்?

மஹான்:—சீ, சீ, அவ்வளவு கேவலமாக அவர்கள் உன்னைத் தொந்தரவு செய்ய, அவர்களது துஷ்டச்செய்கைகளிலிருந்தும் காப்பாற்றிக் கொள்ள உனக்குத் தெரியாமற்போனது மிகவும் மதியீனம். பகவானால் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு பிராணியையும் கடிக்கவேண்

டாம் என்று தானே சொன்னேன். உன்னைக் கொல்ல வருபவர்களைக் கடிக்காமல் சீறி அவர்களை மிரட்டி, நீ தப்பிக்கொள்ளும் வழியைத் தேடிக்கொள்ளாதது ஏனோ?''

ஸ்ரீ ராமகிருஷ்ணர் மேலும் சொல்லுகிறார்:''ஆகையினால் படமெடுத்துச் சீறு; ஆனால் கடிக்காதே. உன் சத்துருக்களாகிய கெட்ட மனிதர்களைச் சீறிப் பயப்படுத்துவதனால் தீங்கில்லை. நீ தீங்கைத் தடுக்கும் வகையை யறிந்து பதிலுக்குப் பதில் செய்யத் தயாராகவிருப்பதைப்போல் காண்பித்து, சத்துருக்களை விலக்கு. ஆனால், உன் விஷத்தை மாத்திரம் சத்துருவின் மீது செலுத்தாமல் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். தீங்குக்குப் பதில் தீங்கு செய்து அத்தீங்கைத் தடுக்காதே. உன்னைக்காப்பாற்றிக்கொள்ள உனக்குச் சக்தியிருக்கிறதென்பதை மட்டிலும் நீ குறிகளால் காண்பி.''

ஒரு சிஷ்யன்:—ஸ்வாமி, பகவத் ஸ்ருஷ்டியில் துஷ்டர்கள் ஏன் இருக்கவேண்டும்? இவ்வுலகில் தீமை ஏன் இருக்கிறது?

பகவான்:—வேறுபாடே பகவத் ஸ்ருஷ்டியின் முறை. நன்மை தீமை இவ்விரண்டும் இருக்கவேண்டியதுதான். மேலும், மிருகங்கள், விருக்ஷங்கள், உலோகங்கள் முதலாகிய அநேக வர்க்கங்களிருக்கின்றன. அவற்றுள் மிருகங்களில் சில சாந்தமாயும் தீங்கற்றவையாயும், மற்றும் சில புலியைப் போல் குரூரமாயும், இதர மிருகங்களைப் பக்ஷித்து ஜீவிப்பவையாயும் இருக்கின்றன. சில விருக்ஷங்கள், அமிருதம் போன்ற

இனிய பழங்களைத் தருகின்றன. மற்றும் சிலவோ மரணத்தை உண்டாக்கும்படியான விஷத்தோடு கூடிய பழங்களைக்கொடுக்கின்றன. அதேமாதிரி, நல்லவர்களும், கெட்டவர்களும், மகான்களும், பாபிகளும் இருந்துவருகின்றனர். சிலர் நியாயமாயும், பகவத் பக்தியோடு கூடியுமிருக்கிறார்கள். மற்றும் சிலரோ, உலகப்பற்றுடையவர்களா யிருக்கிறார்கள்.

"மனிதர்களை நாலுவகுப்பாகப் பிரிக்கலாம். 1. லௌகிகர்கள் (உலகப்பற்றுதலுள்ளவர்கள்). 2. முமுட்சுக்கள் (உலகப்பற்றினின்று நீங்க முயலுபவர்கள்). 3. முக்தர்கள் (பந்தத்தினின்றும் விடுபட்டவர்கள்). 4. நித்தியமுக்தர்கள் (பந்த மில்லாதவர்கள்).

"நித்தியமுக்தர்கள்—மஹரிஷியான நாரதரும் அவர்போன்ற மற்றவரும். இவர்கள், மற்றவர்களுக்காக உழைத்து, உண்மைத் தத்துவத்தை அவர்களுக்கு எடுத்துரைப்பதற்காக உலகில் இருந்து வருகிறார்கள்.

"லௌகிகர்—இவர்கள், உலக விஷயமான தனம், கீர்த்தி, அதிகாரம், இந்திரிய சுகம் முதலானவைகளில் பற்றுதலுடையவர்கள். இவர்கள் தெய்வத்தை மறந்து, கொஞ்சமேனும் தங்கள் மனதைப் பகவானிடம் செலுத்தாதவர்கள்.

"முமுக்ஷுக்கள்—இவர்கள் தங்களாலியன்றமட்டும், காமினிகாஞ்சனம் (பெண்பொன்) இவ்விரண்டையும் விலக்க முயற்சிசெய்கிறவர்கள். இவர்களில் வெகுசிலருக்கே அவர்கள்தேடும்முக்தி கிட்டுகின்றது.

"முக்தர்கள்—இவர்கள் பெண், பொன் இவ்விரண்டையும் முற்றும் விலக்கினவர்கள். இவர்களுக்கு

உதாரணமாகத் தெய்விக மனிதர்களைச் சொல்லலாம். உலகப் பற்று இவர்கள் மனத்தில் சிறிதேனும் இல்லை. இவர்கள் எப்பொழுதும் பகவானுடைய திருவடியையே தியானித்துக்கொண்டிருப்பார்கள்.

"ஒரு குளத்தில் மீன் பிடிக்கும் வலையை விசிறினால், சிலமீன்கள் செம்படவன் வலையில் அகப்படாமல் புத்திசாலித்தனமாகவும் அதி ஜாக்கிரதையாயும் தப்பித்துக்கொள்ளுகின்றன. ஆனால் இவைகள் சொற்பமே. இவைகளை நித்தியமுக்தர்களுக்கு ஒப்பிடலாம்.

"பெரும்பான்மையான மீன்கள் வலையில் அகப்பட்டுக் கொள்ளுகின்றன. இவைகளிற் சில தப்பியோடத் தம்மாலான மட்டும் முயற்சிசெய்கின்றன. இவைகளை முமுக்ஷுக்களுக்கு ஒப்பிடலாம். அவ்விதம் முயற்சி செய்பவைகளில் ஒன்றிரண்டு தான் வலையினின்றும் தப்பி ஜலத்திற் குதிக்கமுடியும். அவ்விதம் அவை ஜலத்தில் குதிக்கும் பொழுது செம்படவனும் மற்றவரும், 'இதோ பார்! ஒரு பெரிய மீன் தப்பியோடுகிறது' என்று சொல்லுகிறார்கள். இவைகள் முக்தர்களுக்குச் சமானம். வலையிலகப்பட்ட பெரும்பான்மையான மீன்களால் தப்பியோட முடிகிறதில்லை. அவைகள் வலையிலகப்பட்டதும் தவிர, தப்பியோடக் கொஞ்சமேனும் வழிதேடாமல், கீழிருக்கும் சேற்றில் தலையை இட்டுக்கொண்டு, 'இனி நமக்கு ஒரு கெடுதியும் ஒரு பயமும் வராது; நாம் பத்திரமாய் இருக்கிறோம்' என்று நினைத்துக்கொண்டு சும்மா விருக்கின்றன. அந்தோ! அடுத்த நிமிஷம் செம்படவன் வலையை இழுத்துக் கரையின்மீது தங்களைப் போடப்போகிறா

னென்று இச்சிறு பிராணிகள் அறியா ! இவைகளுக்கு உபமானமாக உலக வாழ்க்கையில் மூழ்கியிருக்கும் லௌகிக ஜனங்களைச் சொல்லலாம். இப்பாமரர்கள் சேற்றினால் ஆன வீட்டையே பத்திரமான இடமாக நினைக்கிறார்கள். அந்தோ! உலக வலையில் சிக்கிச் சீக்கிரத்தில் ஜீவனையிழந்து, தரையின்மீது போடப்படுவதை யறிகிறதில்லை!

"உலகில் பந்தமென்பது பெண், பொன் இவ்விரண்டினாலும் உண்டாவதாகும். உலக வாழ்க்கையில் மூழ்கினவர்களுக்கு, கை கால் இரண்டும் கட்டப்பட்டிருக்கின்றன. அவர்கள், தடாகத்தின் அடியிலிருக்கும் சேற்றுக் கொப்பான பெண், பொன் இவ்விரண்டினால், சமாதானமும் சாந்தியும் அடைவோமென்றிருக்கின்றனர்; இவை ஆத்மாவை மறைக்கு மென்று இவர்கள் அறியார்கள். இந்த லௌகிகர்களில் ஒருவனுக்கு அந்திய கால மேற்படும்பொழுது, அவன் மனைவி அவனைப்பார்த்து, 'ஐயோ! நீ இவ்வுலகைவிட்டுப் போகிறாயே! எனக்கு என்ன ஆஸ்தி வைத்துவிட்டுப் போகிறாய்?' என்கிறாள். அவள் பகவானைப்பற்றி ஒரு வார்த்தையேனும் பேசுகிறாளில்லை. மரணாவஸ்தைப் படுகிறவனோ உலக பாந்தவ்யத்தால் தன்னறையில் விளக்கு எரிவதுகூடச் சகிக்காமல், 'யாரங்கே? வீணாய் எண்ணெயும் திரியும் அநியாயமாய்ச் செலவழிக்கிறீர்களே! விளக்கைக் குறைத்து விடுங்கள்' என்கிறான்.

"உலகப்பற்றுள்ளவர்கள் கடவுளை ஒருபொழுதும் ஸ்மரியார்கள். தங்களுக்கு வேலைகளில்லாமலிருக்கும்பொழுது, ஒன்றுக்கும் உபயோகமற்ற வேலையைச்

செய்தோ வீண் வம்பு பேசியோ தங்கள் காலத்தைப் போக்குவார்கள். 'ஏனடா இப்படிச் செய்கிறாய்?' என்று கேட்டால், 'சும்மாவிருக்க என்றால் முடியவில்லை. ஆகையினால், வேலியாகிலும் கட்டலாமெனச் செய்கிறேன்' என்று சொல்வார்கள். அல்லது சீட்டாட்டம், சொக்கட்டான் இவைகளில் தம் காலத்தைப் போக்குவார்கள்.''

இப்பொழுது அறை நிசப்தமா யிருக்கிறது.

ஓர் சிஷ்யன்:—ஸ்வாமி, உலக வாழ்க்கையிலிருக்கும் மனிதனுக்கு விமோசனமெப்படி? அவன் கடைத்தேற வழியொன்று மில்லையா?

ஸ்ரீராமகிருஷ்ணர்:— ஆஹா! வழியிருக்கிறது. அவன் ஸத்ஸங்கத்தை நாடட்டும். ஸம்ஸாரத்திலிருந்து விலகி அடிக்கடி ஏகாந்தத்தை யடைந்து, பகவானைத் தியானம் செய்யட்டும். நித்யவஸ்து எதுவென்று அவன் விசாரணை செய்யட்டும். தனக்குப் பக்தியும் சிரத்தையும் ஏற்பட, உருக்கமுடன் ஜகன்மாதாவை ஸ்தோத்திரம் செய்து பிரார்த்திக்கட்டும். சிரத்தை உதித்தால் வேலை பூர்த்தியாய்விட்ட. சிரத்தையை விட மேலானது ஒன்றுமில்லை யென்பது நிச்சயம். (கேதாரைப் பார்த்து) சிரத்தைக்கு இருக்கும்படியான சக்தியைப் பற்றி நீ கேட்டிருக்கலாம். ஸ்ரீராமச்சந்திரர், தாம் பகவத் அவதாரமாயிருந்தும், இலங்கைக்குப் போக ஒரு அணை கட்ட வேண்டியிருந்தது. ஆனால் அவர் பக்தன் ஹனுமான், அவருடைய நாமத்தில் அளவற்ற சிரத்தையிருந்ததினால், அத்திவ்விய நாமத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே சமுத்திரத்தைக் கடந்து

இலங்கையை யடைந்தார். ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி, சிரத்தையின் மகிமையைக் காண்பிக்கும் பொருட்டுச் சமுத்திரத்தைக் கடக்கத் தாம் பாலம் கட்டவும், அவருடைய பக்தனான ஹனுமான் சிரத்தா விசேஷத்தினால், கேவலம்அவருடைய நாமோச்சாரணத்தினாலேயே பாலமின்றிச் சமுத்திரத்தைக் கடந்த மகிமையைப் பார்!

"மற்றோர் பக்தர் சமுத்திரத்தைக் கடக்கவேண்டுமென்று தம்மிடம் வந்த ஒருவனுக்கு 'ராமா' என்னும் திவ்ய நாமத்தை ஓர் ஓலைத் துண்டில் எழுதிக் கொடுத்து, 'நண்பனே, பயப்படாமல் சிரத்தையோடிரு. சமுத்திரத்தைக் கடப்பாய். ஆனால் சிரத்தையை நீ இழந்தால் சமுத்திரத்தில் மூழ்கிவிடுவாய்' என்றார். அம்மனிதன் அத் திவ்ய நாமம் எழுதியிருக்கும் ஓலையைத் தன் வஸ்திரத்தில் பத்திரமாய்முடிந்துகொண்டு சமுத்திரத்தின்மீது நடந்து கடக்கலானான். அப்படிப் போகையில் எழுதிக்கொடுத்தது என்ன வென்று அறியும் விருப்பத்தோடு அவ்வோலையை அவிழ்த்துப் பார்க்க, பெரும் எழுத்துக்களில், 'ராமா' என்று எழுதியிருப்பதைப் பார்த்து, 'இவ்வளவுதானா ; ராமா என்கிற பெயர்தானா?' என்று நினைத்த மாத்திரத்திலேயே சிரத்தையை இழந்தவனாய்ச் சமுத்திரத்தில் மூழ்கிவிட்டான்.

"ஒருவனுக்குப் பகவானிடம் சிரத்தையொன்று மட்டிலுமிருக்குமானால் அவன் மோக்ஷ மடைவான். அவன் ஸ்திரீஹத்தி, பிரம்மஹத்தி முதலான மஹா பாபங்கள் செய்திருந்த போதிலும் சிரத்தையுடன், 'ஈசா, நான் இவ்விதம் செய்கிறதில்லை' என்று

மனப்பூர்வமாய்ச் சொன்னவுடனேயே மோக்ஷத்தை யடையப் பக்குவமுள்ளவனாகிறான்.''

பகவான் அடியில் வரும் கருத்தடங்கிய பாடலைப் பாடினார்:—

"என் தாயே! என் மரணகாலத்தில் உன் திவ்யநாமம் என்னுடைய நாவிலிருக்குமேயானால், நான் நிச்சயமாக மோக்ஷமடையாமலிருப்பேனோ? உன் திவ்யநாமத்தை நான் ஸ்மரித்துக்கொண்டிருந்தால் மதுபானம், சிசுஹத்தி ஸ்திரீ ஹத்தி பிரம்மஹத்திஆகிய மஹாபாவங்கள் நான் செய்திருந்தபோதிலும், அவைகளென்னை ஒரு நிமிஷமேனும் தொந்திரவு செய்யமாட்டா. உன் நாம மகிமையினால், உலக சிருஷ்டிகர்த்தாவினுடைய பிரம்ம பதத்தையும் நான் அடைவேன்."

பகவான் தம்மெதிரி லிருக்கும் நரேந்திரரைக் காட்டிச் சொல்லுகிறார்:—"சாந்தத்தோடும், கபடமற்றும் இருக்கும் இச்சிறுவனைப்பாருங்கள்; மிகவும் துஷ்டத்தனமுள்ள எந்தப்பையனும் தன் பிதாமுன் னிலையில் சாந்தத்தோடிருப்பானென்பது உண்மையே. ஆனால் தெருவில் விளையாடும்போது அவன் வேறு பையனாகத் தோற்றுவான். ஆனால் இவனைப்போன்ற வாலிபர்களை நித்தியமுக்தர்களுக்கு ஒப்பிடலாம். இவர்கள் ஒருபொழுதும் ஸம்ஸாரவலையில் சிக்கிக்கொள்ள மாட்டார்கள். அவர்கள் கொஞ்சம் வயதானவுடனே தங்கள் உள்ளம்தெளிந்து, பகவானைநோக்கிச்செல்கிறார்கள். உலக சம்ரக்ஷணார்த்தம் உபதேசம் செய்ய இணங்கித் திரும்பிவருகிறார்கள். உலகவிஷயங்களான, காமினி காஞ்சனங்கள் அவர்கள் மனதைக் கவரா.

"வேதத்தில், ஹோமா என்னும் ஒரு பக்ஷியைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அது பூமியின் சந்தடியைவிட்டு, வெகு உயரத்தில் ஆகாயத்தையே தன் னிடமாகக் கொண்டிருக்கிறது. அவ்விடத்திலேயே அது முட்டையிடும். அம் முட்டையானது கீழேவிழ அநேகநாள் செல்லுமாகையால் அதற்குள் அது பொரித்துக் குஞ்சாகி, கண் திறந்து, இறகும் முளைக்கிறது; பூமியைநோக்கி வந்துகொண்டிருக்கும் தன் நிலைமையை அறிந்த அச் சிறுபக்ஷி, தான்வரும் வேகத்தில் பூமியை அடைந்தால், தனக்கு மரணம் ஏற்படுவது நிச்சயமென்றெண்ணி, வானத்தில் வசிக்கும் தன் தாயைத் தேடி அங்கிருந்தே மேல்நோக்கிப் பறந்து செல்கிறது.

"அந்தத் தாய்ப் பக்ஷியே இந்திரிய கோசரங்களுக் கெட்டாத பிரம்மஸ்வரூபத்தோடு லயமாயிருக்கும் ஜகன்மாதா. அவ்வன்னையின் பிரிய குழந்தைகளான இச்சிறு பரிசுத்தாத்மாக்கள், தங்களுக்கு இறகு முளைத்து, கண்கள் திறந்து, தாங்களாகப் பறக்கிற சக்தி வருகிறவரைக்கும் உலகம் இன்னதென்றறியாதிருக் கிறார்கள். கண் திறந்த மாத்திரத்திலேயே—உலகத் தையும், உலக சம்பந்தப்பட்ட மற்ற விஷய சுகங்களை யும் தொட்டமாத்திரத்திலேயே—தங்களுக்கு மரணம் ஏற்படுமென்பதை அவர்கள் தெளிவாய் அறிகிறார்கள். கண்கள் திறந்த மாத்திரத்தில் பராசக்தியாயும் ஸச்சிதானந்த ஸ்வரூபியாயும் தங்கள் உயிருக்கு உயி ராயுமிருக்கும் ஜகன்மாதாவை நோக்கிச் செல்லு கிறார்கள்."

இச்சமயத்தில், நரேந்திரர் அவ்வறையைவிட்டு வெளியே போனார். கேதார், பிராணகிருஷ்ணன், ம—, இன்னும் மற்றவர்கள் பகவானோடு அவ்வறையி லேயே இருந்தார்கள். பகவான் இன்னும் நரேந்திரரைப்பற்றியே பேசிக்கொண்டும் அவ்விதம் பேசும் பொழுது சிரித்துக்கொண்டு மிருக்கிறார்.

பகவான் (சிஷ்யர்களைப் பார்த்து):—நரேந்திரன் மிருதங்கம் முதலான வாத்தியங்கள் வாசிப்பதிலும், சங்கீதத்திலும், படிப்பிலும் நிகரற்றிருக்கிறான். அன்றைக்கோர் நாள் அவன் கேதாரோடு சம்பாஷித்தான். கேதார் வாயைவிட்டு வார்த்தைகள் வந்தனவோ இல்லையோ உடனுக்குடன் அவைகளை நறுக்கி விட்டான். (பகவானும் மற்ற யாவரும் சிரித்தல்.)

(ம—வைப் பார்த்து) "அவ்விதமான தர்க்க சாஸ்திரங்கள் ஏதாகிலும் ஆங்கிலத்தில் இருக்கின்றனவா?"

ம—:—ஆம், ஸ்வாமி; இருக்கிறது. அதை லாஜிக் என்று சொல்லுவார்கள்.

பகவான்:—அதிலிருந்து கொஞ்சம் எனக்கு எடுத்துச் சொல்லு, பார்க்கலாம்.

ம— அதிக ஸங்கோசத்தோடு, மனத்தைத் தைரியப்படுத்திக்கொண்டு சொல்லுகிறார்:—

"தர்க்க சாஸ்திரத்தில், ஓர் பாகம், பொதுவிதிகளிலிருந்து குறித்தவஸ்துவைப்பற்றி அனுமானித்துச் சொல்லுகிறது. அதாவது:

'மனிதர்கள் அநித்தியர்;

பண்டிதர்கள் மனிதர்கள்; ஆகையினால்,

பண்டிதர்களும் அநித்தியரே' என்று தீர்மானிப்பது.

"அதே சாஸ்திரத்தில், மற்றோர் பாகம் குறித்த வஸ்துக்களின் குணத்திலிருந்து பொது விதியை யூகித்துத் தீர்மானிப்பது. அதாவது:

'இந்தக்காக்கை கறுப்பு;

அந்தக்காக்கை கறுப்பு;

இந்த மற்றோர் காக்கையும் கறுப்பு;

ஆகையினால், எல்லாக்காக்கைகளும் கறுப்பு' என்று தீர்மானிப்பது.

இவ்விதம் கணக்கிட்டுப் பார்த்துத் தீர்மானிப்பதில் குற்றமுண்டாகலாம். ஏனென்றால், பார்த்திராத சில தேசங்களில் வெள்ளைக் காக்கையுமிருக்கலாம்."

* * * * * *

ஸ்ரீராமகிருஷ்ணர் இவைகளையெல்லாம் கவனித்ததாகக் காணப்படவில்லை.

சம்பாஷணை முடிந்தது. ஸங்கம் கலைந்தது. சிஷ்யர்கள் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தார்கள். ம— தனிமையாகப் பஞ்சவடியருகில் உலாவிக்கொண்டிருந்தார். மாலை 5-மணி. அவர் திரும்பவும் அறையின் வடக்குத் தாழ்வாரத்திற்கு வந்தபொழுது ஒரு ஆச்சரியமான காட்சியைக் காண்கிறார். பகவான் அசைவற்று நின்று கொண்டிருக்கிறார். நரேந்திரர் பகவத் கீர்த்தனம் பாடிக்கொண்டிருக்கிறார். நரேந்திரரும் இன்னும் மூன்று நான்கு சிஷ்யர்களும் குருநாதனைச் சுற்றி நிற்கிறார்கள்.

ம— சங்கீதத்தைக் கேட்டுப் பரவசமாகிறார். தன் ஞயுளில், அத்தகைய இனிமையான சாரீரம் அவர் கேட்டதேயில்லை. பகவானைக் கண்டதும் அவர் பிரமித்துப் பேசாமல் நிற்கிறார். பகவான் கண் கொட்டாமல் அசைவற்று நிற்பதைப்பார்த்தால், சுவாஸம் கூட இருக்கிறதோ இல்லையோ என்று சந்தேகிக்க வேண்டியதாயிருக்கிறது.

'இவ்வித பிரம்மானந்த நிலைதான் ஸமாதி என்று சொல்லப்படுவது' என்று மெதுவாகச் சொல்கிறார் ஓர் சிஷ்யர்.

ம— இதுவரையில் இதைப்பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை. ம— தமக்குள் சிந்திக்கலானார்: 'பகவத் சிந்தையினால் உலகத்தை மறப்பது சாத்தியமானதா? இந்நிலையை அடைய, பகவான்மீது எவ்வளவு உறுதியான நம்பிக்கையும் விசுவாசமும் இருக்க வேண்டும்!'

நரேந்திரர் பாடிய பாடலின் கருத்து:—

'ஓ, மனமே! பகவானைத் தியானி; அவன் ஆத்மஸ்வரூபி; களங்கரஹிதன்; நிகரற்ற பிரபாவமுடையவன்; அழகிய வடிவுடையவன்; பக்தர்கள் இருதயத்தில் அளவற்ற அன்புடன் ஆதரிக்கப்படுகிறான்.

'பார்! அவனிடம் அன்பதிகரிக்க அதிகரிக்க அவனழகும் அதிகரிக்கிறது; கோடி சந்திரர்களையும் மங்குவிக்கிறது; அவன் ஜோதி அழகிலிருந்துதான் மின்னல் மின்னுகிறது; அத்திருக்காக்ஷி புளகாங்கிதத்தை உண்டுபண்ணுகிறது.'

கீர்த்தனையின் இவ்வடியைப் பாடவும், பகவானது மனம் உருகி, அவர் புளகாங்கிதத்தை யடைந்தார். ஆனந்த பாஷ்பம் பெருகியது. திவ்விய மங்கள ரூபத்தின் காக்ஷியாலுண்டாகும் ஆனந்தத்தை, முகத்திலுதித்திருக்கும் புன்சிரிப்பு காண்பிக்கிறது. ஆம், கோடி சந்திரர்களையும் மங்கச்செய்யும் நிகரற்ற அழகின் காக்ஷியை அவர் அனுபவிக்கிறாரென்பதில் சந்தேகமில்லை.

இதுதான் திவ்விய பகவத் காக்ஷியோ? அப்படியிருக்குமாகில், இவ்வித காக்ஷியை அடையவேண்டுமானால், அநித்திய வஸ்துவாகிய மனிதன், எவ்வளவு தீவிர சிரத்தையும், பக்தியும், தபஸும், நேமமும் உடைத்தாயிருக்கவேண்டும்!

இன்னும் பாடுகிறார்:

'உன் இருதய கமலத்தில், அவனுடைய திவ்ய திருவடிகளை வைத்துப் பூஜைசெய். உன் மனம் இப்பொழுது சாந்தியடைந்திருப்பதனாலும், உன் கண்கள் பகவத் பிரேமையில் மூழ்கியிருப்பதனாலும், ஒப்பற்ற அழகுடைய அத்திவ்விய ரூபத்தை நீ பார்.'

மனதைக்கவரும்படியான புன்சிரிப்பானது திரும்பவும் அவர் முகத்தில் உதிக்கிறது. அவர் சரீரம் அசைவற்றிருக்கிறது. அவருடைய கண்கள் பாதி மூடப்பட்டுத் தோற்றமற்றிருப்பதுபோலக் காணப்படுகின்றன. இந்திரியகோசரத்திற்கெட்டாத திவ்விய ரூபத்தினாலுண்டாகும் அற்புத தரிசனத்தின் ஆனந்தத்தினால் நிறைந்தவர்போலத் தோன்றுகிறார்.

நரேந்திரர் பாடலின் கடைசி அடியைப் பாடிமுடிக்கிறார்:

'சிதானந்தத்திற்கு இருப்பிடமாகிய அன்புக்கடலில், ஹே, மனமே! நீ மூழ்கியிரு. அவருடைய ஆனந்தத்தைப் பருகிக் களித்திரு.'

* * * * * *

ம—இங்ஙிகரற்ற சமாதியையும், பிரம்மானந்தக் காக்ஷியையும் மனத்தில் ஸ்மரித்துக்கொண்டே தம் வீடு போய்ச் சேர்ந்தார். அவர் அவ்வாறு போகும்வழியில், 'அவரது பக்தியின் இனிமையான ஆனந்தக்கடலில், ஹே மனமே! இடைவிடாமல் மூழ்கியிரு' என்ற இனிமையான பாடலானது அடிக்கடி அவர்மனதில் பொங்கிக்கொண்டிருந்தது.

* * * * * *

மறுதினம் விடுமுறை நாளாகையால், ம—மாலை மூன்று மணிக்கு பகவானிடம் வருகிறார்.

பகவான் தம்மறையில் வீற்றிருக்கிறார். தரையின்மீது பாய் விரிக்கப்பட்டிருக்கிறது. பத்தொன்பது, இருபது வயதிற்குட்பட்ட சிறுவர்களான நரேந்திரர் (விவேகானந்தர்), பவனாத், இன்னும் இரண்டொரு சிஷ்யர்களும் அவர் முன் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். முன்போலவே அச்சிறுவர்களோடு சிரித்துக்கொண்டும், சம்பாஷித்துக்கொண்டும் மந்தஹாஸத்துடன் பகவான் கட்டிலின்மீ துட்கார்ந்துகொண்டிருக்கிறார்.

ம— உள்ளே பிரவேசித்தவுடன், பகவான் அவரைப்பார்த்துக் குலுங்க நகைத்து, 'இதோ பார்; அவன் திரும்பவும் வந்துவிட்டான்' என்று உரத்தக் குரலில்

கூறுகிறார். சிறுவர்களும் பகவானோடு சேர்ந்து சிரிக்கிறார்கள்.

ம— பகவான் காலில் வீழ்ந்து நமஸ்கரிக்கிறார். இதற்குமுன் ம— ஆங்கிலம் படித்தவர்களின் வழக்கப்படிக் கைகூப்பி வணங்கி வந்தார். இன்றைக்குத் தான் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யக் கற்றுக்கொண்டார். ம— உட்கார்ந்தவுடன், பகவான், நரேந்திரர் முதலிய சிஷ்யர்களுக்குத் தாம் சிரித்ததின் காரணம் சொல்லுகிறார்:

"ஒரு நாள் சாயங்காலம் நாலு மணிக்கு ஒரு மயிலுக்குக் கொஞ்சம் அபின் கொடுக்கப்பட்டது. மறு தினம் அதே நேரத்திற்கு என்ன நேர்ந்ததென்று நினைக்கிறீர்கள்? அதே மயில் திரும்பவும் அபினுக்காக அவ்விடம் வந்து நின்றது!" (யாவரும் சிரிக்கிறார்கள்.)

ம— தமக்குள் நினைத்துக்கொள்ளுகிறார்: 'ஆம், இவர் சொல்லுவது வாஸ்தவமே. நான் திரும்பி வீடு போகும் பொழுது, என்சரீரத்தோடுமட்டிலும் போகிறேனே தவிர, என் ஹ்ருதயம், நான் இதற்கு முன் எப்பொழுதும் பார்த்திராத இம்மஹானுபாவனிடத்தில் நின்று விடுகிறது. இரவும் பகலும், நான் திரும்பவும் எப்பொழுது இவரைப் பார்ப்பேன் என்கிற எண்ணமே குடிகொண்டிருக்கிறது. யாரோ இவ்விடம் என் கையைப் பிடித்திழுத்து வருவதுபோல் தோன்றுகிறது. எனக்கு இவ்விடம் விட்டு வேறிடம் போகவாவது, அல்லது இவ்விடம் வரவேண்டுமென்ற எண்ணத்தை விடவாவது சாத்திய மாகவில்லையே!'

இவ்விதம் நினைத்துக்கொண்டு, சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருக்கும் பகவானைப் பார்த்துக்கொண்டே ம— உட்கார்ந்திருந்தார். பகவான் அவ்விடமிருக்கும் சிறுவர்களை வயதில் தமக்குச் சமானமாகவெண்ணி விளையாடுவதுபோல் அவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தார். இவ்விதமான சிரிப்பும் விளையாட்டும் அவர்களிடம் ஓயாதிருந்துவருவதைப் பார்த்தால், அந்த இடமானது பிரம்மானந்தமென்பதை விற்பனைசெய்வதற்காகக் கூடினாற்போன்ற ஓர் சந்தைபோலத் தோன்றிற்று.

பகவானது நிகரற்ற ரூபத்தைப் பார்த்து, ம— ஆச்சரியமடைகிறார். அவர் தமக்குள் நினைத்துக் கொள்ளுகிறார்: "இவர்தானோ நேற்றையதினம் ஸமாதியென்னும் நிலையிலிருந்துகொண்டு, நான் இதற்கு முன்னால் எப்பொழுதும் பார்த்திராத பகவத் பிரேமையைக் காட்டினவர்? முதல் முதலில் இவரைப் பார்த்தபொழுது, கிருஹஸ்தாசிரமம் மேற்கொண்டிருந்ததற்காக என்னைக் கண்டித்தவர் இவர்தானோ? மற்றும் என்னிடம், 'நீ மட்டும் ஞானம் அடைந்துவிட்டதாக நினைத்துக்கொள்ளுகிறா யல்லவா?' என்று சொன்னவரும் இவர்தானோ? பகவான் ரூபமுடையவரென்றும், பகவான் ரூபமற்றவரென்றும் எடுத்துரைத்தவர் இவர்தானோ? இன்னும், பகவான் ஒருவரே நிஜ வஸ்துவென்றும், பிரபஞ்சத்திலுள்ள மற்ற யாவும் தோன்றி மறையும் அநித்திய வஸ்துக்களென்றும் பொய்யென்றும் போதித்தவர் இவர்தானோ? மேலும், அன்றையதினம், 'எவ்விதம் வேலைக்காரி தன் எஜமா

னன் வீட்டில் வேலை செய்துகொண் டிருக்கும் பொழுதே, தன் சொந்த வீட்டிலிருக்கும் தன்னுடைய அருமைக் குழந்தைகள்பேரில் மனதை வைத்திருக்கிறாளோ, அவ்வாறே நீயும் இவ்வுலகில் இருக்கும் பொழுது, உன் நிஜவீடாகிய நித்திய ஸ்வரூபியான பராசக்தியினிடத்தில் உன் மனதைச் செலுத்திக் கொண்டு, உன் கர்மத்தில் பற்றின்றி வேலையைச் செய்' என்று அறிவித்தவரும் இவர்தானே!''

இவ்விதமாக எண்ணிக்கொண்டு, ம— பேசாமல் அசைவற்று, பகவானின் திவ்விய ஸ்வரூபானந்தத்தில் மூழ்கியிருக்கிறார். பகவானும் தம் விளையாட்டின் மத்தியில் அடிக்கடி இவரைப் பார்க்கிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ராம்லாலைப் பார்த்துச்சொல்லுகிறார்: ''இவ்வாலிபன் (ம—வைக் குறிப்பிட்டு) இவ்விட மிருக்கும் சிறுவர்க ளெல்லோரினும் வயதில் கொஞ்சம் முதிர்ந்தவன். ஆகையால்தான் சிறிது அடக்கத்துடனிருக்கிறான். அவர்களெல்லாம் சிரித்து விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது இவன் மாத்திரம் வாயைத் திறக்காமலிருக்கிறான்.'' (அப்பொழுது ம—வுக்கு வயது இருபத்தேழு.)

ஸ்ரீமத் ராமாயணத்தில் உள்ள பக்தர்களில் ஒருவரான ஹனுமானைப்பற்றிப் பகவான் பேசுகிறார்: ''ஸ்ரீராமருக்காக ஹனுமான் தமது பொருள், கீர்த்தி, சுகம் முதலிய எல்லாவற்றையும் விட்டுவிட எவ்வளவு தயாராகவிருக்கிறார்!''

பகவான் அடியில்வரும் கருத்துக்களடங்கிய பாடலைப் பாடுகிறார்:

"மதுரமான பழங்கள் எனக்கெதற்கு? என் ஹ்ருதயத்திலிருக்கும் கற்பக விருக்ஷத்தினின்றுண்டாகும் ஜன்ம ஸாபல்யமாகும் மோக்ஷமென்னும் பலனாகிய பழம் என்னிடமிருக்கும்பொழுது இதர பழங்கள் எதற்கு?

'ஜகதீசுவரனான ராமனென்னும் கற்பகத்தருவினடியிலுட்கார்ந்துகொண்டு, எனக்கு வேண்டிய பழத்தை அவ்விருக்ஷத்தினின்றும் அடைகிறேன். பலன்களைப்பற்றி நான் பேசுவதாயிருந்தால், அது ராமனைப் பற்றியதே யாகும். இவ்வுலகம் கொடுக்கக்கூடிய பலன்களை நான் ஒருபொழுதும் அங்கீகரியேன்."

இவ்வாறு ஹனுமான் இவ்வுலகவின்பங்களை விட்டதைப் பற்றிப் பாடிக்கொண்டே, ஸ்ரீராமகிருஷ்ணர் தம் வெளியுலகத்து நினைவை யிழந்தார். பிரம்மஞான மென்னும் சமாதியில் மூழ்கியிருக்கிறார். சரீரம் சலனமற்றிருக்கிறது. கண்கள் இமை கொட்டவில்லை. நாம் அவரைப் படத்தில் காண்பதுபோல, அவர் அசைவற்றிருக்கிறார்.

சற்று நேரத்திற்கு முன் குதூகலத்துடன் குதித்து விளையாடிக்கொண்டிருந்த சிஷ்யர்கள், குருதேவரின் முகத்தைப் பார்த்துத் திகைத்து மௌனமாயினர். அவ்வற்புத நிலைமை அவர்களுக்கு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. ம— இரண்டாவது தடவையாக பகவான் சமாதிநிலை யடைந்திருப்பதைப் பார்க்கிறார்.

ஸ்ரீராமகிருஷ்ணருக்குப் பிரக்ஞை வர நெடுநேரம் செல்கிறது. அவருடைய அவயவங்கள் தளர்கின்றன.

முகம் புன்சிரிப்பினால் பிரகாசிக்கிறது. இந்திரியங்கள் தம் தம் வேலைகளைச் செய்ய ஆரம்பிக்கின்றன? அவர் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பெருகுகிறது. அவர் ஸ்ரீராமருடைய திவ்விய நாமத்தை உச்சரிக்கிறார். ம— தமக்குள் நினைத்துக் கொள்வதாவது: 'சில நிமிஷங்களுக்குமுன், ஐந்து வயதுப்பாலகன்போலச் சிஷ்யர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த மஹான் இவர் தானோ!'

பகவான் தம் பூர்வநிலைமையை அடைந்த பின், ம—, நரேந்திரர், இவ்விருவரையும் நோக்கி, 'நீங்கள் இருவரும் ஆங்கிலபாஷையில் தர்க்கம் செய்வதைக் கேட்க நான் விரும்புகிறேன்' என்றார். இதைக் கேட்டதும், இருவரும் சிரிக்கிறார்கள். அப்படியே அவர்கள் பேசினார்களென்றாலும் ஆங்கிலத்தில் பேசவில்லை. பகவான் முன்னிலையில் ம—வுக்கு வாயைத் திறந்து பேசுவது அசாத்தியமாயிருந்தது. அவ்வாறு பேசுவதற்கு அவர் மனம் இடங் கொடுக்கவில்லை. பகவான் ஆங்கில பாஷையில் பேசும்படி அனேகந்தரம் வற்புறுத்தியும், அவர்கள் அப்படிப் பேசவில்லை.

சாயங்காலம் மணி ஐந்தாயிற்று. நரேந்திரர், ம—, இவ்விருவரைத் தவிர மற்றெல்லோரும் வீட்டிற்குப் போகும்பொருட்டு பகவானிடம் விடைபெற்றுச் செல்கிறார்கள். நரேந்திரர் அன்றிரவு பகவானுடன் தங்கியிருக்கப்போகிறார்.

பகவான் கைகால்களைக் கழுவத் தம் பித்தளைச் செம்பை எடுத்துக்கொண்டு, கோவில் நந்தவனத்திற்கு வடபக்கத்திலிருக்கும் அம்லதீர்த்தத்திற்குச் செல்கிறார்.

ம— அத்தோட்டத்தின் பாதையில், அதிர்ஷ்ட வசத்தால் தமக்குக் கிடைத்த இம்மஹானுபாவருடைய தரிசனத்தை நினைத்துக்கொண்டே உலாவிக்கொண்டிருக்கிறார். அவ்வாறு கோவிலைச் சுற்றி நடந்துகொண்டே அம்ஸதீர்த்தத்தையடைந்ததும், அவ்விடத்தில் தனிமையாக ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரரோடு பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்து வியப்படைகிறார். இருவரும் ஜலத்திற்கு மேல் படியில் நின்றுகொண்டிருக்கிறார்கள். நரேந்திரர் கைகால் கழுவிவிட்டுக் கையில் செம்புடன் நிற்கிறார்.

பகவான் சிரித்துக்கொண்டு, "நீ புதிதாய் வந்தவன்; அடிக்கடி வருவதை நிறுத்தாதே. மனிதன் முதலில் சிநேகமாகும்போது, தன் பிரியையினிடத்தில் அடிக்கடி வந்து கொண்டிருப்பான் அல்லவா?" என்றார். (ம—, நரேந்திரர், இருவரும் சிரிக்கிறார்கள்.)

பகவான் சிரித்துக்கொண்டே "சரி, நீ இவ்விடம் அடிக்கடி வரவேண்டும். என்ன சொல்லுகிறாய்?" என்றார். நரேந்திரர் சிரித்துக்கொண்டு, 'ஆகட்டும் ஸ்வாமி, நான் அடிக்கடி வரப் பிரயத்தனப்படுகிறேன்' என்று சொன்னார்.

பகவான் தென்புறமாகத் தம்மறையை நோக்கித் திரும்பிச் செல்லுகிறார். நரேந்திரர், ம—, இருவரும் அவர் இருபக்கத்திலுமாக நடந்து வருகிறார்கள். கோவிலுக்கருகில் வந்ததும் பகவான் ம—வைப்பார்த்துச் சொல்லுகிறார்: "குடியானவன் ஏர் உழுவதற்காகக் காளைமாடு வாங்கும் விதம் எப்படியென்று உனக்குத் தெரியுமா? அவ்விஷயத்தில் அவர்கள் மிக நிபுணர்கள்.

உபயோகமற்றவைகளை விலக்கி நல்லவைகளாய்த் தெரிந்தெடுக்க அவர்கள நன்கறிவார்கள். வீரியமுள்ளவைகள் எவையென்பது அவர்களுக்கு நன்ருய்த் தெரியும். வாலைத் தொட்ட மாத்திரத்திலேயே வீரியமுள்ளவையெவை யென்றும், வீரியமில்லாதவை யெவையென்றும் அவர்களுக்கு விளங்கும். வீரியமில்லாதவை துள்ளாமல் மந்தமாயிருக்கும். ஆனல் வீரியமுள்ளவைகளோ வாலைத் தொட்டமாத்திரத்தில் அருகில் ஆளை அண்டவிடாமல் தாவிக் குதிக்கும். குடியானவன் அப்படிப் பட்டவைகளைத்தான் பொறுக்கி யெடுப்பான். நரேந்திரன் இவ்வித காளைமாட்டு வகுப்பைச் சேர்ந்தவன்; அவனிடத்தில் நிஜமான வீரியமிருக்கிறது.''

பகவான் சிரித்துக்கொண்டு மேலும் சொல்லுகிருர்:

''ஆனல், அநேகர், பாலிலிட்ட பொரி நமர்த்துப் போயிருப்பதுபோல், பயனற்று வேலைக்கு உபயோகமில்லாமல் மனேதிடத்தையிழந்து, மெலிந்து, தளர்ந்து இருக்கிருர்கள்.''

சாயங்காலநேரம். பகவான் தம்மறையில் தியானம் செய்துகொண்டிருக்கிருர். அவர் ம—வைப் பார்த்து, ''நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருக்கும் நரேந்திரனேடு நீ கலந்துபேசி, அவன் எப்பேர்ப்பட்டவனென்று அறிந்து எனக்கு வந்துசொல்'' என்ருர்.

சாயங்காலமாகையினுல், ஆலயத்தில் அர்ச்சகர்கள் விக்ரஹங்களுக்கு அர்ச்சனை, நைவேத்தியம் தீபாராதனை முதலானவைகள் செய்து கொண்டிருக்கிருர்கள்.

ம— மற்றோர்முறை கோவிலின் வாயில்மண்டபத்துக்கு மேற்குப் புறமாயிருக்கும் ஸ்நான கட்டத்தில் நரேந்திரரைச் சந்தித்தார். உடனே இருவரும் ஒருவரையொருவர் சந்தித்ததற்குச் சந்தோஷமடைகிறார்கள், நரேந்திரர் ம—விடம் 'நான் சாதாரண பிரம்ம ஸமாஜத்தைச் சேர்ந்தவன்; கலாசாலை மாணாக்கன்' என்றிவ்வாறாகத் தம் வரலாறுகளைச் சொல்கிறார்.

வெகு நேரமாய்விட்டதாகையால், ம— விடை பெற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆயினும், ஏதோ தம்மையறியாமல் ஓர் சக்தியானது போகவிடாது தடுத்தாற்போல அவருக்குத் தோன்றுகிறது. நரேந்திரரைப்பிரிந்து, ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தேடிச்செல்கிறார். அவர் கீர்த்தனைகளின் அற்புத சக்தி தம் ஹ்ருதயத்தைக் கவர்ந்து, மேன்மேலும் அவர் திவ்ய கானத்தைக் கேட்க விருப்பத்தை உண்டுபண்ணிற்று. குருதேவரின் அறையில் அவரைக்காணாது, கர்ப்பக்கிருஹத்தின் முன்னிருக்கும் நடன மண்டபத்துக்குச்செல்கிறார். பகவான் அவ்விடத்தில் மங்கலான வெளிச்சத்தில், தனிமையாய் உலாவிக்கொண்டிருக்கிறார். கர்ப்பக்கிருஹத்தில் ஜகன்மாதாவின் இருபுறமும் மஹாகாந்தியோடு விளக்குகள் எரிந்துகொண்டிருக்கின்றன. ஆனால், நடன மண்டபத்தில் எரிந்துகொண்டிருக்கும் விளக்கின் மங்கலான வெளிச்சமும், அவ்விடத்திய இருட்டும் கலந்து, அவ்விடமானது தியானத்திற்கு மிக ஏற்றதாயிருந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜகன்மாதாவின் திருநாமங்களை உச்சரித்துக்கொண்டிருப்பதைக் கேட்டு ம— ஆனந்த பரவசராய்த் தம்மை மறந்து மெல்ல பகவா

னிடம் நெருங்கி, மிகவினயத்துடனும், பயத்துட னும், 'ஸ்வாமி, இன்னும் இரவில் ஏதாகிலும் பகவத் கீர்த்தனைகளுண்டா?' என்றார்.

பகவான் சற்று யோசித்து, 'இனி இன்றைக்கு இல்லை. ஆனால், இன்னும் சிலநாளில், கல்கத்தாவில் பலராம் வீட்டிற்கு நான் வருவேன். நீ அவ்விடம் வந்தால், நான் பாடுவதைக் கேட்கலாம்' என்றார்.

ம—:—ஸ்வாமி, தங்கள் சித்தப்படியே செய்யத் தயாராயிருக்கிறேன்.

பகவான்:—உனக்கு அந்த வீடு தெரியாது? பல ராம் போஸ் தெரியுமா?

ம—:—ஸ்வாமி, எனக்குத் தெரியாது.

பகவான்:—போஸ்பாறுவில் உள்ள பலராம் போஸ் தெரியாது?

ம—:—நல்லது, ஸ்வாமி, நான் விசாரிக்கிறேன்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ம—வோடு நடன மண்டபத் தில் மேலும் கீழும் உலாவிக்கொண்டிருக்கிறார்.

பகவான்:—நல்லது, நான் உன்னை ஓர் கேள்வி கேட்கிறேன்; என்னைப்பற்றி உன் அபிப்பிராயமென்ன?

ம— ஆழ்ந்த யோசனையோடு மௌனமாயிருக் கிறார்.

பகவான்:—என்ன உன் அபிப்பிராயம்? அதா வது, என்னிடம் எத்தனை அணு ஞானம் இருக்கிற தென்று நினைக்கிறாய்?

ம—:—எத்தனை அணு ஞானமென்றால் எனக்கு அர்த்தம் விளங்கவில்லை. எனக்குத் தெரிந்தவரைக்

கும் இவ்வற்புத ஞானம், பகவத் பிரேமை, சிரத்தை, வைராக்கியம், ஆழ்ந்த சமாதி இவைகளெல்லாம் பொருந்திய தங்களைப்போலொத்த மஹாபுருஷனை நான் எப்பொழுதும், எவ்விடத்திலும் கண்டதில்லை.

(பகவான் சிரிக்கிறார்.)

ம— அவர்பாதத்தில் வீழ்ந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து விடைபெற்றுச் செல்கிறார். வடக்கு வாயில் வரைக்கும் போனாரோ இல்லையோ, தாம் ஏதோ ஒன்றை விட்டு மறந்துபோனவரைப்போல் திரும்பி வருகிறார்.

தனிமையாக அவ்விடத்தில் உலாவிக்கொண்டிருக்கும் பகவானிடம் திரும்பவும் வருகிறார்.

பகவான் அங்கு மங்கலான வெளிச்சத்தில், அதாவது பாதி யிருளும், பாதி வெளிச்சமும் கலந்திருக்குமிடத்தில், தன்னந்தனியே, மற்றொருவருமில்லாமல், மேலுங் கீழுமாக உலாவிக்கொண்டிருக்கிறார். இருண்ட கானகத்தில் சிங்கம் தனிமையாய்க் கம்பீரமாக நடப்பதுபோல், அவருடைய ஏகாந்தமே துணையாக, அத்துணையோடு ஆத்மா லயமடைந்து, ஆனந்தபரவசரா யிருக்கிறார். மனிதசிரேஷ்டரான இவர் இவ்வுலகமாகிய வனாந்தரத்தில் ஏகாந்தமாயிருப்பதில் சந்தோஷமடைகிறார் போலும்!

ம— பகவானைப் பார்த்ததும் அச்சத்துடன் பேச முடியாதிருக்கிறார். அவர் தமக்குள் நினைத்துக்கொள்கிறார்: 'நிச்சயமாக மனிதலக்ஷியத்தை அடைந்துவிட்ட மகாபுருஷர் இவர். உலகை இகழ்ந்து தள்ளி, அகண்டபரிபூரணத்துடன் கலக்கும் புருஷர் இவரே!'

பகவான் (ம—வைப் பார்த்து):—ஓ, நீயேன் திரும்பவும் வந்தாய்?

ம— :—ஸ்வாமி, தாங்கள் என்னை வரச்சொன்ன வீடு பணக்காரருடைய வீடாயிருக்குமோ என்று சந்தேகிக்கிறேன். அவ்விடத்திற்கு நான் வந்தால், காவலாளர்களும், இன்னும் மற்ற ஜனங்களும் என்னைத் தடை செய்யக்கூடும். நான் அவ்விடம் வராமலிருந்து விடலாமா என்று நினைக்கிறேன். நான் தங்களை இவ்விடத்திலேயே பார்ப்பதற்கு எப்பொழுதும் பிரியப்படுகிறேன்.

பகவான்:—ஏன் அப்பா; நீ என் பெயரைச்சொன்னால் போதும். என்னைப் பார்க்கவேண்டுமென்று சொல். கண்டிப்பாக யாராகிலும் உன்னை என்னிடம் அழைத்து வந்து விடுவார்கள்.

ம— :—ஸ்வாமி, தங்கள் சித்தப்படியே.

இவ்வாறு சொல்லி, ம— திரும்பவும் பகவானை வணங்கி நமஸ்கரித்து விடைபெற்றுச் செல்கிறார்.

# இரண்டாவது அத்தியாயம்

[ஈசுவரசந்திர வித்தியாஸாகர பண்டிதருடன் சம்பாஷணை]

## பிரிவு. 1

## வித்தியாஸாகரரைக் காணப்போதல்

பகவான் ஈசுவர சந்திர வித்தியாஸாகர பண்டிதரைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்ப முடையவராயிருந்தார். ஒரு நாள் சாயங்காலம், தம் சிஷ்யர்களோடு வண்டியிலேறி, தக்ஷிணேசுவரத்திலிருந்து ஆறு மைல் தூரத்திலிருக்கும் பதுர்பகான் என்னும் ஊரிலுள்ள ஈசுவர சந்திர வித்தியாஸாகரரைப் பார்க்க அவருடைய வீட்டிற்குச் சென்றார்.

அன்று, 1882-வது வருஷம், ஆகஸ்டு மாதம், (சிராவணம்) கிருஷ்ணபக்ஷம், ஐந்தாந்தேதி சனிக்கிழமை, மாலை ஐந்துமணி.

பண்டிதர் வீட்டிற்கெதிரில் வண்டி வந்து நின்றது. பகவான் ம—வின் கையைப் பிடித்துக்கொண்டு வண்டியினின் றிறங்கினர்.

பண்டிதருடைய புஸ்தகசாலைக்குப் போகும் மெத்தைப்படிபோய்ச் சேருவதற்கு முந்தியே அவர் கொஞ்சம் நிதானித்து, ம—வைப் பார்த்து, 'நான் என் சட்டையின் பொத்தானை மாட்டிக்கொள்ளுவது அவசியமா?' என்று கேட்டார்.

அதற்கு ம— 'பிரபோ, அந்தக் கவலையெல்லாம் தங்களுக்கு வேண்டாம். இவ்வித மரியாதைகளெல்லாம் தங்களைப் பாதிக்கா' என்று பதிலளித்தார்.

அவர், ஒரு குழந்தையைப்போல், சமாதான மடைந்துவிட்டதாகக் காணப்பட்டார். ஏனென்றால் அவர் அதைப்பற்றிப் பிறகு நினைக்கவில்லை. ஐந்து வயதுக் குழந்தை யொன்று கேட்டுக்கொள்வது போல் அவர் தோன்றினார்.

மாடியில் தெற்குப் பக்கமாயிருந்த ஓர் அறைக்கு பகவானும் சிஷ்யர்களும் அழைத்துக்கொண்டு போகப் பட்டார்கள். இவ்வறையில் பண்டிதர், தம்மெதிரில் ஓர் மேஜையின்மீது பல புஸ்தகங்களும் காகிதங்களும் பரப்பியிருக்க, ஐரோப்பியர் வழக்கம்போல் ஓர் நாற் காலியில் உட்கார்ந்திருந்தார்.

ம— அவரெதிரில் போய் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வரவை அறிவிக்க, பண்டிதர் அவருக்கு மரியாதை செய்ய எழுந்து நின்றார். பகவானும் கிட்டேசென்று மேற்கு முகமாக நின்று, ஒரு கையை மேஜையின்மீது வைத்துக்கொண்டு, பண்டிதரைப் பார்த்தவண்ணம் மௌனமாக விருந்தார். அவர் குழந்தை போன்ற இனிய முகம் புன்சிரிப்புடன் பிரகாசித்துக் கொண் டிருந்தது. அவ்விடம் பண்டிதருடைய நண்பர்களும் சிஷ்யர்களும் கூடியிருந்தார்கள். பண்டிதரைப் பார்த் துக்கொண்டுநின்ற பகவான் அப்படியே சமாதியிலாழ்ந் தார். சமாதி கலைந்ததும், அவருக்காக இட்டிருந்த ஆசனத்திலுட்கார்ந்து, சிறிதுநேரம் கழித்து, வழக்கம் போல் 'குடிக்கத் தண்ணீர் வேண்டும்' என்றுகேட்டார்.

அப்பொழுது வித்தியாஸாகரர் ம—வைப்பார்த்து, "இப்பொழுதுதான் பர்ட்வானிலிருந்து மிட்டாய் வந்திருக்கிறது. கொஞ்சம் சாப்பிடுவாரா?" என்று கேட்க, சாப்பிடுவாரென் றறிந்து வீட்டிற்குள் போய், ஓர் தட்டில் மிட்டாயும், குடிக்க ஜலமும் எடுத்துக்கொண்டுவந்து பகவான் முன்பு வைத்தார். அவருடன் சிஷ்யர்களும் அதில் கொஞ்சம் சாப்பிட்டார்கள்.

பண்டிதருடைய சிஷ்யர்களி லொருவனை மிட்டாய் சாப்பிடும்படி பகவான் அழைக்க, பண்டிதர், 'ஸ்வாமி, அவன் நம்வீட்டுப் பையன்; அவனைக் கவனியாதீர்கள்' என்றார். அதற்குப் பகவான் "பையன் நல்லவன். பல்குநதி மேல்பாகம் பார்வைக்குக் காய்ந்திருப்பதுபோல் தோன்றினாலும் அடியில் கண்ணுக்குத் தெரியாமல் ஊற்று ஓடிக்கொண்டிருப்பதுபோல அவன் மிகவும் ஸாரமுடையவன்" என்றார்.

பகவான் (வித்தியாஸாகரரைப் பார்த்து):—அநிக நாளாக எதிர்பார்த்திருந்த ஸாகரத்திற்கு வரும்படியான பாக்கியம் எனக்கு இன்றுதான் கிடைத்தது. இதுவரையில் நான் பார்த்ததெல்லாம் வாய்க்கால், குளம், அதிகமானால் நதி; இவைகள் மட்டிலுமே. (யாவரும் சிரித்தல்)

பகவான் பண்டிதருடைய 'வித்தியாஸாகரர்'—கல்விக்கடல்—என்ற பெயரைக் குறிப்பிட்டு வேடிக்கையாகச் சொல்கிறார்.

வித்தியாஸாகரர்:—நல்லது, ஸ்வாமி, அப்படியாயின் தாங்கள் போகும்பொழுது, இந்தச்சமுத்திரத்

திலிருந்து கொஞ்சம் உப்பு ஜலமெடுத்துச் செல்லலாம். (சிரிப்பு)

பகவான்:—இல்லை, ஐயா; நீங்கள் நிச்சயமாக அவித்தையாகிய உப்புச் சமுத்திரமன்று; வித்தையாகிய பாற்கடல்; ஞான வாரிதி. (யாவரும் சிரித்தல்)

வித்தியாஸாகரர்:—ஸ்வாமி, தாங்கள் அப்படிச் சொல்வது தகாதென்றஞ்சுகிறேன்.

பகவான்:—உங்கள் ஸ்வபாவம், பிரம்ம ஞானத்திற்குக் காரணமாகிய ஸத்வகுணம். அந்த ஸத்வ குணந்தான் தங்களை ஸத்கருமம் செய்யத்தூண்டுகிறது. தானம், தயை, பிறருக்கு நன்மைசெய்தல் முதலியவைகளைப் பக்தியோடு பற்றுதலின்றிச் செய்தால் அவை பகவானிடத்திற் சேர்ப்பிக்கும்.

"தவிர, உங்களை ஸித்தர் என்று சொல்லலாம். உங்களுக்கு அன்னியரிடத்திலிருக்கும் பிரேமையானது உங்கள் ஹ்ருதயத்தை மிருதுவாகச் செய்திருக்கிறதன்றோ? உருளைக்கிழங்கு முதலிய காய்கறிகள் ஸித்தியாகிற வரைக்கும், (வெந்து பக்குவமாகிற வரைக்கும்) மிருதுவாகிறதில்லை. ('ஸித்த' என்ற வார்த்தைக்கு ஞானியென்றும், பக்குவம் என்றும் பொருள் இருப்பதைப் பகவான் சிலேடைப்படுத்திப் பேசுகிறார்).

வித்தியாஸாகரர்:—ஆனால் உளுந்து அரைத்து மாவாக்கி உருட்டி வேகவைத்தால் அது மிருதுவாயிராமல் கடினமாய்க் கல்லைப்போலாகிறதன்றோ? (யாவரும் சிரித்தல்).

பகவான் (சிரித்துக்கொண்டு):—இல்லை, நீங்கள் அப்படிப்பட்ட வஸ்துவல்ல; உலர்ந்து கல் போல்

ஒன்றுக்கும் உதவாதிருக்கும் கேவலம் பண்டிதரன்று தாங்கள்.

"பஞ்சாங்கத்தில், ஒரு குறித்த நாளில் இருபது ஆழாக்கு மழை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அந்தப்பஞ்சாங்கத்தை நன்றாய்க் கசக்கிப் பிழிந்தால் ஒரு துளி ஜலமாகிலும் அதிலிருந்து வராது! அதுபோல் நம் பண்டிதர்கள், பிரம்மமென்றும், பரமாத்மாவென்றும், ஞானமென்றும், தத்துவமென்றும், இவைகளைப்பற்றிப் பெரிய பெரிய வார்த்தைகளை உபயோகித்துப் பேசுவார்களே தவிர, மேற்கூறியவைகளைச் சுவானுபவத்திற்குக் கொண்டுவருபவர்கள் மிகச் சொற்பமே.

"பகவானை அறியக் காரணமாயிருக்கும் அறிவு பராவித்தை என்று சொல்லப்படும். தர்க்கம், வியாகரணம், மீமாம்ஸம் முதலான சாஸ்திரங்கள் ஒரு பெரிய சுமைபோலிருந்து மனதைப் பிரமிக்கச்செய்கின்றன. அவைகள் பராவித்தையை அடையச் செய்தால் மட்டிலுமே உபயோகமுள்ளவைகளாகும்.

"ஒருவழியில் ஸ்ரீமத் பகவத்கீதை முழுதையும் படித்துக்கொண்டிருப்பதில் உபயோகமில்லை யென்று சொல்லலாம். கீதையைப் பத்துமுறை 'கீதா, கீதா' என்று சொன்னால், அது, 'த்யாகீ, த்யாகீ' என்று மாறுகிறது. எவனொருவன், உலகத்தையும், திரவியம், கீர்த்தி, இந்திரியசுகம், பலனை உத்தேசித்து வேலை செய்தல் ஆகிய இவைகளையும் த்யஜிக்கிறானோ (விலக்குகிறானோ) அவனே தியாகி என்று சொல்லப்படுவான்.

"கீதையின் ஸாராம்ஸம் முழுதும் ஒரே வார்த்தை யாகிய 'தியாகம்' என்பதில் அடங்கி யிருக்கிறது. நிஜமான ஸன்யாஸி, உள்ளும் புறம்பும் உலகத்தை வெறுப்பான். அவன், லௌகிக கர்மத்தையும், அதன் பலனையும் விட்டுவிடுவான்.

"சரியான கிருஹஸ்தனோ, அந்தரங்கமாக மன தில் உலகை வெறுத்து, சர்வ கர்ம பலனையும் பக்தி யினால் ஈசுவரார்ப்பணம் செய்கிறான்.

"கீதையின் முக்கிய கருத்தென்னவென்றால், 'ஓ மனிதனே, பகவானிடம் அன்பு பாராட்டு; அவன் பொருட்டு எல்லாவற்றையும் விட்டுவிடு' என்பதாம்.

"ஒரு சாதுவினிடம் கையாலெழுதப்பட்ட புத்தக மொன்றிருந்தது. ஒருவன் அவரைப்பார்த்து, அதென்ன புஸ்தக மென்று கேட்டான். அதற்கு அப் பெரியார், அவனுக்கெதிரில் அப்புத்தகத்தைத் திறக்க, அதன் ஒவ்வொரு பக்கத்திலும் 'ஓம் ராமா' என்ற பகவானுடைய பெயரொன்றே எழுதப்பட்டிருப்பதைப் பார்த்து மிக ஆச்சரியமடைந்தான்.

"சைதன்யதேவர் தென்னிந்தியாவில் யாத் திரை செய்துகொண்டிருக்குங்கால், ஓர் இடத்தில் ஒரு பண்டிதர் பகவத்கீதை படித்துக்கொண்டிருக்கும் பொழுது அதைக் கேட்டுக்கொண்டிருந்த ஓர் பக்தன் தன் கண்களில் ஆனந்த பாஷ்பம் தாரை தாரையாகப் பெருகவிட்டுக்கொண் டிருப்பதைப் பார்த்தார். இந்தப் பக்தனுக்குக் கல்வியறிவு கிடையாது. தவிர, கீதையின் ஓர் சுலோகத்தின் அர்த்தமாகிலும் அவனுக்குத்தெரி யாது. அப்படியிருந்தும் அவ்விதம் கண்ணீர் விடுவதற்

குக் காரணம் என்னவென்று கேட்டபொழுது அப்பக்தன் 'கீதையில் ஒரு வாக்கியங்கூட எனக்குத் தெரியாதென்பது வாஸ்தவமே. ஆயினும் கீதை படிக்கும் பொழுதெல்லாம், குருக்ஷேத்திரத்தில், அர்ச்சுனன் முன் உட்கார்ந்து, கீதாரகசியத்தை எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் திவ்விய மங்கள ரூபத்தை நான் என் மனக்கண்ணால் பார்க்கிறேன். இதுதான் எனக்குக் கண்ணீர் பெருகக் காரணம்' என்றான்.

"இந்த மனிதனுக்குப் படிப்புவாசனை இல்லாதிருந்தபோதிலும் அவன் மேலான பராவித்தையைப் பெற்று பகவானைப் பக்தியினால் சுவானுபவத்திற்குக் கொண்டுவந்திருக்கிறான்."

பிரிவு. 2

## ஞானயோகம் : அத்வைதம்

பகவான்:—நல்லது, நான் வித்தையைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். ஆனால் பிரம்மமோ, வித்தை அவித்தை இரண்டையும் கடந்த மேலான வஸ்து வாய் இருக்கிறது. வித்தை என்பது, கடவுளை அடையச் சாதகமாயிருக்கும் அறிவு. அவித்தை என்பது, கடவுளை அடைய வொட்டாமல் மயக்கும் இவ்வுலகம்.

"வித்தையானது, பரப்பிரம்மமாகிய மேலான பதத்தை அடைய உதவியாயிருக்கும் படிகளில் உயர்ந்த கடைசிப்படி.

"மாயாரூபமா யிருக்கும் இந்த உலகம், வித்தை அவித்தையாகிய இவ்விரண்டினாலும் உண்டாக்கப்பட்டது. ஆகையினால், பிரம்மம் மாயாரூபமாகிய உலகத்தைக் கடந்து அப்பாலே நிற்கிறது.

"பிரம்மம் நன்மை தீமைகளில் பற்றற்றிருக்கிறது. அது தீபத்தின் வெளிச்சம்போன்றது. தீபத்தின் உதவியால் பாகவதம் முதலிய புண்ணிய கிரந்தங்களைப் படிக்கலாம்; அதே வெளிச்சத்தின் உதவியால் பொய்ப் பத்திரமும் எழுதலாம்.

"இன்னும் பிரம்மத்தை ஒரு ஸர்ப்பத்திற்கும் ஒப்பிடலாம். ஸர்ப்பத்தின் பற்களில் விஷமிருந்தபோதிலும், அவ்விஷம் அதற்குக் கெடுதியையோ மரணத்தையோ விளைவிக்கிறதில்லை. ஆனால், ஸர்ப்பத்தினால்

கடிக்கப்பட்ட மற்றவர்களுக்கு மாத்திரம் அது விஷமாயிருக்கிறது.

"இவ்வுலகத்திலிருக்கும் துக்கமோ, பாபமோ, தீமையோ, ஆகிய இவைகள் நமக்குமட்டு மிருக்கின்றனவே தவிர, பிரம்மத்தை அணுகுவதில்லை. அப் பரம்பொருள் இவைகளைக் கடந்து மேலாயுள்ளது.

"எப்படிப் பாம்பின் விஷப்பல், அதற்கு விஷத்தை உண்டாக்குகிறதில்லையோ, அதுபோலவே உலகிலுள்ள தீமை நிர்க்குணமான பரப்பிரம்மத்தைப் பாதிக்கிறதில்லை. பரப்பிரம்மம் நன்மை தீமை இவ்விரண்டையும் கடந்து மேலாக நிற்பது.

"ஆம், அப் பரம்பொருள் எதனாலும் பாதிக்கப்படுவதில்லை. மனிதர்களுக்கு எவை நன்மை தீமையோ, அவை பரப்பிரம்மத்தைப் பாதிக்கா. நன்மை தீமையைக்குறித்த மனிதரின் பிரமாணங்களால், அதை அளவிட முடியாது. அதன் ஜோதியானது நன்மை தீமை இவ்விரண்டையும் சமமாகப் பிரகாசிக்கச் செய்கிறது.

"இவ்வொன்றைத்தவிர வேதங்கள், புராணங்கள், தந்திரங்களுட்பட யாவும் உச்சிஷ்டம். ஏனெனில், அவை மனிதர்வாயினுல் உச்சரிக்கப்பட்டவை. ஒருவன் வேதங்கள் முதலானவைகளைப் படனம் செய்யும் பொழுது, தன் வாக்கிந்திரியத்தை உபயோகப்படுத்தியே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லும்பொழுது அவைகள் வாயினுல் எச்சிலாய் விடுகின்றன. ஆனுல் பிரம்மம் ஒன்றே உச்சிஷ்டமாகாதது. பரப்பிரம்மத்தின் ஸ்வரூபத்தை எடுத்துச்சொல்ல இவ்வுலகில் ஒருவருக்கேனும் சக்தியிருந்ததில்லை. அப் பரம்பொருள்,

நாவினால் சொல்ல முடியாதது; மனதினால் நினைக்க முடியாதது; புத்தியினால் அறியமுடியாதது."

வித்தியாஸாகரர்:—இன்று புதிதாக நான் ஒன்று அறிந்துகொண்டேன்; பரப்பிரம்மம் ஒன்றே எந்தச் சிருஷ்டியின் வாயினாலும் உச்சிஷ்ட மாகாதது என்பதை நான் இன்றே அறிந்தேன்.

பகவான்:—ஆம், அப்படித்தான். அப் பரம் பொருள், கால, தேச, நிமித்தாதிகளினால் கட்டுப்படாதது. அப்படியிருக்க எவரால் அதைப்பற்றி வாயினால் எடுத்துச் சொல்லமுடியும்?

"இன்னும் பரப்பிரம்மம் ஆழம் அளவிடமுடியாத சமுத்திரம்போன்றது. அப்படி, இப்படி என்று அதைப் பற்றி ஒன்றும்சொல்லமுடியாது. வேதம் அதை வர்ணிக்கத் தன்னால் இயன்றமட்டும் முயற்சி செய்தும், 'நித்தியானந்தம்' என்று மாத்திரமே கூற முடிந்தது.

"சமுத்திரத்தை வர்ணிக்கும்படி உன்னைக் கேட்டால், நீ வாயைத் திறந்து திக்கிப் பிதற்றி, 'ஆஹா! எவ்வளவு விசாலமானது! எவ்வளவு பிரம்மாண்டமான ஓயாத அலைகளையுடையது! ஓயாத இடிமுழக்கம் போன்ற சப்தத்தை யுடையது!' என்று மாத்திரமே சொல்லமுடியும்.

"சுகதேவருக்கும், அவர்போன்ற மஹரிஷிகளுக்கும், அந்த அமிருதஸாகரத்தைக் கண்ணால் பார்த்து, அதன் ஜலத்தைத் தொட்டு ருசிபார்க்கத்தான் முடிந்தது. அவர்கள் ஒருதரமாகிலும் அந்த ஸாகரத்திற்குள் பிரவேசித்திருந்தார்களேயானால், அதில் ஆழ்ந்துமூழ்கி, இவ்வுலகிற்குத் திரும்பி வந்திருக்கமாட்டார்கள்!

"ஒரு காலத்தில் சில எறும்புகள் ஓர் சர்க்கரை மலையை அடைந்தன. அம்மலை 'எவ்வளவு பெரிய தென்று அவைகளுக்குத் தெரியாது. அவைகள் சிறிதளவு தின்றதும் திருப்தியடைந்துவிட்டன. ஒவ்வொன்றும் சர்க்கரைக் கட்டியில் சிறிதளவு எடுத்துக் கொண்டுபோயிற்று. அப்படிப் போகும்போது, மற்றோர்தரம் தாங்கள் வந்தால் முழு மலையையும் தங்கள் இருப்பிடம் கொண்டுபோய்ச் சேர்த்துவிடலாமென்றெண்ணின :

"அந்தோ! அப்படித்தான் மனிதனுடைய நிலைமையும்! பிரம்மத்தை அடையும் பாக்கியம் சிலருக்கு மட்டும் கிடைத்திருக்கிறது. ஆனால், அனேகர் பிரம்மத்தைப் பூரணமாய் அடைந்தோமென்றும், பூரணமாய் அறிந்தோமென்றும் எண்ணம் கொண்டுவிடுகிறார்கள்!

"எறும்பு, சர்க்கரை மலையில் சிறிதளவு சாப்பிட்டுத் திருப்தியடைந்ததனால், அம்மலையையே தான் எடுத்துக்கொண்டுவிட்டதாக அது நினைக்கிறது. இப்படித்தான் மதிமயங்கின பண்டிதனும் நினைக்கிறான். அவன் தன் சிற்றறிவைக்கொண்டு பிரம்மத்தை அறிந்ததாகத் திருப்தியடைந்து விடுகிறான். பிரம்மம் இது என்றும், இது அல்லவென்றும் தனக்குத்தெரிந்துவிட்டதாகவும் அபிப்பிராயப்படுகிறான்.

"ஜனங்கள் நிர்க்குணமான பரப்பிரம்மத்தைப் பற்றிச் சுலபமாகப் பேசுகிறார்கள்! அதைப்பற்றி அவர்களுக்கு ஏதேனும் தெரிந்ததுபோலும்!

"சுகதேவரையும், இன்னும் இதர மஹரிஷிகளையும், அதிகமானால், பெரிய எறும்புகளுக்கு ஒப்பிட

லாம். அவர்கள் சர்க்கரையில் முற்கூறிய எட்டுப் பத்துத் துணுக்குகள் பிரமாணம் தின்றார்களென்றால் அதுவே அவர்களைப்பற்றி அதிகமாகக் கூறியதாகும்.

"சில எறும்புகள் ஆகாரத்திற்காகச் சர்க்கரை மலையையே தங்கள் இருப்பிடத்துக்குத் தூக்கிக் கொண்டு போய்விட்டன என்றால் எவ்வளவு அசம்பாவிதமா யிருக்குமோ, அப்படியே ஒருவன் பரப்பிரம்மத்தை அறிந்தேனென்று சொல்வதும். ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஒன்று கலப்பதே வேதாந்திகளின் நோக்கம்.

"ஒரு காலத்தில், உப்பினால் செய்த பொம்மையொன்று, சமுத்திரத்தின் ஆழத்தை அளப்பதற்காக, கையில் நூலும், ஈயக்குண்டும் எடுத்துக்கொண்டு போயிற்று. சமுத்திரக் கரையோரத்தில் வந்து, விசாலமாயும் கம்பீரமாயுமிருக்கும் சமுத்திரத்தைத் தன்னெதிரில் பார்த்தது. இதுவரையிலும் அது தன் தனி சுபாவத்தை இழக்காமல், உப்புப் பிரதிமையாகவேயிருந்தது; ஆனால் முன்சென்று ஜலத்தில் ஓரடி வைத்ததோ இல்லையோ உடனே அது சமுத்திரத்தில் கரைந்து தன் ரூபத்தை யிழந்துவிட்டது. பிரதிமையின் உப்பெல்லாம் சமுத்திர ஜலத்தில் கரைந்து போயிற்று. சமுத்திர ஜலத்திலிருந்து வந்த உப்பினால் செய்த பிரதிமை திரும்பவும் சமுத்திரத்திலிருக்கும் உப்போடு கலந்து விட்டது; ஜீவாத்மா பரமாத்மாவோடு திரும்பவும் ஒன்று சேர்ந்தது; கண்டமானது அகண்டத்தோடு கலந்தது.

"இந்த உப்புப் பொம்மைதான் கண்டமான (பிரிவு பட்ட) ஜீவாத்மா; மகத்தான உப்பு சமுத்திரம் அகண்டாகாரமான பரமாத்மா.

"உப்புப் பிரதிமை திரும்பிவந்து பெருங்கடலின் ஆழத்தைச் சொல்ல முடியாது. அளவிடமுடியாத நிர்விகல்ப சமாதியில், பரப்பிரம்மத்தை அடையும் பாக்கியத்தை எவனொருவ னடைகிறானோ, அவனும் அகண்டாகாரத்தோடு லயித்துப் போகிறபடியால், திரும்பி வந்து பரப்பிரம்மத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லமுடியாது. என் தாயின் அருளால் அந்த உப்புப் பிரதிமை திரும்பவும் தன் ஸ்வரூபத்தை அடையுமானால் அது தன்னிலைமைக்கு ஏற்றபடிதான் பேச வேண்டும். இவ்வுலகவாசிகளைப்போலவே அதுவும் நடந்துகொள்ளும்.

"ஆகையினால்தான் இந்த மஹாரகசியம் எவராலும் விவரிக்க முடியாமலிருக்கிறது. அனாதியாயும், அளவிடமுடியாத அகண்டபரிபூரணமாயுமிருக்கும் வஸ்துவைப் பிரமாணங்களால் வரையறுக்க முடியாது.

"ஒருவனுக்கு இரண்டுகுமாரர்களிருந்தனர். அவர்களுக்கு வயது வந்தவுடன் பிரம்மசரிய ஆசிரமத்தில் வைக்க விரும்பி, அவர்களை ஓர் ஆசாரியரிடம் ஒப்புவித்தான். அவர்கள் அவரிடம் வேதத்தையும் இதர கிரந்தங்களையும் அப்பியசித்து வந்தார்கள். சிலநாள் சென்றதும் தந்தை தன் குமாரர்களின் கல்விப் பயிற்சியைப் பார்த்துவரும் பொருட்டுச் சென்றான். அவ்விடம் வந்து, குமாரர்களை யழைத்து, 'பரம்பொருளையடையும்படியான தத்துவரகசியங்களை எடுத்தறிவிக்கும்

வேதாந்த சாஸ்திரங்களைப் படித்தீர்களா?' என்று வின விஞன். அதற்கு அவர்கள் 'ஆம், படித்தோ' மென்று விடையளித்தார்கள்.

" தகப்பன்:— குழந்தைகாள், நீங்கள் வேதாந்த சாஸ்திரங்களைப் படித்தீர்கள். சரி, பிரம்மம் எப் படிப்பட்டவஸ்து வென்று எனக்கு எடுத்துச்சொல் லுங்கள்.

" ஜேஷ்ட குமாரன் (வேதங்கள், புராணங்கள் முதலானவைகளை ஆதாரமாகஎடுத்துக்காண்பித்து):— ஆஹா! என் பிதாவே! பிரம்மம் அவாங்மனசகோச ரம். (வாக்கினல் சொல்லவோ, மனத்திஞலறியவோ முடியாதது). ஆஹா! அது அப்படிப்பட்டது, இப்படிப் பட்டது. அதைப்பற்றி நான் எல்லாம் அறிவேன்.

"அதன்மேல் தகப்பன் 'மிகவும் சரி; நீ பிரம் மத்தை அறிந்திருக்கிருய்; நீ உன் வேலைக்குப் போக லாம்' என்று அனுப்பிவிட்டு, இரண்டாவது குமாரனைப் பார்த்து 'அப்பா! நீ என்ன சொல்லுகிருய்; பிரம்மம் எப் படிப்பட்ட வஸ்து சொல்' என்ருன்.

"இதைக்கேட்டதும், இளைய குமாரன் தன் தலை யைக் குனிந்துகொண்டு மௌனமாக உட்கார்ந்திருந் தான். ஒரு வார்த்தையாகிலும் அவன் வாயிலிருந்து வரவு மில்லை; அவன் வாயைத்திறந்து பேசப்பிரயத் தனப்படவுமில்லை. இந்நிலையில் அவன் வெகு நேரம் வரையில் இருந்தான்.

"அப்பொழுது, தகப்பன், 'என் குழந்தாய், நீ தான் சரி; அகண்ட பரிபூரணமாயிருக்கும் பிரம்மத் தைப்பற்றி யாதொன்றும் சொல்லமுடியாது. நீ அதைப்

பற்றி வர்ணிக்க ஆரம்பிப்பாயானால், முடிவில்லா வஸ்துவை முடிவுள்ள உபமானங்களினாலும், பரிபூர்ண வஸ்துவை அற்ப சுபாவமுள்ளவைகளாலும், அளவற்றதைக் காலதேசவர்த்தமானாதிகளாலும் வரையறுத்துச் சொல்லவேண்டிவரும். ஆகையினால், நூறு சுலோகங்களைச் சொல்லி நூறு பிரமாணங்களை எடுத்துக் காண்பித்து ஒப்புவிப்பதைவிட உன் மௌனமே உன் அறிவின் சாதுர்யத்தை நன்றாய் விளக்குகிறது' என்று கூறிக் களிப்படைந்தான்.

"ஆம், எவன் உண்மையான ஞானமடைந்திருக்கிறானோ, அவன் பேசுவதையும், வீணாக வாதம்செய்வதையும் ஒழிக்கிறான். அனுபூதியாக அடையும்படியான பொருள் பிரம்மம். அதனை வர்ணிக்கவோ, தெரிந்துகொள்ளவோ முடியாது. உண்மைஞானத்தின், அல்லது அனுபவத்தின் அடையாளம் சந்தேக நிவர்த்தி அதாவது வாக்குவாத நிவர்த்தியுமாகிறது.

"அடுப்பின்மேல், பாத்திரத்தில் வைத்திருக்கும் வெண்ணெயானது எதுவரையில் சத்தம் செய்கிறது? வெண்ணெயோடு கலந்திருக்கும் ஜலம் சுண்டுகிறவரையில்தான். அதுவரையில், வெண்ணெயானது கொதித்துக்கொண்டு தளதளவென்று சப்திக்கிறது. பக்குவமாய்க் காய்ந்து சப்தம் அடங்கின நெய்தான் ஞானமடைந்து பிரம்மத்தை யடைந்தவன். காய்ச்சப்படாத வெண்ணெயே ஞானத்தை நாடிச் செல்லும் சிஷ்யன். அதோடு கலந்திருக்கும் ஜலத்தை நெருப்பின் மீது வைத்து நீக்கவேண்டும்.

"இந்த ஜலம்தான் அஹங்காரம். அதை நீக்கும் பொழுது அதிகமாகச் சப்தம் செய்கிறது. அஹங் காரம் நீங்கினதும், ஜீவன் பக்குவமாய்விடுகிறது. சத்த மில்லை; இரைச்சலில்லை. (சிரிப்பு)

"அதேசமயத்தில்அழுக்குமுழுவதும் கீழே தங்கி விடுகிறது. இவ்விடத்தில் அழுக்கு என்பது காமினி காஞ்சனம்—பெண், பொன்—இவைகளின் மீதிருக் கும் ஆசையும், அதனுல்வரும் துன்பங்களுமாம்.

"இன்னும், முக்தன் நிறைகுடம்போல்வான். ஜலத் துக்குள் ஒரு குடத்தை அழுத்தினுல் குடத்தினுள் ஜலம் போகும்பொழுது, 'பக், பக்' என்ற சத்தம் உண் டாகிறது. குடம் நிரம்பினதும், அச்சத்தம் நின்று விடுகிறது. என் ஜகன்மாதாவி னருளால், உண்மை ஞானமடையச் செய்யும் விவேக விசாரணை, அல்லது தத்துவ வாதம் இச்சத்தம். எப்படிச் சத்தமானது குடம் நிரம்பாததைக் காட்டுகிறதோ, அவ்வாறே மேற் கூறிய விசாரணை முதலானவை பிரம்மஞானம் அடை யாததைக் காண்பிக்கின்றன.

"வண்டானது புஷ்பத்தி னுட்கார்ந்து இனிய தேனைச் சாப்பிட ஆரம்பிக்கிறவரையிலுமே ரீங்காரம் செய்கிறது. தேனைச் சாப்பிட ஆரம்பித்தமாத்திரத் திலேயே எல்லாச் சத்தமும் நின்றுவிடுகிறது.

"ஆயின், முக்தனுயிருக்கும் குருவுக்கும், அவ னுடைய சிஷ்யனுக்கும் ஏற்படும்படியான சம்பந்தம் எத்தகையது என்ற கேள்வி யுண்டாகிறது. சிஷ்ய னுடைய அஞ்ஞானத்தை விலக்கும் நோக்கத்துடன்

குரு பேசவேண்டும். இது நித்தியாநித்திய வஸ்து விசாரணையே—இது ஒரு தீங்கையும் செய்யாது.

"வெண்ணெய் நன்றாய்க் காய்ந்து நெய்யாக மாறியதும் யாதொரு சப்தமும் செய்கிறதில்லை என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ஒரு பூரிசெய்து அதில் போட்ட மாத்திரத்திலேயே, பூரியிலிருக்கும் ஜலமானது காய்ந்த நெய்யில் கலப்பதனால் மறுபடியும் சத்தத்தை உண்டுபண்ணுகிறது. பூரி நன்றாய்ப் பொரிந்து பக்குவமாகிறவரைக்கும் சத்தமிருந்துகொண்டுதானிருக்கும்.

"சிஷ்யனைப் பூரிக்கு ஒப்பிடலாம். முக்தனாயிருக்கும் குருவாகிய காய்ந்த நெய்யோடு சிஷ்யனாகிய பூரி கலக்கும்பொழுது அச்சிஷ்யனுக்கு ஞானத்தை ஊட்டும் பொருட்டுத் திரும்பவும் விசாரணை (நித்தியாநித்தியவஸ்து விசாரணை) ஏற்படுகிறது. எப்படிப் பூரி பொரிந்து பக்குவமானதும் சத்தம் நின்றுவிடுகிறதோ, அவ்வாறே சிஷ்யனுக்கு ஞானோதயமானதும் குருவின் உபதேசமாகிய சத்தம் நின்றுவிடுகிறது.

"ஆத்மாவே ஆத்மாவை அறிகிறது. ஜீவாத்மாவானது அஹங்காரத்தினால் தன்னைத் தனிமையாகப் பாவிக்கிறவரையில் பரமாத்மாவை அறியமுடியாது. அகண்டமாகும் பொழுதுதான், அகண்டானுபவம் ஸித்திக்கும்.

"மாயையினுடைய இராஜ்யத்தில் தான் வேற்றுமை ஏற்படுகிறது. அதாவது மாயைதான் வேற்றுமைக்குக் காரணம். மாயை நம்மைவிட்டு விலகும் பொழுது வேற்றுமையும் மறைந்து விடுகிறது.

"பிரபஞ்சத்திலிருக்கும்படியான சர்வ விஷயங்களும்—சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் ஆகிய இம்மூன்றிற்கும் உட்பட்டிருக்கும் எல்லா வஸ்துக்களும், எல்லா வியவஹாரங்களும்—சரீரம், மனம், பிராணன், ஜாக்ர ஸ்வப்ன ஸுஷுப்தி தியானம் இவைகளுக்கெல்லாம் அடங்கியிருக்கும் சர்வ ஜீவகோடிகளும் மாயையின் வசத்தில்தா னிருக்கின்றன. ஸ்ரீமத் சங்கராசாரியர் வழிப்படி வேதாந்தத்துக்குப் பொருள் கூறும் ஞானிகளும் மற்றவர்களும் இவைகளை மித்தை என்று சொல்கிறார்கள்.

"இவர்களின் கொள்கைப்படி பரப்பிரம்மம் ஒன்றே நிஜம்; ஜகத் மித்தை (அதாவது பாரமார்த்திகத்தின் உயர்ந்த நிலைமையிலிருந்து பார்க்கும்போது). பரமாத்மாவைநோக்க, உலகம் மனிதன் இதரஜீவகோடிகள் எல்லாம் பொய்யாயிருக்கின்றன; ஏனெனில் நிஜமானதாயிருக்கும்படியானது பரப்பிரம்மம் ஒன்றே. மாயையானது பொய்யென்றறியும்பொழுது அகங்காரம் என்பது முற்றிலும் அழிக்கப்படுகிற தென்று சொல்லலாம். அதன் அடையாளமும் கொஞ்சங்கூட காணப்படுகிறதில்லை. அதுதான் சரியான சமாதி.

"நாம் நிஜமென்ற எண்ணம் நம்மிடம் ஸ்திரமாகக் குடிகொண்டிருக்கும்பொழுது உலகம் பொய்யென்று சொல்வது அஸம்பாவிதம்! பரமாத்மாவை அறியாதவன் உலகம் பொய்யென்று அறியமாட்டான்.

"சமாதி தெளிந்து, ஜாக்ராவஸ்தையி லிருக்கும் கீழ்நிலைக்கு ஓர் ஞானி திரும்பி வரும்பொழுது, என்

தாயின் அருளால், அவன் திரும்பவும், ஆனால் மாறு பட்ட, பரிசுத்த அகங்காரத்தை அடைகிறான்.

"இவ்விதம் அகங்காரத்தைத் திரும்ப அடைந்ததும், ஞானி, தேசகால நிமித்தத்திற் குட்பட்ட இவ் வியாவகாரிக உலகை மறுபடியும் அடைகிறான். தன் அகங்காரம் நிஜமாயிருக்கிறவரைக்கும் உலகம் நிஜமாய்த்தோன்றி, பரமாத்மா பொய்யாகத்தோன்றும்.

"மாறுபட்ட இப்பரிசுத்த அகங்காரத்தைத் திரும்ப அடையும்பொழுது, உலக ரூபமாயிருக்கும் மாயை நிஜமாகவே தோன்றும். ஆயினும், ஞானியினுடைய இந்த அகங்காரம் பிரம்மதரிசனத்தினால் பரிசுத்த மடைந்திருப்பதனால், இந்திரியங்களுக்குத் தோற்றும் உலகாதிகள் பரமாத்மாவின் ரூபங்களாகவே அவனுக்குக் காணப்படும்.

"இன்னும் இவ்வுலகமாகிய மாயையை வித்தையாகவும் அவித்தையாகவும் பார்க்கிறான்.

"வித்தையாவது பரமாத்மாவை அடையச்செய்வது. இதைச் சேர்ந்தவை, விவேகம் வைராக்கியம், பக்தி முதலியன. அவித்தை என்பது அஞ்ஞானம். இது பரமாத்மாவை அடையாம விருப்பதற்குக் காரணமாயிருக்கும். இதைச் சேர்ந்தவை, பெண், பொன், கீர்த்தி, காமியகர்மம் ஆகிய இவைகளாம்.

"ஸமாதியில் பிரம்மத்தை நிர்க்குணமாயும் ஸகுணமாயும் அறிந்தவன் விஞ்ஞானி எனப்படுவான். விஞ்ஞானி என்ற பதத்திற்குக் கடவுளை நன்றாயறிந்தவன் என்று பொருள்.

"பரப்பிரம்மமே சக்தியாக மாறி ஈசுவரன் என்றும் மாயையென்றும், ஜீவன் என்றும் ஜகத் என்றும் பேதத்தை உண்டாக்குகிறது என்பதை விஞ்ஞானிகள் அறிந்திருக்கிறார்கள். அவர்கள் உள்ளும் புறம்பும் ஈசுவரனைத் தரிசித்து, நேரே அவனிடத்திலிருந்தே மேற்கூறிய இரகசியத்தை அறிந்திருக்கிறார்கள். ஸகுணப்பிரம்மமான ஈசுவரன் அவர்களுக்கு, 'சமாதியிலடையக்கூடிய நிர்க்குணப் பிரம்மமே நான். நானே இவ் வேறுபாடுகளை உண்டு பண்ணி யிருக்கிறேன். இருபத்து நாலு தத்துவங்களாகிய ஜீவனுக்கும் ஜகத்திற்கும் நானே காரணம்' என்று சொல்லுகிறார்.

"ஸகுணப் பிரம்மமாகிய ஈசுவரன், சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய இவைகளுக்குக் காரண பூதராய், பக்தகோடிகளுக்கு அவர்கள் எந்தெந்த ரூபத்தில் பஜிக்க வேண்டுமென்று நினைக்கிறார்களோ அந்தந்த ரூபத்தில் பிரத்தியக்ஷமாகியும், விஞ்ஞானிகளுக்குத் திரிகுணரூபராயும் தரிசனமளிக்கிறார்.

"ஸத்வகுணத்தால் ரக்ஷித்தும், ரஜோகுணத்தால் சிருஷ்டித்தும், தமோகுணத்தால் ஸம்ஹாரம் செய்தும் வருகிறார். இம்மூன்று குணங்களும் அவரிடத்திலிருக்கின்றன. ஆனால், அவர் இவைகளில் இல்லை. இவைகளில் பற்றற்றிருக்கிறார் அவர்.

"விஞ்ஞானியானவன், ஆத்ம சுத்தியடைந்து, அப் பரப்பிரம்மத்தின், ஸகுணத்தன்மை, நிர்க்குணத்தன்மை இவ்விரண்டையும் பார்க்கிறான். உள்ளும் புறம்பும் ஈசனுடைய குரலை அவன் கேட்கிறான். அது மட்டிலுமல்ல. அவன் நேரில் ஈசுவரனோடு சம்பாஷிக்கிறான்.

அவன் ஈசுவரனைப் பிதாவாகவும், மாதாவாகவும், புத்திரனாகவும், மனைவியாகவும், சகோதரனாகவும் இன்னும் பலவாறாகவும் பாவித்துச் சேவை செய்கிறான். இவ்வித ஸித்தியடைந்த விஞ்ஞானிகளின் பிரமாணப்படி, மாயாசக்தியாகிய இவ்வுலகம் பொய்யன்று; இது ஜீவாத்மாவுக்கும் இன்னும் சகல ஜீவராசிகளுக்கும் காரணமான ஈசுவரனுடைய தோற்றமே. நேரே அறிந்து சொல்வதனால் இப்பிரமாணம் பொய்யாகாது.

"பகவான், ரிஷிகளுக்கெல்லாம் ஸகுணமாயும், நிர்க்குணமாயும் தரிசனமளித்திருக்கிறார். லோகோபகாரார்த்தமாகவும் பக்தகோடிகளுக்கு ஆனந்தத்தை உண்டாக்கவும், இடைக்கிடைத் தம்மை இவ்விதம் தோற்றுவிக்கிறார்.

"பரம்பொருள், நிஷ்கிரியனாய், சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார ரஹிதனாகப் பாவிக்கப்படும்பொழுது, அதை நிர்க்குணப்பிரம்மம் அல்லது புருஷன் என்று சொல்லுகிறேன். கிரியையோடு கூடினதாய், சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார அதிகாரத்தோடு பாவிக்கும்பொழுது, ஸகுணப்பிரம்மம் என்றும் மாயை, பிரகிருதி, அல்லது சக்தி என்றும் அழைக்கிறேன்.

"உபமானங்கள் தாங்களறிவிக்கும் பொருளோடு முற்றிலும் பொருந்தா. ஏகதேசம், அறிவதற்குக் கடினமான ஏதாவது ஒரு விஷயத்தை மாத்திரம் விளக்கிக்காட்டும். அதன் குணம் முழுமையும் எடுத்தறிவிக்கமாட்டா. ஒருவனைப் புலிக்குச் சமானமென்று உபமானம் சொன்னால், அவனை எல்லா விஷயத்திலும், அதாவது தலை, பற்கள், நகங்கள், வால், இவை எல்லா

வற்றிலும் ஒப்பிட்டுப்பார்ப்பது உசிதமாயிராது. இதற்கு அர்த்தம், புலியைப்போல் பயங்கரமான தோற்றமுடையவன் என்பதேயாம்.

"ஸகுண, நிர்க்குணப் பிரம்ம சம்பந்தத்தை யாதொரு உபமானமும் சரியாக விளக்கிக்காட்டாது. அதை அனுபவித்தே அறியவேண்டும்.

"ஆனால், உபமானமானது, இந்திரிய கோசரத்திற்கு உட்படாமலிருக்கும் வேதாந்த விஷயங்களின் உண்மையை ஏகதேசம் அறிய உபயோகமாயிருக்கிறது. உண்மையில், நிஷ்கிரியனாயும், நிர்க்குணனாயும் இருக்கும் பிரம்மத்திற்கும், ஸகுணமாயும் கிரியையோடுகூடியதாயும் இருக்கும் சக்திக்கும் பேதமில்லை.

"எவ்வாறு அக்கினியும், அதன் தகிக்கும் குணமும் ஒன்றாயிருக்கின்றனவோ, அவ்வாறே நிர்க்குண ஸகுணப் பிரம்மம் ஒரே வஸ்துதான். அக்கினியை நினைக்கும் போதெல்லாம் அதன் எரிக்கும் தன்மையும், எரிதலை நினைக்கும் போதெல்லாம் அக்கினியும் கூடவே கருதப்படுகின்றனவல்லவா?

"பாலும் அதன் வெண்மையும் போல் இவையிரண்டும் ஒன்றே. வெண்மையை நீக்கிப் பாலை ஒருவன் நினைக்க முடியாது.

"மணியும் அதன் ஒளியும் போல் இவை ஒன்றேயாம். மணியின்றி மணியின் ஒளியையும், மணியின் ஒளி நீக்கி மணியையும் நீ கருதுதல் முடியாது.

"பாம்பும் அதன் வளைந்தோடும் தன்மையும் போல் இவை ஒன்றேயாம். பாம்பின்றி அதன் வளைந்தோடும் தன்மையையோ, வளைந்தோடுந் தன்மையை நீக்கிப் பாம்பையோ நீ எண்ணுதல் முடியாது.

## பிரிவு. 3

## எல்லாம் வல்ல ஜகதீசுவரி

ஸ்ரீராமகிருஷ்ணர்:—நான் முன் சொன்னமாதிரி ஸகுணப்பிரம்மமே சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவா யிருக்கிறது. இச்சக்தி ஓர் பக்கம், பகவானை அடை விக்கும் வித்யா சக்தியாயும், மற்றோர் பக்கம், உலக வாழ்க்கைக்கு இழுத்துச்செல்லும் அவித்யா சக்தியாயும் ரூபமெடுத்திருக்கிறது. இது மனிதர்களி லும், இதர ஜீவராசிகளிலும் அந்தந்த சிருஷ்டிக்குத் தக்கபடி உற்பவித்து வருகிறது. இச்சக்தியின் ஸ்வ பாவம் வேற்றுமையே தவிர ஒற்றுமையல்ல.

வித்தியாஸாகரர்:—ஸ்வாமி, அவ்விதமாயின் நாம் பிறக்கும்பொழுது ஸம சக்தி யில்லாதவர்களா யிருக் கிறோமா? கடவுள் பக்ஷபாத முள்ளவரா சிலருக்கு அதிகமாகவும் சிலருக்குக் குறைவாகவும் சக்தியளிப் பதற்கு?

ஸ்ரீராமகிருஷ்ணர்:—ஈசன் செயலைத் தெளிவாய் அறிய மனிதனால் முடியாது. நல்லது; உள்ளது உள்ள வாறே நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். உலகம் எவ் வாறு தோற்றுகிறதோ அவ்வாறே நாம் ஒத்துக்கொள்ள வேண்டும். ஈசுவரன் ஸர்வ வியாபி என்று சொல்லும் பொழுது, ஸமஸ்த ஜீவராசிகளிலும், சேதனு சேதனங் களிலும், உதாரணமாக அணுவிலும், எறும்பிலும் வியாபித்திருக்கிறார். ஆயினும், இவைகளின் சக்தியோ மிகவும் ஏற்றத்தாழ்வுள்ளதாக இருக்கிறது.

"அவ்வித மில்லாவிட்டால், ஒருவன் தனிமையா யிருந்து பத்து மனிதர்களை எப்படி அடிக்க முடியும்? ஒருவன் தன்னைவிடக் கொஞ்சம் பலவானுயிருக்கும் மனிதனைப்பார்த்து ஓடுவதை ஸகஜமாய் நாம் பார்க்க வில்லையா?

"சரீரபலத்தி லெப்படியோ, அப்படியே ஒழுக்கத் திலும், ஞானத்திலும் வேறுபாடிருக்கின்றது. ஆத்ம வாழ்க்கையில் பல படிகளிருக்கின்றன.

"உதாரணமாக, மற்றவர்களைவிட உம்மிடத்தில் ஏன் ஜனங்கள் அதிகமாக மரியாதை காட்டுகிறார்கள்? நீர் என்ன, ஓர் அற்புதக்காக்ஷி உடையவரா எல்லோ ரும் உம்மை வந்து பார்ப்பதற்கு? உமக்கு என்ன கொம்பு இரண்டு முளைத்திருக்கின்றனவா? (யாவரும் சிரித்தல்)

"இல்லை; வேற்றுமை இயற்கைவிதி. என் ஜகன் மாதா ஒருவளே பலரூபமாக அவதரித்திருக்கிறாள். சர்வ வல்லமையுடைய ஜகதீசுவரியான அவள், தன்னையே வெவ்வேறாகப்பிரித்து, ஜீவர்களாயும், ஜகத்தாயும், சரீர புத்தி ஒழுக்க ஞானங்களில் வேற்றுமையுள்ள இந்தப் பற்பல சக்திகளுடனும் குணங்களுடனும் தோற்றுவிக் கிறாள்.

"என் ஜகன்மாதா, வேதாந்தத்தில் பிரம்ம மென்று சொல்லப்படும் பரமாத்மாவைத் தவிர வேறல்ல."

பகவான் அடியில் வரும் கருத்துக்களடங்கிய பாடலைப் பாடினார்.

## எல்லாம் வல்ல அறிவரிய என் ஜகன்மாதா

"காலரூபமாயிருக்கும் பரப்பிரம்மத்திற்குப் பிரியை யாகிய என் ஜகன்மாதாவான காளியை அறியக்கூடியவர் கள் எவராவது உளரா? ஆறு சாஸ்திரங்களாலும் அவள் திவ்விய ஸ்வரூபத்தைத்தரிசிக்க முடியாது. யோகியானவன் மூலாதாரத்திலும், ஸகஸ்ராரத்திலும் அவள் திவ்விய ரூபத்தை எக்காலும் தியானிக்கிறான். இந்தத்தாமரைக் காட்டில் இரண்டு ஹம்ஸங்கள் ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து ஸஞ்சரிக்கின்றன. அவைதான் கால ரூபமான பிரம்மமும், அவன் பிரியையும்.

"எப்படி ஸ்ரீராமச்சந்திரனுக்கு சீதை பிரிய பத் தினியோ அப்படியே என் அன்னையாகிய சக்தியும் பரப் பிரம்மமாகிய சிவனது அத்தியந்தப்பிரியை. என்னுடைய ஜகன்மாதாவின் மகிமை மஹாகால ரூபியாகிய சிவனுக்குத் தெரியுமேதவிர பாமரஜனங்கள் அவளுடைய மகிமையை அறியார்கள்.

"இந்த ஜகத் என் ஜகன்மாதாவினிடத்திலிருந்து தான் ஜனித்தது. ஆஹா, அவளுடைய மகிமையைப் பார்! அவளுடைய இச்சையினால், தன்னிஷ்டப்பிரகாரம் தனித்து ஒவ்வொரு இடத்திலும் தன் மகிமையுடன் தோற்றுகிறாள்.

"பராசக்தியை அறியமுடியுமென்று ஒருவன் நினைப் பது, மகத்தான கடலை நீந்திக் கடக்க முடியுமென்று நினைப் பதுபோலாம்! இதைக்கேட்டால் யார்தான் நகையார்கள்? இதை என் மனதினால் அறிகிறேன். ஆனால் என் பிராண னுக்கு எட்டவில்லை! சந்திரனை எட்ட முயலும் குள்ள னேனென் என்று ஸ்தோத்திரக்கவி 'இராமப் ப்ரஸாத்' சொல்லுகிறார்."

இக்கீர்த்தனை முடிவில், ஸ்ரீ ராமகிருஷ்ணர், நாவி னுல் வர்ணிக்க முடியாத ஸமாதி நிலையை அடைந்தார். தேவகானத்தையொத்த அவ்வினிய கீதம் நின்றது. வெளிக்கண்கள் சலனமற்று நின்றன. உட்கண்கள் திவ்விய மங்கள ரூபத்தின் அழகை அனுபவித்துக்கொண்டிருந்தன. அவருடைய முகம் திவ்விய காந்தியோடும், புன்சிரிப்போடும் பிரகாசித்துக்கொண்டிருந்தது. இவ்வண்ணம் ஆனந்தக்காக்ஷியில் அவர் சிறிதுநேரம், நிலைத்திருந்தார்.

கொஞ்சம் ஸ்மரணை வந்தவுடன் பகவான் சொல்லுகிருர்: "ஆம், என் அன்னை பரம்பொருளாகிய பிரம்மத்தைத் தவிர வேறில்லை. ஆறு சாஸ்திரங்களும் அவளைப்பற்றி வர்ணிக்கப் பிரயத்தனப்பட்டு வழி தெரியாமல் நின்றுவிட்டன.

"என் தாயின் கிருபையினுல் அகங்காரமானது முற்றிலும் நீக்கப்பட்டால், ஸமாதியில் நிர்க்குணப்பிரம்மானுபவம் கிடைக்கிறது. அப்பொழுது நிர்க்குணப் பிரம்மத்தை அறிவது நிர்க்குணப் பிரம்மமே யன்றி ஜீவனல்ல. அகங்காரமானது பரிசுத்தமான நிலையை அடைந்தால், ஈசுவரியின்அருளினுல், ஸகுணப்பிரம்மத்தின் தரிசனம் கைகூடும். அவளுடைய அவதாரங்களான ஸ்ரீ கிருஷ்ணன், சைதன்யதேவர் முதலான ரூபங்களாகவும், ஸ்திரீ, புருஷ, பால ரூபங்களாகவும், இருபத்து நான்கு தத்துவங்களாகவும் அறிதல் கூடும்.

"ஸகுணப்பிரம்மமான என் அன்னையின் கிருபையிருக்கும் பக்ஷத்தில், இப்பரிசுத்தமான அகங்காரமும் அழிக்கப்பட்டு நிர்விகற்ப ஸமாதி கைகூடும்.

இந்த ஸமாதியில் நிர்க்குணப் பிரம்மானுபவம் ஏற்படுகின்றது.

"சிலவேளையில் அவள் தன் பக்தர்களிடத்தில் அப் பரிசுத்தமான அகங்காரத்தை இருக்கச்செய்து, அவர்களுக்கு ஸகுணப் பிரம்ம தரிசனத்தைக் காண்பித்து, அவளோடு பேசும்படி கிருபையளிக்கிறாள்.

"பக்தர்கள் எந்த திவ்விய ஸ்வரூபத்தைப் பஜிக்கிறார்களோ, உபநிஷத்துக்கள் யாரை ஸகுணப் பிரம்மமென்று கோஷிக்கின்றனவோ, அந்த ஈசுவரி மட்டுமே பரப்பிரம்மத்தை அறிய அருள்புரியக்கூடும். தத்துவ சாஸ்திரிகள் எதை நம்பியிருக்கிறார்களோ அந்த விவேகசக்தியானது, பராசக்தியும் ஜகன்மாதாவுமான என் அன்னையினிடத்திலிருந்துதான் வரவேண்டும்.

"பகவத் ஸங்கீர்த்தனம், தியானம், பக்தி, ஆத்ம பரித்தியாகம் இவைகளெல்லாம் ஆதிசக்தியாகிய என் அன்னையினிடத்திலிருந்தே அடையவேண்டும்.

"மேலும், ஸமாதி அடையும் ஞானி, சிலவேளையில் அந்தநிலையிலேயே வைக்கப்படுகிறான். மற்றும் சில வேளையில் அந்த ஸமாதிநிலையை அடையமுடிகிறதில்லை. அந்த திவ்விய நிலைமையில் அவனை வைத்திருப்பது யார்? அந்த திவ்விய நிலைமையிலிருந்து உலக வியவகாரமாகிற கீழ் நிலைமைக்குக் கொண்டுவருவதும் யார்? என் அன்னையாகிய ஜகதீசுவரியே.

" அப்படிப்பட்டவள் பொய்யாயிருக்கமுடியாது. அவள் பரமாத்மாவின் ஸகுணநிலை. என் அன்னை தன் குழந்தைகளுக்கு, 'நான் இருப்பது மெய்; உபநிஷத்தில் சொல்லப்படும் ஆத்மாவும், வேதாந்தத்தில்

சொல்லப்படும் பிரம்மமும் நான்தான். ஜகன்மாதாவும் நானே' என்று சொல்லுகிறாள்.

"ஈசுவரி இவ்விதமாகத் தன்னைத் தோற்றுவிக்கிறாள். இதுவே அவள் இருக்கும் உண்மையை நன்கு விளக்குகிறது.

"நிர்க்குணமாயும், அகண்டாகாரப் பரம்பொருளாயும் இருக்கிற அந்தப் பிரம்மம், அதனுடைய ஸகுண நிலையான ஈசுவரனாலேயே காண்பிக்கப்படுகிறது. ஸமாதியிலிருக்கும் புருஷன், அப் பரப்பிரம்மத்தைப் பற்றி ஒன்றும் சொல்லமுடியாது. ஏனெனில், கடலை அடைந்த உப்புப்பிரதிமைபோல் தன் ஸ்வரூபத்தையிழந்துவிடுகிறான். ஸமாதியிலிருந்து திரும்பிவந்தாவது அப் பரமாத்மாவைப்பற்றிச் சொல்லமுடியுமோவென்றால் அதுவும் முடியாது. ஏனெனில் கண்டமான வுடனேயே, அதாவது தன்னில் தானயிருந்த உயர்நிலையை யிழந்ததும், அகண்டத்தைக் குறித்து மௌனியாய்விடுகிறான். உலகவியவகாரத்தை எப்பொழுது அடைகிறானோ, அப்பொழுதே அகண்டரூபமாயிருக்கிற பரமாத்மாவைக்குறித்து ஒன்றும் சொல்லமுடியாதவனாய் வாயை மூடிக்கொள்ளுகிறான்.

"என் அன்னை, '(உபநிஷத்தில் சொல்லப்பட்ட) அந்த நிர்க்குணப்பிரம்மமே நான்' என்று சொல்லுகிறாள்.

"இப்படி, பரப்பிரம்மத்திற்கு ருசுவாயிருப்பதும் தெய்வ அருள்வாக்கொன்றே யாகும்.

"ஒருவன் தன்னறிவின்றமட்டும் நிர்க்குணப் பிரம்மத்தை வர்ணிக்கப் பிரயத்தனப்பட்டாலும்,

அவ்வர்ணனையில் எப்படியும் கண்டமான தன்னுடைய அகங்காரத்தைச் செலுத்தியே யாகவேண்டும். அப்பொழுது அப் பரப்பிரம்மம் தன் அகண்டஸ்வரூபத்தை யிழந்து வரையறைக் குட்பட்டதாகின்றது. இது அஸம்பாவிதம். நம்முடைய அற்பபுத்தியையும், விசாரணை சக்தியையும் கொண்டு பிரம்மத்தை யறிய முடியாது. ஆகையினால் யுக்தி பிரயோஜனமில்லை. அருள்சுரத்தல் வேண்டும்.

"பெரும்பாலும், பரிசுத்த மடைந்த ஜீவர்களுக்கே ஸகுணப்பிரம்மம் திவ்யமங்களஸ்வரூபமாகத் தன்னைத்தோற்றுவிக்கிறது. அதாவது ஈஸ்வரனிடத்திலிருந்து அடையப்பட்ட திவ்விய சரீரத்தைச்சேர்ந்த ஞானக் கண்களோடுகூடின ஜீவாத்மாக்களே இந்த திவ்வியஸ்வரூபங்களைப் பார்க்கிறார்கள். இது எல்லோருக்கும் கிடைக்காது; என் தாயின் அருளினால் பரிசுத்தவான்கள்மட்டிலுமே இத் திவ்யரூபங்களைப் பார்க்க முடியும்.

"ஒருகாலத்தில் ஸ்ரீராமச்சந்திரர் மகாபக்தனை ஹனுமானைப் பார்த்து, 'என் குழந்தாய்! நீ எம்முறையில் என்னைப் பாவிக்கிறாய்? எவ்வாறு தியானம் செய்கிறாய்' என்று கேட்டார். அப்பொழுது ஹனுமான், 'ஓ ராமா! எனக்குத் தேக புத்தி ஏற்படும்போது நீ ஆண்டானுகவும் நான் அடிமையாகவும் நினைத்துப் பஜிக்கிறேன். மற்றவேளைகளில் உன்னைப் பூரணமாகவும் என்னை அதிலொரு அம்ஸமாகவும் தியானிக்கிறேன். ஆனால் தத்துவஞானம் எனக்கு உதிக்கும்பொழுது

நானே நீ யென்றும் நீயே நான் என்றும் அறிந்து அனுபவிக்கிறேன்' என்றார்.

"பக்தனான ஹனுமான் சொன்னதின் கருத்தென்னவென்றால், சமாதியில் தன்னுடைய ஜீவனானது ஸ்ரீராமனாகிய அகண்ட சச்சிதானந்த பரிபூரணமாகிய நிர்க்குணப் பிரம்மத்தில்மூழ்கி இரண்டறக் கலந்து விட்டது என்பதாம். இதுதான் பிரம்மஞானம்.

"மேல், கீழ், மற்றும் எல்லாத்திசைகளிலும், அகண்டஜலம் பரவியிருப்பதாக வைத்துக்கொள்வோம்; அதில் சில பாகங்கள் மாத்திரம் குளிர்ச்சியினால் உறைந்து பனிக்கட்டியாகிறது. அந்தப் பனிக்கட்டியை உஷ்ணப்படுத்தினோமானால் அது உருகி திரும்பவும் ஜலமாகிறது.

"பிரம்மமே அகண்டமான ஜலம். அகண்டமான ஜலத்தில் பனிக்கட்டியாக உறைந்துபோகும் பாகங்களே பக்தர்கள் தரிசிக்கும் ஈசுவர அவதாரங்களாம். பக்தனுடைய ஆத்மபரித்யாகம், சிரத்தை, பிரேமை, பக்தி இவைகளே ஜலத்தை உறையச் செய்யும் குளிர்ச்சி. 'நான்' என்ற அகங்காரம் முற்றும் நசிக்கப்பெற்று நிர்விகல்ப சமாதியை அடைவதற்கு ஏதுவாயிருக்கும் நித்தியாநித்திய வஸ்துவிவேக விசாரணையே பனிக்கட்டியை உருகச்செய்யும் உஷ்ணமாகும்.

"பக்தனுக்கு ஈஸ்வரன் பல திவ்யரூபங்களில் தரிசனமளிக்கலாம். எவனொருவன் எனதன்னையின் அருளால் நிர்விகல்ப சமாதியை அடைகிறானோ அவனுக்கு அதே ஈஸ்வரன் அகண்ட பரமாத்ம ஸ்வரூபமாகத் தோற்றுகிறான்.

"ஞானமார்க்கத்தாலும், பக்திமார்க்கத்தாலும் அடையக்கூடிய அனுபூதியின் ஒற்றுமை இங்கு தெளிவாய் விளங்குகிறது.

"பிரம்ம ஞானத்தை அடையப் பிராப்தியுள்ளவனுக்கு இருபத்துநாலு தத்துவங்களும் ஜகதீசுவரியினிடத்திலிருந்தே வந்ததாகத் தோற்றுவிக்கப்படுகின்றன.

"எனதன்னையான ஜகன்மாதா ஒன்றாகவும், பலவாகவும், இவ்விரண்டையும் கடந்த பரமாத்ம சொரூபமாகவும் இருக்கிறாள் என்பதை நீங்கள் அறியவும். அவள் மனிதனுடைய ஜீவாத்மாவாக மாத்திரமல்லாமல் மற்றுமுள்ள எல்லாத் தத்துவங்களாகவும் பிரிந்து தோற்றுகிறாள்.

"ஸமாதியில் அடையப்படுவதினாலேயும், ஸமாதியினால் மாத்திரம் அறியப்படும் பரமாத்மா தன்னுடைய நிர்க்குண நிலையான என்மாதாவினால் தெரிவிக்கப்பட்டிருப்பதினாலேயும், நிர்க்குணமானபரமாத்மாவே பிரம்மம் என்ற அத்துவைதிகளின் கொள்கையை முற்றிலும் அங்கீகரிக்க வேண்டியதுதான். ஆனால் தன் சொந்த அபிப்பிராயமே சரியென்றும் நியாயமென்றும், ஈஸ்வர நம்பிக்கை பிசகென்றும், ஈசுவரன் பொய்யென்றும், ஈஸ்வரனுக்கு முக்திகொடுக்கும் சக்தி யில்லையென்றும் ஒருவனும் சொல்லக்கூடாது.

"தன் விவேகத்தை மாத்திரம் பிரமாணமாக வைத்திருக்கும் அத்வைத வாதியானவன், 'பிரிக்கப்படாத பரமாத்மா, ஜீவாத்மாவாகப் பிரிந்து தோற்றும் பிரமை எவ்வண்ணம் ஏற்பட்டதோ தெரியாது' என்கிறான்.

அருள்வாக்கானது இதற்கு முடிவான பதில் அளிக்கிறது. என்தாயானவள் (பிரம்மத்தின் சகுணநிலை) 'வேதாந்தத்தில் சொல்லியிருக்கும் பிரம்மமாகிய நான் தான் ஆத்மா, ஜீவன் என்கிற வித்தியாசங்களை உண்டாக்கினேன்' என்கிறாள். நீ எதுவரைக்கும் 'எனக்குத் தெரியும்; எனக்குத் தெரியாது' என்று சொல்லுகிறாயோ அதுவரைக்கும் ஜீவாத்மாவாக நீ உன்னைப் பாவிக்கிறாய். அவ்வாறு ஜீவனாயிருக்கும்போது இவ்வித்தியாசங்கள் உண்மையென்று கொள்ளவேண்டுமே தவிர மித்தை (பொய்) என்று கொள்ளமுடியாது.

"மேலும், என்தாய், 'இவ்வகங்காரத்தையெல்லாம் எப்பொழுது நான் நசிக்கச்செய்கிறேனோ அப்பொழுதுதான் ஒருவன் பரமாத்மாவை (நிர்க்குண நிலையை) சமாதியிலறிகிறான்' என்கிறாள். அவ்விதம் சமாதியடைந்தபிறகு சத்தியமோ மித்தையோ, தெரிந்ததோ தெரியாததோ, இவற்றைப்பற்றிய விசாரணையே கிடையாது. எல்லாம் மௌனந்தான். இதுதான் பிரம்ம ஞானம்."

## பிரிவு. 4

## அநுபவ ஞானம்: புதுத்தத்துவம்

ஸ்ரீராமகிருஷ்ணர்:—முற்கூறிய ஞானம் உண்டாகிறவரையில் 'நான்' என்பது இருந்து கொண்டிருக்கிறது. ஜகதீசுவரியும் (சகுணப்பிரம்மம்) தன் குழந்தைகளுக்குப் பல ரூபங்களாகவும், ஸ்ரீ கிருஷ்ணன், சைதன்யதேவர் முதலான திவ்விய அவதாரங்களாகவும் தன்னைக் காண்பித்து, மஹாபூதங்களாகவும், ஜீவனாகவும், ஜகத்தாகவும் தோற்றிக்கொண்டிருக்கிறாள். ஆம்; அவளுடைய சக்தியினால்தான், சிருஷ்டியிலுட்பட்ட ஒருவஸ்துவாகிலும் தன்னுடைய 'நான்' என்ற அகங்காரத்தை விலக்க முடியாமல் உலகத்திற்குச் சம்பந்தப்பட்டதா யிருக்கின்றது.

"இரண்டாவது, என் லோகமாதாவே பக்தனுக்குப் பக்தியை ஊட்டி, அவனுடைய லௌகிகமான அவித்யா அஹங்காரத்தை வித்தியா அஹங்காரமாக மாற்றி, அதை ஒரு கோடுபோல மிக மெலிந்ததாகச் செய்கிறாள். கடைசியாக, அவளுடைய சர்வசக்தியைப் பார்! அவளுடைய கிருபையால், மீதியாயிருக்கும் அச்சிறிதளவு அகங்காரத்தையும் விலக்கச்செய்து, ஒருவனை பிரம்மஞானம் அடையும்படி செய்யக்கூடும். அஃதெவ்வா றெனில், அவளுடைய கருணையால் ஜீவாத்மாவானது பரமாத்மாவாகிய பெருங்கடலில் மூழ்கி ஒன்றாகக் கலந்துவிடுகிறது.

"அஹங்காரத்தை நீ உதறித் தள்ளிவிட முடியாது. சமாதியில் பிரம்மஞானம் அடைந்தவர்கள்

கூட அவளுடைய ஆக்ஞையினால் ஈசுவரானுபவம் பெறுவதற்குப் போதுமான அளவு (பரிசுத்த) அஹங்காரத்தோடு மறுபடியும் உலகத்திற்குத் திரும்பிவருகிறார்கள். சப்தஸ்வரங்களில் கடைசிஸ்வரமாகிய நி என்ற மேல் ஸ்தாயியிலேயே எப்பொழுதும் பாடுவது மிகக் கடினமல்லவா?

"ஜீவ புத்தி உனக்கு இருக்கும்வரைக்கும், ஈசுவரன், தனக்கிஷ்டமிருந்தால், ரூபத்தோடுகூடியவராய்த் தரிசனம் கொடுப்பார். நீ உன்னை ஒரு ஜீவனாகப் பாவித்துக்கொள்ளுகிறவரையில், ஈசுவரனை ஓர் ஸ்வரூபியாகவே மனதில் கருதமுடியும். அரூபியாகக் கருதுதல் முடியாது. இந்த அகங்காரத்தின் சுபாவம் இத்தகையதாம்.

"அத்வைதியின் முக்கிய நோக்கம், ஜீவாத்மாவைப் பரமாத்மாவில் கலக்கச் செய்வதாம்.

"எல்லோரும் இவ்வண்ணம் செய்ய என் ஜகன் மாதா அபிப்பிராயப்படவில்லை. பெரும்பான்மையான ஜனங்கள் இந்த ஜன்மத்திலாவது இனி அடுத்துவரும் ஜன்மங்களிலாவது, அகங்காரத்தை முற்றும் விலக்கி விடமுடியாது.

"ஆகையினால் அவர்கள் (சாதாரண ஜனங்கள்), சமாதி தங்களுக்குக் கிட்டாதிருக்கும் வரையிலும், ஈசுவரனை ரூபத்தோடுதான் தியானம்செய்யவும் அறியவும் முடியும். ஏனெனில், 'அரூபமாகிய பரப்பிரம்மம் மனிதனுக்கு, அவனது உள்ளும் புறம்பும் ரூபமாகத் தோற்றுகிறது; அதாவது நிர்க்குணப் பிரம்மமானது சகுணப் பிரம்மமாகத் தோற்றுகிறது' என்று முனிவர்கள் வாக்கும், சாஸ்திரங்களும், அறிந்தோரனுபவ

மும் நமக்கு ஒரேவிதமாக வற்புறுத்துகின்றன. இச் சகுணத்தோற்றங்கள் தேகம், மனம், ஜகம் இவை களைவிட அநேக மடங்கு நிஜமானவை. ஆகையினால் தான் சாதகர்களுக்கு ரூபத்தோடுகூடிய ஈசுவரன் அவசியம் என்று அறிஞன் சொல்லுகிறான்.

"என் ஜகன்மாதா தன் சிருஷ்டிக்கிரமத்தில் என்னுடைய ஜீவாத்மாவாகவும் இந்த ஜகத்தாகவும் தோற்றுவது அவளது இச்சையாக இருந்து வருகிறது.

"சமாதியையடைந்து பின் இந்திரியகோசரத்திற் குட்பட்ட நிலைக்கு மறுபடியும் இறங்கிவரும் ஞானிக்கு மாத்திரம் திவ்விய சக்ஷுவை வகிப்பதற்கு வேண்டிய மட்டும் (ஒரு கோடுபோல்) மெலிந்த அகங்காரம் தங்கி நிற்கின்றது. இத்திவ்விய சக்ஷுவினால் அவனுக்குத் தன்னையும் ஜகத்தையும் என் ஜகன்மாதாவின் பலவித ரூபங்களாகப் பார்க்கமுடிகிறது.

"சிருஷ்டிக் கிரமத்தில் வெளியுலகம் உள்ளுலகம் ஆகிய யாவும் அடங்கிய இருபத்துநான்கு தத்துவங்களாகத் தோற்றுவிக்கும் என் ஜகன்மாதாவின் இத் திவ்விய தரிசனம், எல்லோருக்கும் பார்த்தனுபவிக்கக் கிடைக்காது. எவன் நிர்விகல்ப சமாதியில் நிர்க் குணப் பிரம்மத்தையும், சவிகல்ப சமாதியில் சகுணப் பிரம்மத்தையும் பார்க்கச் சாத்தியமுள்ளவனாயிருக் கிறானோ அவனொருவன்தான் அந்த அற்புதக்காக்ஷியைக் காணப்பெற்றவனாவான்.

"இவ்விதம் நிர்விகல்ப சமாதியை யடைந்து பரப் பிரம்மத்தோடு ஐக்கியமுற்று பிரம்மானுபவத்தில்

அழுந்தினவனுங்கூட ஓர் அப்பிரத்தியக்ஷ சக்தியினால் கீழ்ப்படியாகிய இந்திரிய கோசரத்திற்கு இழுக்கப் படுகிறான்.

"இவ்வப்பிரத்தியக்ஷ சக்தி யாது? ஜீவபோதத்தை வைக்கவும் அதை சமாதியில் அழிக்கவும் வல்லமையுள்ள சர்வ சக்தியான என் ஜகன்மாதாவே இது.

"வேதாந்தியோ இதைக் 'கர்மம்' என்கிறான். அதாவது இந்தஜன்மத்திலோ அல்லது முன்ஜன்மங்களிலோ செய்த கர்மத்தினால் சமாதியிலிருந்து கீழ்நிலைமைக்கு வரும்படி ஆகிறது என்கிறான்.

"ஒருவனுக்கு 'நான்' என்னும் அஹங்காரம் இருக்கிறவரைக்கும் கர்த்தா கர்மம் என்பவை இருக்கின்றன. அப்படியே காரணமும் பலனும் இருக்கின்றன. தவிர, ஜீவகோடிகளும், இருபத்து நாலு தத்துவங்களை யுடைய ஜகத்தும், மூன்று காலங்களும், முன்ஜென்மங்களும், வரும் ஜன்மங்களும், இன்னும் ஜகத்திலிருக்கும்படியான பலவித வேறுபாடான விஷயங்களும் அவனுக்கு நிஜமாக இருக்கின்றன.

"எனவே, இவ்வேறுபாடுகள் நிஜமாக இருக்குமானால் இவற்றிற்குக் காரணமான என்ஜகன்மாதாவாகிய சகுணப்பிரம்மமும் நிஜமாக விருக்கிறது.

"அன்னையின் அருள்வாக்கு இச்சித்தாந்தத்தை உறுதிப் படுத்துகின்றது. என்னுடைய ஜகன்மாதா சொல்வதாவது: 'இவ்வேறுபாடுகளை உண்டாக்கியது நானே. நற்கருமங்கள் தீய கருமங்கள் யாவும் எனக்கு அடங்கியவை. கர்ம நியமம் இருப்பது உண்மையே; ஆனால் சட்டத்தைச் செய்பவள் நானே. விதிகள்

உண்டாதலும் அழிதலும் என்னாலேயே. நல்லதோ கெட்டதோ எல்லாக்கர்மங்களும் என்னுடைய ஆக்ஞைக் குட்பட்டவைகளே. ஆகையினால், பக்தியினாலோ ஞானத் தாலோ நற்கர்மத்தினாலோ, எவ்விதமாகிலும் என்னை நீங் கள் அடையுங்கள். நான் உங்களை இந்த ஜகத்தாகிற கர்ம சாகரத்தைக் கடக்கச் செய்கிறேன். வேண்டுமானால் பிரம்ம ஞானத்தையும் அளிக்கிறேன். சமாதி நிலையை யடைந்தும், 'நான்' என்கிற அகங்காரமும், 'தேகம்' என்கிற அறிவும், கர்மமும் இருக்குமாகில், அந்த அஹங் காரமும் தேகமும் அப்படிப்பட்ட கர்மமும் என் ஆக்ஞை யினால் என் நிமித்தமாக இருக்கின்றன என்று அறிய வும்' என்று என்னுடைய ஜகன்மாதா சொல்லுகிறாள்.

"இவைகளை யெல்லாம் என் ஜகன்மாதா அவ ளுடைய குழந்தைகளுக்கும் அடியார்களுக்கும் தெரி யப்படுத்தி யிருக்கிறாள்.

"பிரம்ம ஞானத்தையே தன் நோக்கமாகக் கொண்டவனுங்கூட முழுமனதுடனும் ஊக்கத்துடனும் அவளைத் தியானம் செய்து, அவள் கருணையையே ஆதாரமாக நம்பினால், அதை நிஜமாக அடையலாம்.

"இவ்விதமாக பக்தன் ஞான மடையவேண்டு மென்னும் விருப்ப முடையவனா யிருந்தால், என் தாயையோ, அல்லது, அவளுடைய திவ்விய அவதார ரூபங்களில் ஏதாவது ஒன்றையோ பக்திநிறைந்த மனதோடு நாடியடைந்து, அவளுடைய ஆக்ஞையால் சமாதியில் தன் அகங்காரம் முழுமையும் இழக்கிறான்.

"என் தாயாகிய சகுணப் பிரம்மந்தான் அறி வான், அறிபடுபொருள் என்ற பேதத்தை உண்டுபண்

ணியவள். சமாதியில் அஹங்காரத்தை அழிக்கவல்ல வளும் அழிக்கிறவளும் அவள் ஒருவளே. பிரம்ம ஞானத்தைக் கொடுப்பவளும் அவளே. இவ்வாறெல் லாம் செய்பவள் அவளே என்பதை அன்னையின் அருள் வாக்கால் நாம் தெரிந்து கொள்ளுகிறோம்.

"விசாரணையினிடத்து உள்ளதைப்போல அன்னை யின் அருள்வாக்கில் அவ்வளவு விசுவாசம் இல்லாத தத்துவ ஞானியானவன் சகுணப் பிரம்மமானது ஜீவ னுக்கு முக்தியைத் தராது, அதாவது பிரம்மஞானத் தைக் கொடுக்கமுடியாது என்று சொல்லுகிறான். நான், நீ என்கிற வேற்றறிவோடுகூடிய கீழ் நிலைமையிலிருக் கும் ஜகத்தி லிருந்துகொண்டே 'என்னுடைய உதவி யினலேயே நான் பிரம்மஞான மடையமுடியும்' என் கிறான். ஆனால், அதே நிலைமையில் நம்முடைய ஸ்வ பாவ அவசியத்தால், என்னுடைய ஜகன்மாதாவாகிய சகுணப் பிரம்மத்தை ஒப்புக்கொள்ள வேண்டியதா யிருக்கிறது.

"கேவலம் அற்பசக்தியுள்ள ஒரு மனிதனுக்கு, பிரம்மஞானமும், முக்தியும் தானே அடையும்படி யான வல்லமையிருக்குமேயானல் எல்லாம் வல்ல என் ஜகன்மாதாவுக்கு, அந்தப் பிரம்மஞானமும், முக்தி யும் கொடுக்கச் சக்தியில்லாமற் போய்விட்டதோ?

"இவ்வேதாந்திகள் ஒரேவஸ்துவே சகுணமாயும் நிர்க்குணமாயும் இருக்கிற தென்பதை மறந்துவிடுகிறார் கள். நாம் மனிதர்களாயிருக்கும் வரைக்கும், அப்பர மாத்மாவே பிரம்மஞானத்தையும் மற்றவைகளையும்

கொடுக்கக்கூடிய சர்வசக்தியுடைய ஈசுவரனாக வருகிறார் என்று அவர்கள் அறிகிறதில்லை.

"விசாரணையானது, தான்மாத்திரம் பிறவுதவியின்றி ஒரு வழிகாட்டியாகாது. மேலும் நித்தியாநித்திய வஸ்து விவேகத்தில் நம்பிக்கைவைத்திருக்கும் தத்வஞானிக்கு அவ் விவேகசக்தியும் சகுணப்பிரம்மத்தினிடமிருந்தே வருகின்றது. இவ்விதம் பிரம்மஞானத்தைக் கொடுக்கக்கூடியதும் கொடுப்பதும் சகுணக்கடவுளே என்பதை அத்வைத தத்துவஞானி அறியக்கடவான்.

"பிரம்மஞானம் என்பது 'நான்' என்பது முற்றிலும் ஒழிந்து சமாதியில் பிரம்மானுபவமுற்று அதைப் பற்றி உள்ளது இல்லது என்று ஒன்றும் கூறமுடியாமல் மௌனமாய் இருக்கும் நிலையாகும்.

"நீ அத்வைதமென்று எப்பொழுது சொல்லுகிறாயோ, அப்பொழுது துவைதம் ஒன்று உண்டென்று ஏற்படுகிறது. ஏனெனில் ஒன்று என்று சொன்னால், இரண்டென்பதும் உண்டென்பது நிச்சயம்.

"நிர்க்குணம் என்றுசொல்லும்போதே சகுணமும் உண்டென்று ஒப்புக்கொண்டவனாகிறாய். ஏனெனில் சமாதியில் நிர்க்குணப்பிரம்மம் அடையப்படுகிறவரையில், அதைப்பற்றி உனக்கொன்றும் தெரியாதாகையால், அதுசகுணப்பிரம்மத்தின் பரஸ்பர ஸம்பந்தமான தொன்றாகவே இருக்கும். இல்லாவிடில் நிர்க்குணப்பிரம்மம் என்பதற்கு அர்த்தமில்லை; சில அக்ஷரங்கள்சேர்ந்த வெறும் வார்த்தையாகத்தா னிருக்கும்.

"நித்தியவஸ்து என்று கூறும்பொழுது அநித்தியமாகிய அல்லது லீலா ரூபமாகியதும் ஒன்றுண்டென்று கொண்டவனாகிறாய். அவ்வியக்தம் என்னும் போது வியக்தமும் உண்டென்று ஏற்படுகிறது. உதாரணமாக ஒளியென்று சொன்னால் அதன் பரஸ்பர சம்பந்தமான தான இருளும் உண்டு என்பதை நீ அறிகிறாயல்லவா? சுகம் என்றால் துக்கமும் அதனுடன் சேர்ந்து இருக்கின்றது. அநித்தியமும் லீலா ரூபமும் ஆன உலகம் எவனுடையதோ அவனுக்கே நித்தியத்துவமும் இருக்கிறது; பேதமில்லாத நித்தியத்துவம் எவனுடையதோ அவனுடையது தான் இம்மாறுபாடுகளும்.

"நித்தியமா யிருக்கும் பரம் பொருளை யடைய அநித்தியமா யிருக்கும் இவ்வுலகத்தின் வழியாகத் தான் நீ செல்லவேண்டியவனா யிருக்கிறாய். அப்படி யடைந்து, திரும்ப உலகத்திற்கு வந்தால், முன்போல் அது அநித்தியமாகத் தோன்றாமல், நித்தியவஸ்துவாகிய பரம்பொருளின் தோற்றமாகவே புலப்படும்.

"நீ பிரம்மத்தைப்பற்றிப் பேசும்போது அதனை உள்ளது உள்ளவாறு விவரிக்க இயலாது. ஏனெனில், அவ்விதம் பேசும்போது அதற்கு அன்னியமான உன்னுடைய ஜீவபோதத்தினால் அத்தியாசம் ஏற்படுகின்றது. ஆதலால் அன்னையின் அருள்வாக்கைத் தவிர நமக்கு வேறு ஆதாரமில்லை; ஜகதீசுவரியான என் அன்னை 'சகுணப்பிரம்மம் நான்தான்' என்றும், 'சமாதியில் அடையும் நிர்க்குணப் பிரம்மமும் நான் தான்' என்றும் சொல்லுகிறாள்.

“மோரின் உண்மையை மனத்தில் உத்தேசம் செய்து கொள்ளாமல் வெண்ணெயைக்குறித்து நினைக்கவோ பேசவோ முடியாது. மோரிலிருந்து வெண்ணெய் வருவதனால், வெண்ணெயோடு மோர் சம்பந்தப் பட்டது. வெண்ணெய்க்கும் மோருக்கும் இருக்கும் பரஸ்பர சம்பந்தத்தால் மோரை அறிவது போலவே வெண்ணெயையும் அறியமுடியும்.

“நான் என்பது இருக்கும் வரையில், வெண்ணெய் மோர் இவ்விரண்டையும் ஒப்புக்கொள்ள வேண்டியதே.

“‘நான் ஜீவன்’ என்கிற ஞானம் என் ஜகன்மாதாவினால் உன்னிடம் வைக்கப்பட்டிருக்கிற வரைக்கும், நீ நித்திய மென்று சொல்லும்பொழுது மாறுதலடையும் லீலாவுலகமும், நிர்க்குணப்பிரம்மம் என்னும்பொழுது சகுணப்பிரம்மமும், வஸ்து என்னும்பொழுது அதன் குணங்களும், ஒன்று என்னும்பொழுது அநேகமும் சூசிப்பிக்கப்படும்.

“ஜகதீசுவரியானவள் சமாதியில் உன் அஹங்காரத்தை நசிக்கச்செய்யும் பொழுது, நீ பிரம்மத்தை அடைகிறாய். அது வாக்கிறந்தவிடம். அது தன்னில் தானேயாய் நிற்கும் நிலை. எப்படி உப்புப் பிரதிமை கடலின் ஆழத்தை அளக்கக் கால்வைத்ததும், தன் சொரூபத்தையிழந்து சமுத்திரத்தோடு கலந்ததோ அவ்வாறேதான் இதுவும்.

“மேற்கூறிய விஷயத்தை உபமானவழியாக விளக்குவதும் சாத்தியமன்று. ஆயினும் கூடியமட்டும் ஒருவாறு சமாதியில் உணர்ந்த பிரம்மத்தைக் கறந்த

யாலுக்கும், சகுணப்பிரம்மத்தை வெண்ணெய்க்கும், இருபத்துநாலு தத்துவங்களடங்கிய ஜகத்தை மோருக்கும் ஒப்பிட்டுச்சொல்லலாம்.

"பிரம்மத்தின் சகுணநிலையான என்னுடைய ஜகன்மாதாவானவள், 'வேதாந்தத்தில் சொல்லப்பட்ட (சகுண நிர்க்குணப்) பிரம்மம் நான் தான். பிரம்ம ஞானத்தைக் கொடுக்கும் சக்தி என்னிடத்திலிருக்கிறது. நான், தாழ்ந்த அகங்காரம் பரிசுத்த அகங்காரம் இரண்டையும் நசிக்கச்செய்து, சமாதியில் பிரம்மானுபவத்தை உண்டுபண்ணுகிறேன்' என்று சொல்லுகிறாள்.

"இவ்விதமாக என் அன்னையின் அருளினால் ஞானயோகத்தின் மூலமாக பிரம்மத்தை யடையலாம். ஆயினும் நம்மைப் பலமாகப் பிடித்துக்கொண்டிருக்கும் 'நான் தேகம்' என்னும் தேகபுத்தியை விலக்குவது மிகக் கஷ்டமாயிருப்பதனால், இக் கலியுகத்தில் ஞானமார்க்கத்தின் மூலமாகப் பிரம்மத்தையடைவது மிகத்துர்லபம். வெகு சிலருக்குத்தான் அதுமுடியும்.

"மேலும் பக்தியும் ஞானமும் அளிக்கும்படிக் கடவுளைப் பிரார்த்திப்பதன் மூலமாகவும் நீ பிரம்மத்தை யடையலாம். ஆத்மபரித்யாகம், பகவத் பிரேமை முதலியன பக்தியின் அடையாளங்கள். பிரம்மஞான மடைய நீ விரும்பினால் இவற்றின் மூலமாக முதலில் சகுணப் பிரம்மமாகிய என் அன்னையை அணுகு.

"உங்கள் பிரார்த்தனை மாத்திரம் மனப்பூர்வமாயிருந்து நீங்கள் பொறுமையுடன் இருந்து வந்தால், என்னுடைய ஜகன்மாதா அவசியம் உங்கள் வேண்டு

கோளைக் கேட்பாள் என்று நான் உறுதிகூறுகிறேன். ஏனெனில் இவ்விதமாக அவளே தன் குழந்தைகளுக்கு அறிவித்திருக்கிறாள்.

"அவளுடைய நிர்க்குணநிலையை அடையவேண்டுமானாலும் அவளையே பிரார்த்தியுங்கள். அவள் பராசக்தியானதால், உங்கள் பிரார்த்தனைக்கு இணங்கினால், சமாதியில் அவளுடைய நிர்க்குண நிலையையும் நீங்கள் அடையும்படி செய்வாள். பிரம்மஞான மென்பதும் இதுவேதான்.

"ஆனால், சாதாரணமாக பக்தர்கள் என் ஜகன்மாதாவின், அல்லது அவளுடைய அவதாரங்களான ஸ்ரீ கிருஷ்ணன், சைதன்யதேவர் முதலான அனந்த கல்யாண திவ்விய ரூபங்களின் தரிசனத்திலேயே திருப்தி அடைந்து விடுகிறார்கள். பக்தன் நிர்க்குணப் பிரம்மத்தையடைய அநேகமாக ஆசைப்படுகிறதில்லை. சமாதியில் தன் முழுஅகங்காரமும் நசிக்கக்கூடாதென்கிற கவலையோடிருக்கிறான். தான் ஜீவனாக இருந்துகொண்டு அவள் திவ்வியரூபத்தின் தரிசனத்தினாலுண்டாகும் பிரம்மானந்தத்தை அனுபவிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறான். தான் சர்க்கரை ஆய்விடுவதைப்பார்க்கிலும் சர்க்கரையின் மதுரத்தை அனுபவிக்கவே இச்சைப்படுகிறான். அவ்வித இச்சையோடிருப்பவர்களுக்கு, என் அன்னை பிரீதியோடு கூடினவளாய்த் தன் திவ்வியரூப தரிசனத்தை யளிக்கிறாள்.

"திவ்வியரூப தரிசனத்தை முற்றிலும் அடைந்தவன், வேதாந்தவிஷயங்களில் அனுபவம்தான் முக்கியம் என்று சாதித்தல்வேண்டும். ஆரம்பம் முதற்

கொண்டே, 'சகுண நிர்க்குணக்கடவுளை நான் எல்லா வஸ்துக்களிலும் உள்ளும் புறம்பும் காண்கிறேன். நான் பார்க்கும் புருஷன், ஸ்திரீ, மிருகம், பக்ஷி, மரம், புஷ்பம் எல்லாம் கடவுளே! நான் ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிறேன். நான் சுகதுக்கம் எல்லாவற்றையும் கடந்தவன். ஸோஹம், ஸோஹம்' என்று இவ்வாறு வாயால் சொல்லிக்கொண்டிருப்பது மாத்திரம் போதாது.

"முதலில் அத்தியாவசியமானது சாதனை. இஃதின்றி ஒருவன் பக்தியை அடையமுடியாது. சாதனையில்லாதவனுக்கும் பிரம்ம ஞானத்துக்கும் வெகுதூரம்.

"ஏனெனில் அத்திவ்விய பொக்கிஷங்கள் ஓர் அறையில் பத்திரமாகப் பூட்டிவைக்கப்பட்டிருக்கின்றன. நீ அப்பொக்கிஷங்களை இன்னும் திறக்கவில்லை. வாயினால் மாத்திரம் 'பூட்டைத்திறந்து விட்டேன்; அறைக்குள் நுழைந்து விட்டேன்; நவரத்தினங்களான திவ்வியவஸ்துக்களைக் கைப்பற்றிக்கொண்டேன்' என்று சொன்னால் போதாது.

"அந்தத் திவ்வியரூபத்தைத் தரிசித்த புண்ணியாத்மா ஒரு குழந்தைபோல் சரளமாகவிருக்கிறான். அவனுக்கு உலகமானது புதிதாகத் தோன்றுகிறது. நாமரூபதோஷமற்று உள்ளது உள்ளவாறே பரிசுத்தமாய்க்காணப்படுகிறது. திவ்விய தரிசனத்தைப்பெற்ற அவன் அடிக்கடி பிரேமையினால் பித்துப் பிடித்தவன் போலாகிறான்; தெய்விகமாகிய கடலில் மூழ்கிவிடுகிறான். சுசி அசுசி என்னும்படியான வித்தியாசங்கள் அவனுக்குக் கிடையா. அடிக்கடி மெய்மறந்து, சமாதியிலாழ்ந்து, கேவலம் ஜடம்போல் சலனமற்றவனாகத் தோற்றுவான்."

## பிரிவு. 5

# பக்தியோகம்

ஸ்ரீ ராமகிருஷ்ணர் :—ஸமாதி ஸித்தி யாகிற வரைக்கும்—அதாவது பகவத் தரிசனமடைகிறவரைக்கும்—ஒருவன் பரிசுத்தமாய் இருக்கவேண்டும்; உலக ஆசையை ஒழிக்கவேண்டும். காமினி காஞ்சனங்களை முற்றிலும் விட்டுவிடவேண்டும்.

"பிரம்மஞான மடையத் தடையாக விருக்கும் 'நான்' என்ற அஹங்காரத்தை விலக்குவது மிகக்கடினம்! பிரம்மஞானமடைந்த பிறகும் முக்தியடைந்த ஜீவன் முற்கூறியவாறு என் அன்னையின் ஓர் அப்பிரத்யக்ஷ சக்தியினால் இந்திரிய கோசரத்திற் குட்பட்ட கீழ் நிலைக்கு இழுக்கப்பட்டு, மிகவும் மெலிந்து பரிசுத்தமடைந்த 'நான்' என்ற அஹங்காரத்தோடேயே இருக்கும்படியாக நேரிடுகிறது.

"நீ ஒரு புலி வந்ததாகக் கனவு காண்கிறாய். உன் கை கால்கள் நடுங்குகின்றன. உன் மார்பு படபடவென்று துடிக்கிறது. நீ கண் விழித்தெழுந்ததும் அது நிஜமல்ல; வெறுங் கனவுதானென்று அறிகிறாய். ஆயினும் விழித்துக்கொண்ட பின்னரும் நெஞ்சு துடித்துக் கொண்டேயிருக்கிறது.

"இம்மாதிரி, 'நான்' என்ற அஹங்காரம் நம்மை விட்டு விலகாமற் போனால் செய்வது யாது? ஏன், 'ஈசுவரனுக்கு நான் தொண்டன்' என்ற ஓர் உபாதியாக மாத்திரம் அது இருந்துகொண்டிருக்கட்டும்.

" 'நான்' 'என்னுடையது' என்ற லௌகிக ஜனங்களுடைய அஹங்காரமோ அஞ்ஞானம்; அது பகவானை அடையவொட்டாமல் தடுக்கிறது.

"எல்லாம் பகவானுடைய ஆக்கினையினால் நடக்கின்றன. மனிதன், 'நான்தான் சிருஷ்டி கர்த்தா ; நான் எஜமானன் ; இவைகளெல்லாம் என்னுடையவை' என்று சொல்லுவது நகைப்புக்கிடமாகிறது.

"இரண்டு சந்தர்ப்பங்களில் பகவான் புன்னகை கொள்கிறார் :—ஒருவன் வியாதியினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறான். மரணகாலம் நெருங்கி விட்டது. அத்தருணத்தில் வைத்தியன் அவனருகில் சென்று, அவன் தாயைப் பார்த்து, 'அம்மா, உனக்கு ஒரு கவலையும் வேண்டாம்; உன் மகனை நான் பிழைக்கச் செய்கிறேன்' என்று சொல்லுகிறான்.

"அவள் மகனுடைய மரணம் ஈசுவரனுடைய இச்சைப்பிரகாரம் நிகழ்கிற தென்பதை இவ்வைத்தியன் அறிவதில்லை !

"அப்பொழுது பகவான், 'இவன் மரணத்தை உண்டுபண்ணுவது நான். அப்படியிருக்க, இம்மூட வைத்தியன் தான் இரக்ஷிக்கப் போவதாகச் சொல்லுகிறானே' என்று கூறி நகைக்கிறார்.

"பின்னும், இரண்டு சகோதரர்கள் நிலத்தைப் பங்கிட்டுக் கொள்ளுவதற்காகக் கையில் அளவுகோலை எடுத்துக்கொண்டு, தங்கள் நிலத்தை அளந்து கோடு கிழித்து, 'இதுவரைக்கும், என்னுடையது அந்தப் பக்கம் உன்னுடையது' என்று சொல்லிக் கொள்ளும்

பொழுது, பகவான் நகைத்து, 'இம் மூடர்களைப்பார்! எல்லாப் பூமியும் என்னுடையது என்பதை யறியாமல், இவர்கள் தங்களுடையது என்று சொல்லுகிறார்கள் !' என்கிறார்.

"ஒரு தனிகன் ஒரு தோட்டத்தைத் தன் காரியஸ்தன் வசம் ஒப்புவிக்கிறான். காரியஸ்தன் அத் தோட்டத்தை மிகப் பொறுப்புடன் பார்த்துவருகிறான். தோட்டம் பார்க்க யாராவது பெரிய மனிதர்கள் வந்தால் அவர்களை மரியாதையுடன் உள்ளே அழைத்துச் சென்று எல்லாவற்றையும் சுற்றிக் காட்டுகிறான்.

" 'இதோ எங்கள் கிச்சிலி மரங்கள். இவை எங்கள் கொய்யா முதலான மரங்கள்' என்று அவர்களிடம் கூறுகிறான். அத்தோட்டத்தைச் சேர்ந்த வீட்டிற்குள்ளும் அழைத்துக்கொண்டுபோய், 'இது எங்களுடைய கூடம்; அதோ எங்களுடைய அழகிய சித்திரப்படங்கள் மாட்டப்பட்டிருக்கின்றன' என்கிறான்.

" அப்படியிருந்தும், காரியஸ்தன் எஜமானனுக்கு அதிருப்தியுண்டாகும்படி ஏதாகிலும் செய்தால் அவன் கதி என்னவென்று தெரியுமா? அவன் உடனே அத் தோட்டத்தினின்றும் துரத்தப்பட்டு, தன் கைப்பெட்டியைக்கூட எடுக்க ஸாவகாசமில்லாமல், உடனே அவ்விடத்தைவிட்டு விலகவேண்டியவனா யிருக்கிறான்.

" இதே மனிதன்தான் சற்று முன்பு 'எங்களுடைய இது, எங்களுடைய அது' என்று சொல்லிக் கொண்டிருந்தவன். இந்தக் காரியஸ்தனுடைய 'என்னுடையது,' அல்லது 'எங்களுடையது' என்னும் எண்ணம் அஞ்ஞானத்தினாலுண்டானது.

"புத்தி சக்திக்குறைவானது. நம்பிக்கைக்கு அளவில்லாத சக்தியுண்டு. புத்தி சிறிது தூரம்தான் போக முடியும். அதற்கெட்டாத அனேக விஷயங்களிருக்கின்றன. ஆனால் பக்தியினால் அற்புதங்கள் செய்யலாம். ஆம்; மனிதன் பக்தியைக் கைக்கொண்டு ஸமுத்திரத்தையும் கொஞ்சமேனும் சிரமமில்லாமல் கடக்க முடியும்.

"பகவானுடைய அவதாரமாகிய ஸ்ரீ ராமச்சந்திரன் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் மத்தியிலிருக்கும் கடலைக்கடக்க ஒரு பாலம் கட்ட மிகச் சிரமப்பட்டார். ஆயினும் உலகத்திற்கெல்லாம் பக்தியின் மஹிமையையும், சக்தியையும் எடுத்துக் காண்பிக்கும் பொருட்டு, தம்மிடத்தில் அளவில்லாத பக்தியுடனிருந்த ஹனுமான் அக்கடலைப் பக்தியினாலேயே (பாலமின்றி) தாண்டச் செய்தார்.

"ஒரு காலத்தில் இலங்காதிபதியான விபீஷணனுக்குச் சிநேகிதனான ஒருவன் கடலைக் கடக்க விரும்பினான். அந் நண்பன் விபீஷணனைநாடி உதவி செய்யும்படி வேண்ட, அவனறியாமல் விபீஷணன் ஓர் ஓலையில் ராமா என்னும் திவ்விய நாமத்தை எழுதித் தன் நண்பனிடம் கொடுத்து, 'அப்பா, நீ இதை உன்னுடைய வஸ்திரத்தின் தலைப்பில் முடிந்துப் பத்திரப்படுத்திக்கொள். இதன் உதவியினால் நீ சமுத்திரத்தைக்கடப்பாய். ஆனால் நீ இதை வெளியிலெடுத்துப் பார்க்க முயன்றால், அதே நிமிஷத்தில் ஸமுத்திரத்தில் மூழ்கிவிடுவாய்' என்றான்.

"அம்மனிதன் தன் நண்பன் வார்த்தையில் நம்பிக்கையுடையவனாய்க் கொஞ்சதூரம் சமுத்திரத்தில் கஷ்டமில்லாமல் நடந்து சென்றான். அவன் துரதிர்ஷ்டத்தினாலேவப்பட்டு, என்ன அற்புத வஸ்து தன் வஸ்திரத்தில் கட்டப்பட்டதனால் தான் கடலில் சுலபமாக நடக்க முடிகிறதென்பதை அறியும் ஆவலுடையவனாய் அதை அவிழ்த்துப் பார்க்க, தக்ஷணமே சமுத்திரத்தில் அமிழ்ந்து விட்டான்.

"வாஸ்தவத்தில் பக்திக்கு அபார சக்தியுண்டு. அதன் சக்தியின் முன்பு இயற்கைச் சக்திகள் வழி விட்டு ஓடும். பக்தியிருக்குமேயாகில் ஒரு கஷ்டமுமின்றிக் கடலையும் கடக்கலாம்; மலையையும் தாண்டலாம்; மேலும், பக்தியிருக்குமேயாகில், உலக இச்சை, பாபதோஷம், உலகப்பற்று, அஞ்ஞானம், எல்லாம் தொலைந்துவிடும்."

பகவான் அடியில்வரும் கருத்துக்களடங்கிய பாடலைப் பாடுகிறார்.

## கடவுள் திருநாமம்

"என் தாயே! துர்க்கை, துர்க்கை யென்று உன் திவ்விய நாமத்தை உச்சரித்துக்கொண்டே நான் பிராணனை விடும்படி மாத்திரம் செய்துவிடு. பிறகு, ஏ சங்கரி! உன் எளிய குழந்தையை, முடிவில் இந்த ஸம்ஸார ஸாகரத்தின் மறுகரையில் சேர்க்காமலிருக்க முடியுமா பார்க்கலாம்?

"நான் கோஹத்தி அல்லது பிரம்மஹத்தி செய்திருந்தாலென்! ஸ்திரீஹத்தி செய்திருந்தாலென்! சிசுஹத்தி செய்திருந்தாலென்! குடிகாரனாயிருந்தாலென்! இக்கொடிய மஹாபாவங்களைக் கொஞ்சமேனும் நான் லக்ஷியப்

செய்யவில்லை. இதெல்லாமிருந்தபோதிலும் உன் நாம உச்சாரண மகிமையினுல் உன்னதமான பிரம்மத்தை அடையும்படியான சக்தி என்னிடமிருக்கின்றது.''

''ஆம், ஸாதன விருத்திக்கு நம்பிக்கைதான் முக்கியமானது. மற்றவைகளெல்லாம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் நம்பிக்கை ஒன்றுமட்டிலும் இருக்க வேண்டும். கடவுளிடம் பக்தி சிரத்தையுடன் இருந்தால், நீ மஹாபாபங்கள் எல்லாவற்றினின்றும் விமோசன மடைவாய்.''

## மூலகாரணமான நம்பிக்கை

''என் ஜகன்மாதாவை நினைக்க நினைக்க அநேக எண்ணங்கள் என் மனத்தில் உதிக்கின்றன. ஈசுவரனிடம் எவ்வளவு பிரேமையிருக்கின்றதோ, அவ்வளவு அருள் கிடைக்கும். ஆனுல் எல்லாவற்றிற்கும் மூலகாரணமானது பூர்ணமான நம்பிக்கையே.

''என் ஜகன்மாதாவாகிய பராசக்தியின் திவ்விய திருவடி அமிருத ஸாகரமாயிருக்கின்றது. உன்மனம், அவ்வமிருத ஸாகரத்தையடைந்து, தினம் முழுகிக்கொண்டிருந்தால் உனக்குப் பூஜை, ஹோமம், ஜபம், முதலிய வேறு யாதொன்றுமே அவசியமில்லை.

''என் தாயான ஜகதீசுவரியைப் பூஜைசெய்யும் பக்தன், இந்த ஜன்மத்திலேயே மோக்ஷத்தையடைந்து, நித்தியானந்த ஸ்வரூபனுகிறுன்.''

''ஆம், முக்கியமானவை பக்தியும் சிரத்தையுமே. இக்கலியுகத்தில், பகவானுடைய அனுக்கிரஹமில்லாமல் அற்ப புத்தியைக்கொண்டு செய்யும் நித்தியாநித்திய வஸ்து விசாரணையினுலேயே எனது ஜகன்

மாதாவை அடைவது அசாத்தியம். நமது ஸ்தோத்திரக் கவியாகிய ராமப்பிரஸாத் 'ஓ என் மனமே' என்று ஆரம்பிக்கும் பாட்டில் இதை எடுத்துச் சொல்லியிருக்கிறார்.''

பகவான் பாடுகிறார்:

## ஸகுண நிர்க்குணப் பிரம்மத்தின் ஒற்றுமை

"ஓ, என் மனமே! எவ்விதமாக நீ பகவானை யடையப் போகிறாய்? இருட்டறையில் பித்தனைப்போல் நீ தடுமாறுகிறாயே!

"நீ இவ்வீட்டிலிருக்கும் இச்சையென்னும் காவலனை அடக்க உன்னாலியன்றமட்டும் முயற்சி செய். இவ் வீட்டில் அனேக அறைகளிருக்கின்றன. அவ்வறைகளில் திருடனால் உட்செல்லமுடியாத ஓர் கள்ளறையில், திவ்விய பொக்கிஷம் மறைத்து வைக்கப்பட்டிருக்கின்றது.

"இச்சையாகிய காவலனை உன் கைக்குள்ளாக்கிக் கொண்டால், நீ திருடன்போல் மெல்ல மெல்ல அவ்வறையை அடைந்து, அப்பொக்கிஷத்தை உனது சொந்தமாக்கிக் கொள்ளலாம். ஆனால் நீ இச்சையை அடக்குமுன் பொழுது விடிந்துவிட்டால், அறையிலிருக்கும் பொக்கிஷம் உன் கைக்கு எட்டாது.

"பரமாத்மாவோடு கலக்கவும், பிரேமையை அடையவும் யோகியானவன் அநேக வருஷங்கள் தியானம் செய்கிறான். யோகியின் ஹிருதயத்தில் அப் பிரேமை உதித்தவுடனேயே, இரும்பைக் காந்தம் இழுப்பதுபோல் பிரேமையினால் பரம்பொருள் இழுக்கப்படுகிறது.

"வேதங்களிலும், தந்திரங்களிலும், ஆறுசாஸ்திரங்களிலும் காண முடியாதவளாய், பக்தியென்னும் இனிய

பாகில் பிரியமுள்ள தேவி நித்தியானந்த பரிதையாய் இந் நகரில் கொலுவிருக்கிருள்.

"நான் அடைய முயற்சி செய்யும் என் ஜகன்மாதாவின் நிஜநாமதேயத்தைச் சொல்லட்டுமோ ?* அது கருணையில்லாத ஜனங்களின்முன், சந்தைக்கூட்டத்தின் மத்தியில் நைவேத்தியப்பாத்திரத்தை உடைத்தாற்போலாகாதா ? ஏ மனதே ! நான்கொடுத்த சூசனையிலிருந்து அந்த மஹாஸ்வரூபி யாரென்று ஊகித்துப் பார் !"

அதிக கவனத்துடன் கேட்கப்பட்டு வந்த இப் பாடல் முடிந்ததும், எங்கும் நிச்சப்தமாயிருந்தது. எல்லோர் மனமும் உருகின. திவ்விய மாதாவின் பாதகமலங்களைத் தியானம் செய்தவராய்ப் பகவான் அசைவற்றிருந்தார்.

* வேதாந்தத்தில் கூறப்படும் சகுண - நிர்க்குணப் பிரம்மம்.

## பிரிவு. 6

## தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்புதல்

ஒரு சிநேகிதர் வித்தியாஸாகரரிடம் 'சாத்தர்' என்பதின் அர்த்தமென்னவென்று கேட்டார்.

வித்தியாஸாகரர் (சிரித்துக்கொண்டு):—சாத்தர், அதாவது, சத்தார அல்லது உத்தான்; ஒரு வீட்டின் முற்றம் அல்லது சந்தை கூடுமிடம்.

பகவான்(வித்தியாஸாகரரிடம்):—ஆம், அப்படித்தான். நீர் பண்டிதரன்றோ! உமக்குத்தான் தெரிந்திருக்கவேண்டுமே. (சிரித்துக்கொண்டு) ஸரி, ஈசுவரனைப்பற்றி உங்கள் அபிப்பிராயமென்ன?

வித்தியாஸாகரர் (அங்கிருப்பவர்களைச் சுற்றிலும் பார்த்து):—ஸ்வாமி, என்னை மன்னிக்கவேண்டும். நான் வேறோர் சமயம் தனியாய்த் தங்களிடம் பேசுகிறேன். (சிரிப்பு)

பகவான் (சிரித்துக்கொண்டு):—ஸரி, எல்லாம் உங்களுக்குத் தெரியும்; ஆனால் இப்பொழுது பேச இஷ்டமில்லை போலிருக்கிறது. ஸமுத்திர ராஜனாகிய வருணன் கணக்கற்ற இரத்தினங்களுக்கு எஜமானன்; ஆனால் அவனுக்குத் தம்மிடமிருப்பன ஒவ்வொன்றையும் கணக்கு வைத்துக்கொள்வது அசாத்தியமல்லவா? (யாவரும் சிரித்தல்)

"சாதாரணமாய் ஏராளமான பணத்தையுடைய ஒரு பாபு (கனவான்) தன் வேலைக்காரர்கள் பெயர்

கூடத் தெரியாமலிருக்கிறான். ஏனென்றால், அந்த பாபு சாதாரண மனிதர்களோடு பழகுவதோ பேசுவதோ தன் அந்தஸ்துக்குக் குறைவென்று நினைக்கிறான்! (யாவரும் சிரித்தல்)

பகவான் (வித்தியாஸாகரரிடம்):—நீங்கள் ஒரு தரம் தக்ஷிணேசுவர தோட்டத்திற்கு வரக்கூடாதா? அந்த இடம் மிக்க வசீகரமாயும், அதி ரமணீயமாயும் இருக்கின்றது

வித்தியாஸாகரர்:—அவசியம் வருகிறேன். தாங்கள் இவ்வளவு தூரம் பிரியத்துடன் இவ்விடம்வந்திருக்கும் பொழுது, நான் தங்களைப்பார்க்க அவ்விடம் வர வேண்டியது என்னுடைய கடமையல்லவா?

பகவான் (சிரித்துக்கொண்டு):—என்னைப் பார்ப்பதற்காகவா! வெட்கம் வெட்கம்.

வித்தியாஸாகரர்:—ஸ்வாமி, தங்களிடத்திலிருந்தோ இச்சொற்கள்? தாங்கள் இப்படிச் சொல்லுவதின் கருத்தென்ன?

பகவான் (பரிகாசமாக):—ஐயா நான் சொல்லுவதென்னவெனில் நாங்கள் மெல்லியனவாயும் எங்கும் செல்லக்கூடியனவாயும் இருக்கிற சிறிய மீன்படகுகள்; நீரோ பெரிய வியாபாரக்கப்பல். நதியில் வெகுதூரம் போனால் மணலில் மோதினாலும் மோதும். (யாவரும் சிரிக்கிறார்கள்.) ஆனால், காலத்தால்—இச்சமயம்—கொஞ்சம் மாறுதல் ஏற்படுகிறது; இல்லையா? (யாவரும் சிரித்தல்)

வித்தியாஸாகரர் (சிரித்துக்கொண்டு):—ஓ! இப்பொழுது மழைகால மாரம்பித்தாய்விட்டதோ ?

*　*　*　*

இரவு மணி எட்டு ஆய்விட்டது; பகவானை தக்ஷிணேசுவர ஆலயத்துக்கு அழைத்துச்செல்ல வண்டி தயாராய் வந்திருக்கிறது. பகவான், சற்று மெய்மறந்திருந்தார். அவர் இப்பொழுது ஜகன்மாதாவைத் தியானம் செய்து கொண்டிருந்தார் போல விருந்தது. தமக்கு விருந்தளித்தவருக்கு அனுக்கிரஹம் செய்யும்படி பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்போலும்.

பகவான் புறப்பட எழுந்திருந்தார்; வித்தியாஸாகரர், கையில் மெழுகுவர்த்திவிளக் கெடுத்துக்கொண்டு மாடியிலிருந்து வழிகாட்டி, பகவானையும் அவர் சிஷ்யர்கள் முதலானவர்களையும் வண்டிக்கருகில் அழைத்து வந்தார். அவர்கள் அப்படி வரும்பொழுது, தாங்கள் எதிர்பாராவண்ணம் நாற்பது வயதிற்குட்பட்ட ஓர் மனிதன் சிரித்த முகமும், அகன்ற கண்களும், வெள்ளை வஸ்திரமும், பஞ்சாபித் தலைக்குட்டையும், கூப்பிய கைகளும் உடையவனாய், வாசலுக்கெதிரே நிற்கக்கண்டார்கள். அம்மனிதன் பகவானைப் பார்த்த தக்ஷணமே தன் பெரிய தலைக்குட்டை நிலத்தில் படும்படியாக ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான்.

பகவான்:—யார், பலராமனா? ஏது இங்கே வந்தாய் இப்பொழுது ?

பலராமன் (புன்சிரிப்புடன்) :—ஸ்வாமி, கொஞ்ச நேரமாகத் தங்கள் தரிசனத்திற்குக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

பகவான்:—நல்லது, நீயேன் உள்ளே வரவில்லை ?

பலராம் (புன்சிரிப்புடன்) :— நேரம்சென்று வந்தேனாதலால், உள்ளே வருவதைவிட இங்கே இருப்பது நல்லதென்று நினைத்தேன்.

*

பகவான் தம் சிஷ்யர்களோடு வண்டியிலேறினார்.

வித்தியாஸாகரர் (ம—வைப்பார்த்து) :— நான் வண்டி வாடகை கொடுக்கட்டுமா ?

ம—:—ஐயா, வேண்டாம்; அவசியமில்லை. முன்னமே ஒரு சிநேகிதரால் வண்டி வாடகை கொடுக்கப்பட்டுவிட்டது.

பண்டிதர் கைகூப்பித் தலைகுனிந்து பகவானை நமஸ்கரித்தார். வண்டியின் அருகிலிருந்தவர்களெல்லோரும் அவ்வாறே செய்தார்கள். வண்டிக்காரன் குதிரைகளையோட்ட, வண்டி வடக்குத்திசை நோக்கி வேகமாகச் சென்றது.

கையில் மெழுகுவர்த்தி விளக்குப் பிடித்துக் கொண்டிருந்த வித்தியாஸாகரரும் அங்கிருந்த மற்றவர்களும் வண்டிசென்ற திசையை நோக்கியவண்ணம் கொஞ்சநேரம் நின்று, ' இவ்வளவு பக்தியும், இனிமையும், ஆனந்தமும், ஞானமும் நிறைந்து தெய்வப்பித்துப் பிடித்து, சிறு குழந்தைபோலிருக்கும் இம்மஹாபுருஷர் யாராயிருக்கக்கூடும்' என்று ஆச்சரியத்துடன் சிந்தித்துக் கொண்டிருந்தார்கள்.

'உலக வியவகாரத்திலாழ்ந்து மெலிந்த ஜனங்களை உயிர்ப்பிக்க ஈசுவரன் அனுப்பின மின்னலோ இவர்! அல்லது, மனிதர் ஹ்ருதயத்தின் தாபத்தைத் தணிக்க வந்த ஈசுவர கருணை மழையின் ரூபமோ! அலுத்துப் போன மனிதர்களுக்கு, 'உன் ஜன்மத்தை மாற்றி என்னை நாடு' என்று கடவுள் உகந்தளித்த மொழியோ! தற்கால நாகரிகமென்ற வியாதியைத் தீர்க்கவந்த வேற்றுலகத்து வைத்தியனோ! அல்லது, இப்பிரபஞ்சத்தின் மறைபொருளை மனிதர்களுக்கு எடுத்துக்காட்டவந்த புருஷ சிரேஷ்டரோ இவர்!' என்று பலவாறு எண்ணி வியந்தனர்.

# மூன்றாவது அத்தியாயம்

---

[தக்ஷிணேசுவர ஆலயத்தில் நரேந்திரர் முதலிய சிஷ்யர்களுடன்]

## பிரிவு. 1

## தம்மைப்பற்றிய வரலாறு

இன்று 1882-வது வருஷம், அக்டோபர் (அசுவினி) மாதம் 16-தேதி, திங்கட்கிழமை, சுக்கிலபக்ஷ சதுர்த்தி. அடுத்த வியாழக்கிழமை துர்க்கை பூஜை உத்ஸவம் நடைபெறும். பகவான் இன்று ஆனந்த பரவசமாயிருக்கிறார். ஏனென்றால் நரேந்திரர் (விவேகானந்தர்) அவரைப்பார்க்க ஆலயத்திற்கு வந்திருக்கிறார். நரேந்திரர் இன்று இவ்விடமே ஸ்நானம் செய்துவிட்டுப் பிரஸாதம் உட்கொண்டார்.

சிறிது காலமாக ராக்கால் பகவானோடு இருந்து வருகிறார். ராம்லால், ஹஸ்ரா, ம—, நரேந்திரரோடு வந்த இரண்டு பிரம்ம ஸமாஜச் சிறுவர்கள் எல்லோரும் இவ்விடம் இருக்கிறார்கள்.

சுமார் 12-மணிக்கு பகல் போஜனமானதும், ஸ்ரீ ராமகிருஷ்ணர் எல்லாச் சிஷ்யர்களையும், குறிப்பாக நரேந்திரரை கொஞ்ச நேரம் இளைப்பாறும்படியாகச் சொன்னார். அறையில் இளைப்பாறுவதற்காகக் கீழே படுக்கை விரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பாயின் மேல் மெல்லிய மெத்தைபோட்டு அதன்மேல் ஒரு வெள்ளைத் துப்பட்டியும் விரிக்கப்பட்டு, சில தலையணை

களும் போடப்பட்டிருந்தன. பகவான் அப்படுக்கையின் மேல் நரேந்திரர் அருகில் உட்கார்ந்துகொண்டு, அவரோடும், இதர சிஷ்யர்களோடும் குழந்தைபோல் பேசிக்கொண்டிருக்கிறார். அவருடைய கண்கள் நரேந்திரரைப் பார்த்தவண்ணமாக இருக்க, முகம் புன்சிரிப்பினால் பிரகாசித்துக்கொண்டிருந்தது.

வாழ்க்கையில் நாடவேண்டிய விஷயங்கள் இன்னின்னவை யெனச் சிஷ்யர்களுக்கு, முக்கியமாக, நரேந்திரருக்கு எடுத்துக்காட்டி, எவ்விதம் உயிர்வாழ வேண்டுமென்பதை உபதேசிக்கிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (நரேந்திரரையும் மற்றவர்களையும் பார்த்து):—எனக்கு இவ்வித (ஈச்வர தரிசனத்தினாலுண்டான) மாறுதல் ஏற்பட்ட பொழுது பகவானைப்பற்றிக்கேட்க மிக்க ஆவலாயிருந்தேன். நான், பாகவதம் மஹாபாரதம் முதலானவைகளைப் பாராயணம் செய்வதையும், ஸ்ரீ கிருஷ்ணன், ஸ்ரீ ராமன் முதலான திவ்விய அவதாரங்களின் சரித்திரங்களையும் உபதேசங்களையும் கேட்க மிக்க ஆவல்கொண்டு அவை நடக்குமிடங்களைத் தேடிக்கொண்டிருந்தேன். கிருஷ்ண கிஷோர் அத்தியாத்ம ராமாயணம் படிப்பதைக் கேட்க நான் போவது வழக்கம்.

"கிருஷ்ணகிஷோர் என்ன அற்புத பக்தியுடையவன்! ஒருதரம் பிருந்தாவனத்திற்கு அவன் யாத்திரை சென்றிருந்தான். ஒருநாள் கால்நடையாய்ப் போய்க்கொண்டிருக்கும் பொழுது தாகத்தினால் வருந்தி, ஒரு கிணற்றருகில் ஒரு மனிதன் நின்றுகொண் டிருப்பதைப் பார்த்துத் தனக்குக் கொஞ்சம் ஜலம் எடுத்துக்

கொடுக்கும்படி அவனைக் கேட்டான். அம்மனிதன் தான் மிகவும் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவனென்றும் பிராம்மணருக்கு ஜலம் எடுத்துக்கொடுக்க யோக்கியதை யற்றவனென்றும் சொன்னான். கிருஷ்ணகிஷோர், 'நீ சிவ சிவ வென்று ஈசுவர நாமத்தை உச்சரித்துக் கொண்டு உன்னைப் பரிசுத்தம் செய்துகொள்' என்றான். அவன் அவ்விதமே செய்து ஜலம் எடுத்துக் கொடுக்க, அந்த வைதிகப் பிராம்மணன் அதனைக் குடித்தான். ஆஹா! அவனுடைய பக்தியின் மகிமை எவ்வளவு!

"ஒரு சமயம் ஒரு மஹான் ஆற்றோரம் அரியதா கட்டத்தில் சில நாள் வசித்துவந்தார். நாங்கள் அவரைப் பார்க்கப்போக வெண்ணினோம். ஒருநாள் கோவிலில் ஹலதாரியினிடம், 'கிருஷ்ணகிஷோரும் நானும் அம்மஹானைப் பார்க்கப் போகிறோம்; நீயும் வருகிறாயா?' என்று கேட்டேன். அதற்கு ஹலதாரி 'கேவலம் களிமண் கூட்டுக்குச் சமானமான ஒரு மனிதனது ஸ்தூல சரீரத்தைப் போய்ப் பார்ப்பதனாலென்ன பயன்?' என்று விடையளித்தான்.

"ஹலதாரி ஒரு பண்டிதன் அல்லவா? பகவான் ஒன்றே ஸத் என்றும், மற்றவைகளெல்லாம் அஸத் என்றும் சொல்லும் கீதையையும் மற்ற வேதாந்தக் கிரந்தங்களையும் எப்பொழுதும் அவன் படித்துக்கொண்டிருக்கிறானல்லவா? அதனால் தான் அப்படிச் சொல்கிறான்! இதை நான் கிருஷ்ணகிஷோரிடம் சொன்னேன். இதைக் கேட்ட கிருஷ்ணகிஷோர் மிக வருத்தத்துடன் 'என்ன! ஹலதாரி இப்படிச் சொன்னானா? பகவானுக்காக உலகத்தை எல்லாம் வெறுத்து, அவனையே ஸதா

தியானம் செய்யும் புண்ணிய புருஷனுடைய சரீரத்தை களிமண் கூடாகவா பாவிக்கிறான்? கேவலம் லௌகிகர்களுடைய ஸ்தூல சரீரம் போலல்லாமல், பக்தனுடைய சரீரம் தெய்விகமானது என்பதை அவன் அறியானா?" என்றான். மறுநாள் கிருஷ்ணகிஷோர் காலையில் பூஜைக்காகப் புஷ்பமெடுக்கக் கோவிலுக்கு வந்த பொழுது, ஹலதாரியிடம் பேசக்கூட பிரியமில்லாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டான். ஹலதாரியினுடைய வார்த்தைகள் அவ்வளவு வருத்தத்தை அவனுக்கு உண்டுபண்ணி விட்டன.

"ஒரு சமயம் கிருஷ்ணகிஷோர் என்னைப் பார்த்து 'நீர் ஏன் உமது பூணூலை எடுத்துவிட்டீர்?' என்று கேட்டான். எனக்கு இவ்வித மாறுதல் முதல் முதல் ஏற்பட்டபொழுது, 'அசுவினிப் புயல்' * எப்படி எல்லாவற்றையும் அடித்துக்கொண்டு போயிற்றோ, அவ்வாறே எல்லாம் அடித்துக்கொண்டு போகப்பட்டன. நிலத்தின் பழைய பொழிகளெல்லாம் அடியோடு தொலைந்தன. எனக்கு வெளிப் பிரக்ஞையே இல்லாத போது என்னுடைய பூணூலையும், நான் தரித்திருந்த வஸ்திரத்தையும் கூட கவனிப்பவர் யார்? பகவத் தியானத்திலேயே மூழ்கினவனாய் நான் ஏறக்குறைய முழுவதும் நிர்வாணமாகவே யிருந்தேன்.

"எனவே, பூணூலை இழந்துவிட்டதற்காக கிருஷ்ணகிஷோர் என்னைக் குற்றம் சாட்டியபொழுது, நான் அவனிடம், 'ஒரு தரம் உனக்குக் கடவுள் பித்துப்பிடித்த

* 1864-ம் வருஷத்தில் அடித்த புயற்காற்று.

தானால் அப்பொழுது இஃதெல்லாம் தெளிவாக உனக்கு விளங்கும்' என்று சொன்னேன்.

"எல்லாம் நான் சொன்னதுபோலவே முடிந்தது. அவனுக்கும் கடவுளிடம் பித்துப்பிடித்தது. அவன் தனிமையாக ஒரு அறையில் உட்கார்ந்து கதவை மூடிக்கொண்டு அசைவற்று, 'ஓம்! ஓம்!' என்று உச்சரித்துக்கொண்டேயிருப்பான்.

"அவனுடைய வீட்டார் அவனுக்கு நிஜமாகப் பைத்தியம் பிடித்ததென்றே நினைத்தார்கள். அவர்கள் ஒரு வைத்தியனை வரவழைத்தனர். நடகூர் என்னும் ஊரிலிருந்த ராம் என்னும் வைத்தியர் அங்கு வந்தார். கிருஷ்ணகிஷோர் வைத்தியரைப்பார்த்து, 'ஐயா, தாங்கள் மருந்துகொடுத்து என்வியாதியைப் போக்குங்கள்; ஆனால், பகவத் கருணையால் இப்பொழுது கொஞ்சநாளாக நான் மிகவும் அருமையாகப் பெற்றிருக்கும் ஓங்காரமாகிய வியாதியைப் போக்கிவிடாதீர்கள்' என்றான்.

"மற்றொரு சமயம் நான் அவனைப் பார்த்தபொழுது, அவன் ஆழ்ந்த யோசனையிலிருப்பதைப் பார்த்தேன். காரணமென்னவென்று கேட்டேன். அதற்கு அவன், 'வரி வசூலிப்பவன் இவ்விடம் வந்திருந்தான். நான் வரி கொடுக்கத் தவறினால், அவன் என்னுடைய பித்தளைப் பாத்திரங்கள், முதலானவைகளை ஜப்தி செய்துவிடுவதாகப் பயமுறுத்தினான். இதுதான் என்னை இவ்வளவு யோசனையிலாழ்த்தியது' என்று விடையளித்தான். அதற்கு நான் சிரித்துக்கொண்டு, 'அதைப்பற்றி யொன்றும் நீ கவலைப்படாதே. அவன்

வேலையை அவன் செய்யட்டும். உன் சாமான்களையும், ஆடு மாடுகளையும் அவன் விற்கட்டும்; வேண்டுமானால் உன் சரீரத்தைக் கட்டி நியாயாதிபதியினிடம் கொண்டு போகட்டும். அதைப்பற்றி உனக்கென்ன? உண்மையாக நீ இந்தச் சரீரமல்லவே; ஆகையினால் உண்மையான உன்னை அவனால் கட்ட முடியாது. நீ அடிக்கடி சொல்வதுபோல, நீ ஆகாசமல்லவா?' என்று சொன்னேன். (நரேந்திரனும் மற்றவர்களும் சிரிக்கிறார்கள்)

"ஆம், அவன் தன் நிஜரூபம், நம்மைச் சுற்றிலுமிருக்கும் ரூபமில்லா ஆகாசம்போன்ற பரமாத்மா என்று அடிக்கடி சொல்லுவது வழக்கம். ஸ்ரீ ராமனை ஸர்வ வியாபியாகிய பரமாத்மாவின் அவதாரமென்று கூறும் அத்தியாத்ம ராமாயணத்தை அவன் அடிக்கடி அதிக ஆவலுடன் படிப்பவன். நான் விளையாட்டாக அடிக்கடி 'நீசுத்த ஆகாசம் ஆயிற்றே' என்று சொல்லிப் பரிகசிப்பதுண்டு. அன்றைக்கு நான் அவனிடம், 'வரியானது உன்னைப் பந்தப்படுத்தாது. உன் கொள்கைப்படி நீதான் சுத்த ஆகாசமாயிற்றே. உண்மையாக நீயல்லாத இந்த ஸ்தூல சரீரத்தை அவன் கட்டிக் கொண்டு போகட்டுமே' என்று தேறுதல் சொன்னேன்.

"நான் தெய்வப் பித்துப் பிடித்திருந்த நிலைமையில், மனிதர்களையும், மற்றப்பொருள்களையும் பற்றிப் பேசும்போது, என் மனத்தில் தோன்றியபடியே வெளிப்படையாகப் பேசுவேன். மனிதர்களுடைய அந்தஸ்தை நான் கவனிப்பதில்லை. தனிகர்களென்றாவது அந்தஸ்துடையவர்கள் என்றாவது நான் சிறிதும் பயப்ப

"ஒருநாள் யதீந்திரன் அருகாமை யிலிருக்கும் யதுமல்லிக்காது தோட்டத்திற்கு வந்திருந்தான். நான் யதீந்திரனைப் பார்த்து, 'மனிதனுடைய தர்மம் யாது; பகவானிடம் நம்மனத்தை நிலைக்கச் செய்வதல்லவா?' என்று கேட்டேன். அதற்கு யதீந்திரன், 'நாங்கள் லௌகிகர்கள். லௌகிகர்களுக்கு எப்பொழுதாகிலும் முக்தி கைகூடுமோ? இதற்குச் சாக்ஷியாக யுதிஷ்டிர மகாராஜரே இருக்கிறாரே? அவர் மஹா பரிசுத்தராயிருந்தும், ஒரேவொரு சமயம் அசத்தியம் சொன்னமையால், நரகத்தைப்பார்க்கும்படி நேர்ந்ததே' என்று பதில் சொன்னான். இது எனக்கு மிக்க கோபத்தை உண்டுபண்ணிற்று. அப்பொழுது நான், 'நீ என்ன! வெகு நூதனமாயிருக்கிறாய்! தருமருக்கு நரகத்தைப் பார்க்கும்படியாக நேர்ந்ததைப்பற்றி மாத்திரம் உனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது! ஆனால் அவருக்குச் சத்தியத்தில் இருந்த பிரீதியையும், அவருடைய பகவத் பிரேமையையும், பிழைபொறுக்கும் அவருடைய தன்மையையும், அவருடைய தத்துவஞானத்தையும், அவர் இவ்வுலகப் பொருள்களில் பற்றுதலற்றிருந்த தன்மையையும் பற்றிச் சிறிதும் உனக்கு ஞாபகமில்லை போலிருக்கிறது!' எனச் சுறுக்கென்று மனத்திற் படும்படியாக உரத்திச்சொன்னேன். இவ்விதமாக நான் மேன்மேலும் சொல்லிக்கொண்டு போவதைப் பார்த்து, ஹிருதயன் என் வாயைப் பொத்தினான். உடனே யதீந்திரன், தான் ஏதோ அவசரமான வேலைக்குப் போகவேண்டுமென்று சொல்லிப் போய் விட்டான்.

"மற்றொரு சமயம், நான் காப்டனோடு (நேபாள விஸ்வநாதன்) ராஜா ஸௌரீந்திரனுடைய வீட்டுக்குச் சென்றிருந்தேன். முதலில் அவனைப் பார்த்தபொழுது, அவனிடம், 'அப்பா நான் உன்னை 'ராஜா—கிஜா' என்று கூப்பிட முடியாது; ஏனென்றால் அது பொய்ப் பேச்சு!' என்றேன். (இராஜ்யத்தை ஆளுபவனுக்கே ராஜா என்பது வழக்கம்.) சிறிதுநேரம் அவன் என்னிடம் சம்பாஷித்துக்கொண் டிருந்தான். அப்பொழுது சில ஐரோப்பியரும், வேறு சிலரும் அவனைப் பார்ப்பதற்காக வந்தமையால், எங்கள் சம்பாஷணை அடிக்கடித் தடைப்பட்டது. அநேக விதத்தில் கவலைகளுற்ற மற்ற லௌகிகர்களைப்போலவேதான் இவனும் என்பதை நான் அறிந்துகொண்டேன். நாங்கள் வந்திருக்கிறோமென்ற செய்தியை அவன் தமையனை யதீந்திரனுக்குச் சொல்லியனுப்பினான். அவனுக்கு ஏதோ தொண்டையில் அசௌக்கியமா யிருப்பதாகவும் ஆகையினால் வரமுடியாதென்றும் அவனிடமிருந்து சமாசாரம் வந்தது.

"ஒருநாள் புனிதமான கங்கையின் கரையில் வாரநாகூர் கட்டத்தில் ஒரு விருத்தப் பிராம்மணர் பகவந்நாமத்தை உச்சரித்துக்கொண் டிருப்பதைப் பார்த்தேன். ஆனால், அவர் வேறெதையோ நினைத்துக் கொண்டிருப்பதைக் கண்ட நான், அவர் கருத்தைக் கடவுளிடம் திருப்பும்படி செய்ய முதுகில் இரண்டறை கொடுத்தேன். (யாவரும் சிரித்தல்)

"மற்றொருநாள், ராணி ராஷ்மணி (தக்ஷிணேசுவரம் கோவிலைக் கட்டிவைத்தவள்) கோவிலுக்கு வந்தாள்.

நான் அர்ச்சகனாயிருந்து பூசை செய்துகொண்டிருக்கும் பொழுது, அம்பாள் கோவிலுக்குள் வந்து தேவியின் மீது கீர்த்தனை யொன்று பாடும்படிக் கேட்டாள். நான் அவ்விதமே பாடிக்கொண்டிருந்தேன். ஆனால், அவள் அதைக்கவனியாமல், வேறெதையோ சிந்தித்துக் கொண்டே அர்ச்சனைக்காகப் புஷ்பங்களை எடுத்துவைத் துக்கொண்டிருப்பதை அறிந்து உடனே ஓர் அறை கொடுத்தேன். அந்த அறையானது, அவளைக் கை கட்டி வணக்கத்துடன் அமைதியாகவிருக்கும்படி செய் தது. (இதைக்கேட்டு யாவரும் சிரிக்கின்றனர்.)

"விசனகரமான இச்சங்கதிகளையெல்லாம் நான் ஹலதாரியிடம் சொல்லி, 'ஏன் என்னுடைய வழிகள் இவ்விதம் நூதனமாகவும், பிறருக்கு வருத்தத்தைத் தரக் கூடியனவாகவு மிருக்கின்றன! இதை மாற்ற வழி யில்லையா?' என்று கேட்டேன். ஜகன்மாதாவை உருக் கத்துடன் பிரார்த்தித்தேன். கடைசியாக அவள் கருணையினால் நான் இவ்வழக்கத்தை நீக்கச் சக்தி யுடையவனானேன்.

"நான் மேற்கூறிய நிலைமையிலிருக்கும்பொழுது பகவத் விஷயங்களைத் தவிர மற்றவைகளெல்லாம் என் காதிற்கு நாராசம்போலிருந்தன. உலகவிஷயங்களைப் பற்றி ஜனங்கள் பேசுவதை எப்பொழுதாகிலும் நான் கேட்கநேர்ந்தால், தனிமையாக உட்கார்ந்துகொண்டு அதற்காக அழுவது எனது வழக்கம். ஒருசமயம் மதுர பாபு, புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரைபோகை யில் என்னையும் அழைத்துச்சென்றார். காசியில் ராஜா பாபுவின் வீட்டில் சிலநாள் தங்கியிருந்தோம். ஒரு

தினம் நான் அவ்வீட்டுக் கூடத்திலிருந்தேன்; அப்பொழுது மதுரபாபு ராஜாபாபுவோடும் அவருடைய ஜனங்களோடும் பேசிக்கொண்டிருந்தார். அவர்கள் வெறும் உலகவிஷயங்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். 'இதில் இவ்வளவுலாபம் வந்தது; இதில் இவ்வளவு நஷ்டம் வந்தது' என்று இவ்விதமான விஷயங்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது நான் என் ஜகன்மாதாவிடம் 'ஓ, என் தாயே! நீ என்னை எங்கு அழைத்துவந்தாய்? இப் புண்ணிய ஸ்தலத்தைவிட தக்ஷிணேசுவர ஆலயத்திலேயே நான் சுகமாயிருந்தேனே! இவர்கள் புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை வந்தும், என் தாயே, கேவலம் பெண், பொன், இவைகளைப்பற்றியே பேசுகிறார்களே! இவ்விதமான பேச்சு நான் தக்ஷிணேசுவரம் ஆலயத்தில் இருக்கும்பொழுது கேட்காததால், அவ்விடமே மேன்மையாயிற்றே!' என்று இவ்வாறாகக் கதறினேன்."

கொஞ்சம் பொறுத்து பகவான் நரேந்திரரைச் சற்று சிரமபரிஹாரம் செய்யும்படி சொல்லித் தாமும் அங்கிருந்த கட்டிலின்மீது களைப்பாறப் படுத்துக் கொண்டார்.

## பிரிவு. 2

### பகவந்நாம ஸங்கீர்த்தனம்

சாயங்காலம். நரேந்திரர் பகவத் ஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருக்கிறார். சிஷ்யர்களில் அநேகர் வந்திருக்கின்றனர். ராக்கால், ம—, லாட்டு, நரேந்திரரது பிரம்மஸமாஜ நண்பர் ஒருவர், ஹஸ்ரா முதலிய யாவரும் இருக்கின்றனர். மிருதங்கம் வாசித்துக் கொண்டே நரேந்திரர் பாடுகிறார். பாடலின்கருத்து வருமாறு:—

'ஏ மனமே! நிர்மலமான ஆத்மஸ்வரூபியான பகவானைத்தியானி.

'திவ்விய மங்கள ரூபியாயும், சகல சிருஷ்டிகளிடத்திலும் கருணையுள்ளவனாயும், ஏகஸத்திய ரூபியாயும் இருக்கும் ஈசுவரன், ஹிருதயகமலமாகிய ஆலயத்தில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். அவ்வற்புத அழகை நாம் மேன்மேலும் பார்த்து, அவ்வழகெனும் கடலில் மூழ்குவோம்.

'ஹே ஈசா! என் இருதயத்தில்அனந்த திவ்வியஞானமாக எழுந்தருளு. அப்பொழுது சாந்தமடைந்த மனத்துடன் நான் பேச்சற்று உன்திருவடியில் விழுகிறேன். சந்திரனைக் கண்டதும் சகோரபக்ஷியானது சந்தோஷத்தினால் விளையாடுவதுபோல், நாங்களும் உன் ரூபத்தைப் பார்த்துத் திவ்யானந்த மடையும்படி என் ஹிருதயாகாசத்தில் நித்யானந்த ரூபமாய் உதித்தருளு.

'ஓ மனமே! ஆனந்தத்தினால் நிறைந்து பகவானுடைய திவ்விய நாமத்தை உச்சரி. அப்பொழுது ஆனந்தவெள்ளம் பொங்கிப் பெருகும். அந்த அமிருதத்தை இடைவிடாமல்

பானம் செய்து, மற்றவர்களுக்கும் உன் இஷ்டப்பிரகாரம் கொடு. உன்னைக் கட்டியிருக்கும் பாபமாகிய விலங்குகள், அவன் நாமமாகிய வஜ்ராயுதத்தடியால் சிதறடிக்கப் பட்டுப்போம்.

'வாருங்கள்! நாம் பகவத் ஆனந்தத்தைப்பருகி உன்மத் தர்களாகி நம் மனோ பீஷ்டங்களையெல்லாம் நிறை வேற்றிக்கொள்வோம்.'

நரேந்திரரும் மற்றச் சிஷ்யர்களும், பகவானைச் சுற்றி மிருதங்கத்துக் கிசைய நர்த்தனம் செய்து கொண்டு பின்வரும் அடியை யாவரும் சேர்ந்துப் பாடு கிறார்கள்:—

'ஹே மனமே! பகவத் ப்ரேமையென்னும் அமிருதத் தில் எப்பொழுதும் மூழ்கி யிரு.'

மறுபடியும்:—

'என் ஹிருதயமாகிய ஆலயத்தில் திவ்விய மங்கள ரூபி யாயும், சகல சிருஷ்டிகளின் க்ஷேமத்தையும் கருதுபவ னாயும், ஏகசத்திய ரூபியாயுமிருக்கும் ஈசுவரன்திவ்விய ரூபத் துடன் பிரகாசித்துக்கொண்டிருக்கிறான்.'

கடைசியாக நரேந்திரர் கழுத்தில் தொங்கும் மிரு தங்கத்துடன் அப்படியே பாடுகிறார்:—

'ஆனந்தம் நிறைந்த உன் வாயினால், அமிருதம்போன்ற பகவந்நாமத்தை உச்சரி.'

கீர்த்தனை முடிந்ததும், பகவான், நரேந்திரரைக் கட்டித்தழுவிக்கொண்டு, "குழந்தாய், உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும்! பகவத் ஆனந்தம் ஏற்படட்டும்! உன்னால் எனக்கு இன்றைக்கு ஏற்பட்ட அளவில்லா ஆனந்தத்தை நான் என்னென்று சொல்வேன்!" என் றார்.

பகவான் ஹிருதய கமலத்திலிருந்து, திவ்வியப் பிரேமை இன்றைக்குப் பொங்கிப் பெருகுகின்றது.

இரவு மணி 8-ஆய்விட்டது. பகவான் ஆனந்த வாரியில் மூழ்கினவராய், வடக்குத் தாழ்வாரத்தில் தனிமையாக உலாவிக்கொண்டிருக்கிறார். தாழ்வாரத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு அதி விரைவாக நடந்துகொண்டு, ஜகன்மாதாவோடு பேசுகிறார்.

பித்துப் பிடித்தவர்போல் உரத்த குரலில், "நீ எனக்கு என்ன கெடுதி செய்யக்கூடும்" என்று கூறுகிறார்.

எவனுக்கு ஜகன் மாதாவின் அருள் இருக்கின்றதோ, அவனுக்கு ஒரு தீங்கும் வாராதென்று பகவான் சொல்லுகிறாரோ?

இன்றிரவு சிஷ்யர்களெல்லோரும் தங்கப்போகிறார்கள். நரேந்திரரும் தங்கப்போகிறார். ஆகையால் பகவானது ஆனந்தத்திற்கு அளவில்லை.

போஜனம் தயாராயிற்று. நஹபத்கானவில் அன்னை சாரதா தேவி சாப்பாட்டிற்காக ரொட்டி பருப்பு முதலானவைகளைத் தயார்செய்து வைத்திருக்கிறார்கள்.

இதனாலேற்படும் செலவை பெரும்பாலும் ஸுரேந்திரர் வகித்து வருகிறார். இடையிடையே, சிஷ்யர்கள் இவ்விடம் தங்குகிறார்கள்.

பகவானது அறைக்கு அருகிலிருக்கும் தென்கிழக்குத் தாழ்வாரத்தில் இலை போடப்பட்டிருக்கிறது. பரிமாறிக்கொண் டிருக்கும்பொழுது, நரேந்திரரும், மற்றச் சிஷ்யர்களும், அவ்வறைக்கு முன் நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

நரேந்திரர் (ம—வைப்பார்த்து) :—ஐயா, இக்காலத்துச் சிறுவர்களைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன ?

ம—:—அவ்வளவு சீர்கெட்டுப் போகவில்லை ; ஆனால், அவர்களுக்கு மதவிஷயத்தில் பயிற்சி அவசியமென்று எனக்குத் தோன்றுகிறது.

நரேந்திரர் :—எனக்குத் தெரிந்தவரைக்கும் நம் சிறுவர்கள் வரவரச் சீர்கெட்டுவருகிறார்கள். சிறுவர்கள் கூட்டங்களை மொத்தமாகக் கவனித்தால் உடையில் டம்பமும், சுருட்டுப் பிடித்தலும், வேலையைவிட்டு ஒளிதலும், கெட்ட சகவாசமும் தினந்தோறும் கண்ணிற்படுகின்றன.

ம—:—எங்கள் காலத்தில் நாங்கள் படிக்கும் பொழுது, நான் இம்மாதிரி பார்த்ததேயில்லை.

நரேந்திரர் :—அப்பேர்ப்பட்டவர்களோடு நீங்கள் எப்பொழுதுமே கலக்க நேரிட்டதில்லை என்று நினைக்கிறேன். எனக்கு நன்றாய்த் தெரிந்த சிறுவர்களிடத்தில், கெட்டநடவடிக்கையுள்ள ஜனங்கள் பேசிக்கொண்டிருந்ததை நானே பார்த்திருக்கிறேன். எனக்கு என்ன ஆச்சரியமென்றால், இச்சிறுவர்கள், அவ்வயோக்கியர்களை எவ்விதம் அறிய நேரிடுகிறதென்பதே.

ம—:—என்ன, அப்படியா ?

நரேந்திரர்:—என்னுடைய நண்பர்களிலேயே சிலர் இவ்விதம் தங்கள் நடவடிக்கையைக் கெடுத்துக்கொண்டது எனக்குத் தெரியும். பாடசாலை, கலாசாலை அதிகாரிகளும், சிறுவர்களின் பெற்றோரும் இவற்றைக் கவனித்துவரவேண்டும்.

இவ்விதமாக இவர்கள் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, பகவான் அவ்வறையினின்றும் வெளியே வந்து புன்சிரிப்புடன் அவர்களை நோக்கி, 'நீங்கள் எதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்' என்று வினவினர். நரேந்திரர் புன்னகையுடன் 'நாங்கள் பாடசாலை விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம். இக்காலத்துச் சிறுவர்களின் நடவடிக்கை திருப்திகரமாயில்லை!' என்றார். பகவான் கவலையோடு கூடியவராய் ம—வைப் பார்த்து, "இவ்விஷயங்களைக் குறித்துப் பேசிக்கொண்டிருப்பது ஒருபொழுதும் தகாது. பகவானைப்பற்றியே எப்பொழுதும் பேசவேண்டும். இவர்களைவிட நீ வயதில் பெரியவன். உனக்கு அறிவு அதிகம் இருக்கவேண்டும். மற்றவர்களையும் பகவத் விஷயத்தைத் தவிர வேறெதையும் பற்றிப் பேசாமலிருக்கச் செய்வது உன் கடமை யாயிற்றே" என்றார்.

இதைக்கேட்டதும் ம— சிறிது வெட்கமடைந்தார். நரேந்திரரும், இதர சிஷ்யர்களும், சிறிதுநேரம் மௌனமாயிருந்தார்கள்.

அப்பொழுது நரேந்திரருக்கு 19 அல்லது 20 வயது இருக்கும். ம—வுக்கு 27 அல்லது 28 இருக்கும்.

போஜனம்பண்ண எல்லோரும் உட்காருகிறார்கள். பகவான் மிகவும் சந்தோஷத்துடன் இருக்கிறார். நரேந்திரரும், இதர சிஷ்யர்களும் சாப்பிடுவதைப்பார்த்து அவர் ஆனந்தப்படுகிறார்.

பகவான் இன்றைக்கு அதிக சந்தோஷத்துடன் இருக்கிறார். போஜனம் முடிந்ததும், சிஷ்யர்கள் ஒன்று

சேர்ந்து அறைக்குள் வந்து, தரையில் விரித்திருக்கும் பாயின்மீது உட்கார்ந்து இளைப்பாறுகிறார்கள். அவர்கள் சந்தோஷத்துடன் பகவானோடு சம்பாஷிக்கிறார்கள். அவர்களெல்லோரும் சேர்ந்திருப்பதைப் பார்த்தால், பிரம்மானந்தம் விலைக்கு வாங்கக்கூடிய ஓர் சந்தைபோல் தோன்றிற்று.

பகவான் நரேந்திரரைப்பார்த்து, "'திவ்யஞான மாகிற ஆகாசத்தில் பகவத் பக்தியாகிய பூரண சந்திரன் உதயமாகிறான்' என்றாரம்பிக்கும் பாடலைப்பாடுவாயா?" என்றார்.

நரேந்திரர் மிருதங்கம் வாசித்துக் கொண்டே பாட ஆரம்பித்தார். பாடலின் கருத்து பின்வருமாறு:-

'திவ்ய ஞானமாகிற ஆகாசத்தில் பகவத் ப்ரேமை யென்னும் பூரண சந்திரன் உதயமாகிறான். அன்பின் கடல் கரை கடந்து பொங்குகின்றது! பிரபுவின் ஆனந்தத்தை என்னென்று சொல்வேன்! ஆ, என்ன ஆனந்தமயம்! ஜய தயாமய! ஜய தயாமய! ஜய தயாமய!

'உன்னைச் சுற்றிலும் பக்தர்களாகிய உபகிரகங்கள் பிரகாசிக்கின்றன. நீ அவர்களுக்கு விளையாட்டுத் தோழனும், ஆனந்த மயனும் இருக்கிறாய். ஜய தயாமய!

'மோக்ஷத்தின் கதவு திறந்தது. நவ விதான இளவேனிற் காற்று வீசுகின்றது. அது ஆனந்தமயமான அலைகளாகப்பிரிந்து, பக்தியென்னும் வாசனையை அடித்துக் கொண்டு சென்று, யோகிகளை ஸாயுஜ்ய ஆனந்தத்தால் மயங்கச்செய்கின்றது. ஜய தயாமய! ஜய தயாமய! ஜய தயாமய!

'இப்பிரபஞ்சமாகிய கடலில், நவவிதானமாகிய தாமரைப்பூ மலர்ந்திருக்கின்றது. அதில் ஆனந்தமாகிய லோகமாதா வீற்றிருக்கிறாள் பார்! பக்த வண்டுகள் அதின் அமிர்

தத்தைப் பருகுகின்றன! அவர்கள் பகவத் பிரக்ஞை நிறைந்து விளங்குகிறார்கள்! ஆ! ஈசுவரியின் அருள் நிறைந்த முகத்தைப் பார்! அது உள்ளங்களிப்பிக்கின்றது. உலகத்தை வசப்படுத்துகின்றது! ஸாதுக்கள் கூட்டங் கூட்டமாக, ஆனந்தத்தில் ஆழ்ந்து பாடி ஆடிக் குதித்து, அவள் சரணங்களில் விழுகிறார்கள்.

'ஆ! என்ன உவமையில்லா அழகு! இத்திருக்காட்சியினால் மனதுக்கு என்ன ஸமாதானம்! என்ன ஸுகம்!

'பிரேமதாஸ் (பாட்டை இயற்றியவர்) எல்லார் காலிலும் விழுந்து, 'ஸகோதரர்காள்! பாடுங்கள்!' என்று கேட்டுக் கொள்ளுகிறார். ஜய தயாமய! ஜய தயாமய! ஜய தயாமய!'

இவ்விதமாக, பகவானும் பாடிக்கொண்டு நடனம் செய்கிறார். சிஷ்யர்களும் சேர்ந்து பாடிக்கொண்டே அவரைச் சுற்றிவருகிறார்கள்.

பாடல்முடிந்தது. பகவான் தமதறைக்குப்போகும் வடகிழக்குத் தாழ்வாரத்தில் உலாவிக்கொண்டிருக்கிறார். ஹஸ்ரா இவ்விடத்தில் உட்கார்ந்துகொண்டு, கையில் ஜபமாலையுடன் பகவந்நாமத்தை ஜபித்துக்கொண்டிருந்தார். பகவான், அவர் பக்கத்திலுட்கார்ந்துகொண்டு, ஹஸ்ரா, ம— இவ்விருவர்களோடும் சம்பாஷணை செய்கிறார். பகவான் அவர்களில் ஒருவரைப் பார்த்து, "நீ கனவில் ஏதாகிலும் பகவத் விஷயமான காட்சியைக் காண்பதுண்டா?" என்று கேட்டார்.

சிஷ்யர்:—ஆம், ஸ்வாமி; அன்றையதினங் கூட நான் ஓர் அற்புதமான கனவு கண்டேன். ஜகத் முழுதும் ஜலமயமாகவிருந்தது. பார்த்தவிடமெல்லாம் ஜலத்தைத் தவிர வேறொன்றையும் நான் காணவில்லை! அந்த ஜலமானது ஆதி அந்தமில்லாமலிருந்தது! திடீ

றென்று புயற்காற்றுண்டாயிற்று. கொஞ்சதூரத்தில் கண்ணுக்குத் தெரிந்த சில படகுகள் ஜலத்தில் மூழ்கின. அவற்றில் சிலபடகுகள்தான் தப்பின. அவைகளில் ஒன்று என் தாயாருடையது. நான் சில பிரயாணிகளோடு ஒரு கப்பலில் இருந்தேன். ஒரு பிராம்மணர் பூமியின்மீது நடப்பதுபோலத் தண்ணீரில் நடந்துபோவதைக்கண்டு நாங்கள் மிக்க ஆச்சரியமடைந்தோம். நான் அவரைக்கூவி, 'தாங்கள் எப்படிச் சமுத்திரத்தின்மீது நடக்கிறீர்கள்' என்றுகேட்டேன். அவர் புன்னகையுடன் என்னைப்பார்த்து, 'இவ்விடம் பயப்படுவதற் கொன்றுமில்லை; நான் ஜலத்திற்குள்ளிருக்கும் ஓர் பாலத்தின்மீது நடக்கிறேன்' என்றார். 'பிரபோ, தாங்கள் எங்கு போகிறீர்கள்' என்று நான் கேட்டேன். அதற்கு அவர், 'அப்பா பவானிபூருக்கு (ஜகதம்பிகையின் இருப்பிடமாகிய காளிக்கட்டம்) செல்கிறேன்' என்று பதில்சொன்னார். நான் அப்புண்ணிய புருஷருடன் சேர்ந்துகொள்ள ஆவலாயிருந்ததனால், உரத்த குரலில், 'பிரபோ, சற்றுநில்லுங்கள்; நானும் அவ்விடமே போகவேண்டியிருப்பதால் தங்களோடு வருகிறேன்' என்றேன். இதைக்கேட்டு அவர் சிரித்து, 'நான் அவ்விடத்திற்கு அவசரமாய்ப் போகிறேன். நீ இறங்கிவரக்கொஞ்சம் காலதாமதம் ஆகும். ஆனால் நான் போகும் வழியைக் கவனமாய்ப்பார்த்துக்கொண்டு என்னைப் பின்தொடர்ந்துவா' என்றார்.

பகவான்:—நீ சொல்லும் இந்தக்கனவைக் கேட்கும்பொழுது, என் உடம்பு சிலிர்த்து, மயிர்க்கூச்சலுண்டாகிறது. உனக்கு உபதேசம் செய்யவேண்டிய சமயம் வந்துவிட்டது.

## பிரிவு. 3

---

### ஈசுவரதரிசனமும் சமூகச்சீர்திருத்தமும்

இரவு மணி 11. நரேந்திரரும் மற்றச் சிஷ்யர்களும் நித்திரைசெய்யச் சென்றார்கள். அவர்கள் பகவானது அறையில் கீழேவிரிக்கப்பட்டிருந்த படுக்கையின்மீது படுத்துக்கொண்டார்கள்.

விடியற்காலமாயிற்று. சிஷ்யர்களிற் சிலர் முன்பே எழுந்துவிட்டனர். அவர்கள் தங்கள் படுக்கையின்மீது உட்கார்ந்துகொண்டு பகவத்தியானம் செய்கிறார்கள். இச்சமயமெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ன செய்துகொண்டிருக்கிறார்?

அவர் அமிருதம்போன்ற இனிய குரலில் பகவந்நாமங்களை உச்சரித்துக்கொண்டே யிருக்கிறார். ஐந்து வயதுக் குழந்தையைப்போல் அவர் அவ்வறையில் நிர்வாணமாகச் சுற்றிவந்துகொண்டிருக்கிறார். அவர் அவ்வறையின் சுவரில் தொங்கவிடப்பட்டிருக்கும் அநேக படங்களின் எதிரில்சென்று தம் உச்சந்தலை சுவரில்பட வணங்கி நமஸ்கரிக்கிறார். அவர் கதவைத் திறந்து, கங்காநதியை மிக்க பக்தியோடு வணங்குகிறார். பகவந்நாமத்தை உச்சரித்துக்கொண்டே, "ஆ, என் ஜகன்மாதாவே! பாகவத-பக்த-பகவான் யாவும் நீயே! நீயே சகலத்திலும் தோன்றியிருக்கிறாய். வேதங்கள் புராணங்கள், தந்திரங்கள், பகவத்கீதை, காயத்ரீ முதலியவைகளாகத் தோன்றியுள்ள உன் வார்த்தைம் நீயும் ஒன்றே. தாயே, உன் பக்தர்களும் உன்

தோற்றங்களே. எல்லாவற்றிலும் நீயே அவதரித்திருக்கிறாய்! என் தாயே! நீயே காலதேசாவஸ்தையைக் கடந்த பிரம்மம். நீதான் மஹாசக்தி. பிரகிருதியென்பதும் புருஷனென்பதும் நீயே. ஸகுண நிர்க்குணப் பிரம்மமும் நீயே! விராட்புருஷனும் நீயே! இருபத்து நாலு தத்துவங்களும் நீயே!"

பொழுதுவிடிந்தது. அர்ச்சகர்கள் விக்கிரகங்களுக்குத் தீபாராதனை முதலியவைகள் செய்கிறார்கள். இனிமையான சங்கம், மணி, தாளம் முதலானவைகள் ஆலயத்தில் முழங்குகின்றன. சிஷ்யர்கள் எழுந்துவர, அர்ச்சகர்களும் வேலைக்காரர்களும் முன்பே காலைப் பூஜைக்காகப் புஷ்பம் எடுத்துக்கொண்டிருப்பதை அவர்கள் பார்க்கிறார்கள். நகபத்காவில் வாத்தியக்காரர்கள், காலைவேளைக்குத் தகுந்த ராகம் வாசித்துக்கொண்டிருக்கிறார்கள்.

நரேந்திரரும், மற்றச் சிஷ்யர்களும், கை கால்களைச் சுத்திசெய்துகொண்டு, புன்சிரிப்புடன் பகவானெதிரில் வந்து நிற்கிறார்கள். பகவான் வடகிழக்குத் தாழ்வாரத்தில் தமதறைக்கு அருகில் நின்றுகொண்டிருக்கிறார். அவர் முகம் புன்சிரிப்பினால் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது.

நரேந்திரர்:—பஞ்சவடியில் குருநானக்கின் சிஷ்யர்களான அனேக சந்நியாசிகளை நாங்கள் பார்த்தோம்.

**பகவான்:**—ஆம், எனக்குத்தெரியும். அவர்கள் இவ்விடம் நேற்றுத்தான் வந்தார்கள். (நரேந்திரரிடம்) நீங்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து உட்கார்ந்திருப்பதை நான் பார்க்கவேண்டும்.

சிஷ்யர்களெல்லோரும் ஒருபாயின்மீது உட்கார்ந் தார்கள். பகவான் சந்தோஷத்துடன் அவர்களோடு சம்பாஷிக்கிறார். அப்பொழுது நரேந்திரர், 'ஈசு வரனை அடைவதற்கு வழி என்ன?' என்று கேட்டார்.

பகவான்:—ஈசுவரனை அடைவதற்குப் பிரேமை அல்லது பக்தி அத்தியாவசியம். பகவானிடம் ஒருவன் அன்பு பாராட்டினால், வைராக்கியம், நித்தியாநித்திய வஸ்து விவேகம் இவைகள் எல்லாம் அவனுக்குத் தாமாகவே வரும்.

நரேந்திரர்:—ஸ்வாமி! சாஸ்திரங்களில், ஸ்திரீ களைத்துணையாகக்கொண்டு, அவர்களை தேவி உருவாகப் பாவித்து பக்திசாதனைகளைச் செய்யலாமென்று சொல்லி யிருக்கிறதல்லவா?

பகவான்:—ஸ்திரீகளின் மத்தியில் அப்பியாசம் செய்யவா! ஏன்? அது நல்லதன்று. தந்திர சாஸ்தி ரங்களில், அப்படி ஒருவழி சொல்லி யிருப்பது வாஸ் தவந்தான். ஆயினும், அந்த வழியில் முக்தியடைவது மிகக்கடினம். அனேகமாக அவ்வழியிற் செல்பவன் தவறுவது திண்ணம்.

"சாதகர்கள் சாதாரணமாய் ஸ்திரீகளை இவ்வண் ணம் பாவிப்பதுண்டு (1) ஸ்திரீயைத் தன் தோழியாக வும், தன்னைத் தோழனுகவும் (ஸக்யபாவம்), (2) ஸ்திரீ யை யஜமானியாகவும், தன்னை அவள் வேலைக்காரியாக வும் (தாஸ்ய பாவம்), (3) ஸ்திரீயை மாதாவாகவும், தன்னைக் குழந்தையாகவும் (மாத்ரு பாவம்) பாவிப் பர். நானோ எல்லா ஸ்திரீகளையும் என் தாயா ராகப் பாவிக்கிறேன். யஜமானி, வேலைக்காரியாகப்

பாவிப்பதில் பிசகில்லை. தோழி, தோழனாகப் பாவிப்பதில் பெரும்பான்மையாகத் தவறுதலே உண்டாகும். தன்னைக் குழந்தையாகப் பாவிப்பதுதான் மிகவும் பரிசுத்தமானதும், உத்தமமானதுமாம்.''

குருநானக்கின் சிஷ்யர்களான ஸந்யாஸிகள் பகவானைப் பார்க்க வந்தார்கள். அவர்கள், 'நமோநாராயணா!' என்று பகவானை வணங்கினார்கள். பகவான் பதில் வந்தனமளித்து, அவர்களை உட்காரச் சொன்னார்.

பகவான் சிஷ்யர்களையும், வந்திருக்கும் ஸாதுக்களையும் பார்த்துச் சொல்லுகிறார்: ''கடவுளுக்கு அசாத்தியமென்பது ஒன்றுமில்லை. அவருடைய ஸ்வபாவத்தைப்பற்றி யாராலும் சொல்லமுடியாது. அவரைப் பற்றி எது சொன்னாலும் தகும்.

''ஒரு காலத்தில் இரண்டு யோகிகள் பகவானைத் தரிசிக்கத் தவம் செய்துகொண்டிருந்தார்கள். ஒருதினம் தேவரிஷியான நாரதர் அவர்களது ஆசிரம வழியாகப் போனார். அவர்களிலொருவர் நாரதரைப் பார்த்து, 'தாங்கள் வைகுண்டத்திலிருந்து வருகிறீர்களா? அப்படியாயின், பகவான் என்ன செய்து கொண்டிருக்கிறார்? தயவுசெய்து சொல்லவேண்டும்' என்றார். இதைக் கேட்டதும் நாரதர், 'ஆம், வைகுண்டத்திலிருந்துதான் வருகிறேன். பகவான் ஒட்டகங்களையும், யானைகளையும் ஊசியின் காதில் நுழையச் செய்து கொண்டிருக்கிறார். அம்மிருகங்களும் அவ்வழியாக உள்ளிலும் வெளியிலும் போய் வந்துகொண்டிருப்பதை நான் கண்டேன்' என்று சொன்னார். இதைக்கேட்டதும் ஒருவர், 'இதில் ஆச்சரியமொன்றுமில்லையே. பகவானுக்கு

அசாத்யமானது எது?' என்று சொன்னார். மற்றவரோ, 'ஓ! இது அசாத்தியம்! தாங்கள் சொல்லுவதைக்கேட்டால், தாங்கள் வைகுண்டம் போகவில்லை என்று நன்றாய்த் தெரிகிறது' என்று சொன்னார்.

"முதலில் சொன்னவர் ஒரு குழந்தையைப்போன்று முழு நம்பிக்கை உடையவராகையால் உண்மையான பக்தர். ஏனென்றால் இவ்வற்புதமாயிருக்கும் உலகத்தை சிருஷ்டித்த பகவானுக்கு அசாத்தியமானது எது?"

காலை ஒன்பது மணி. பகவான் தம் அறையில் வீற்றிருக்கிறார். கொந்நகர் என்னும் ஊரிலிருந்து மனமோகனன் என்னும் ஒரு சிஷ்யர் தம் குடும்பத்தோடு வந்திருக்கிறார். அவர் பகவானை நமஸ்கரித்து, 'நான் கல்கத்தாவிற்கு என் குடும்பத்தை அழைத்துப்போகிறேன்' என்று சொன்னார். பகவான் அவர் க்ஷேம ஸமாசாரத்தை விசாரித்ததும், "இன்றைக்கு மாதப் பிறப்பு; கரிநாளாயிற்றே; நீ உன் குடும்பத்தைக் கல்கத்தாவிற்கு அழைத்துச் செல்கிறாயே. நான் உனக்கு என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லிப் புன்னகையுடன் வேறு விஷயங்களைக் குறித்துப் பேசலானார்.

நரேந்திரரும், அவருடைய கல்கத்தா நண்பர்களும் கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு, ஆடைதரித்துக்கொள்ளப் பகவானது அறைக்கு வந்தார்கள். பகவான் நரேந்திரரை நோக்கி மிக ஆவலுடன், "நீ ஆலமரத்தடியில் சென்று, சிறிதுநேரம் பகவத்தியானம் செய்; கீழே போட்டு உட்காருவதற்கு ஏதாகிலும் கொடுக்கட்டுமா?" என்றார்.

நரேந்திரரும், அவருடைய பிரம்மஸமாஜ நண்பர்களும், ஆலமரத்தைச் சுற்றிலும் கட்டியிருக்கும் செங்கல் மேடையின் மீது உட்கார்ந்துகொண்டு பகவத் தியானம் செய்கிறார்கள்.

காலை மணி பத்து ஆய்விட்டது. பகவான் சற்று நேரம் கழித்து ஆலமரத்தடிக்கு வருகிறார். ம—வும் அவ்விடம் இருக்கிறார். பகவான் நரேந்திரரோடும், அவர் சிநேகிதர்களோடும் பேசுகிறார்.

பகவான் (நரேந்திரரையும் மற்றவர்களையும் பார்த்து) :— தியானம் செய்யும்பொழுது பகவானிடத்தில் மூழ்கவேண்டும். அப்படி மூழ்காமலேயே மிதந்துகொண்டிருந்தால், அடியிலிருக்கும் விலையற்ற இரத்தினங்களை அடையமுடியாது.

இவ்விதம் சொல்லிப் பகவான் பின்வரும் கருத்துள்ள பாடலைப் பாடினார்:

'ஓ மனமே, நீ ஜகன்மாதாவின் திவ்விய நாமத்தை உச்சரித்துக் கொண்டு, விலைகடந்த இரத்தினக் களஞ்சியமான ஹிருதய சாகரத்தின் ஆழத்தில் மூழ்கியிரு.

'சிலதடவை மட்டும் ஜலத்தில் முழுகுவதனால் அவ்விரத்தினங்கள் உனக்குக் கிடைக்காமலிருக்கலாம். அதனாலேயே ஹ்ருதய ஸாகரத்தில் இரத்தினங்களே இல்லை என்பது ஆகாது.

'இக்கடலில் காமாதி ஆறு விகாரங்களான முதலைகளிருக்கின்றன. அவைகள் ஆகாரத்திற்காக அலைகின்றன. ஆனால், விவேகமென்னும் மஞ்சளைப் பூசிக்கொள். மஞ்சளின் வாஸனை இம்முதலைகளால் பிடிக்கப்படாமல் பாதுகாக்கும்

'இக்கடலின் அடியிலிருக்கும் இரத்தினங்கள் அநேகம். அடிவரையில் மூழ்கிப்பார்த்தாயானால் அவைகள் உனக்குக் கிடைக்கும் என்று ராமப்பிரஸாத் சொல்லுகிறார்.'

நரேந்திரரும், அவருடைய நண்பர்களும் பஞ்சவடியைவிட்டு, பகவானிடம்வந்து அவரைச் சூழ்ந்துநிற்கிறார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிஷ்யர்களோடு தமது அறையை நோக்கித் தென் திசையாகச் செல்கிறார். அவ்விதம் நடந்து போகும்பொழுது பேசுகிறார்: "மஞ்சளை உன் சரீரத்தில் பூசிக்கொள். அப்பொழுது முதலைகள் விலகிப்போம். காமக் குரோத லோப மோஹ மத மாச்சரியங்கள் ஆறு முதலைகள். நித்தியாநித்திய வஸ்து விவேகமானது மஞ்சள். இது கடவுள் ஒன்றே நித்தியம் என்றும், மற்றவைகளெல்லாம் அநித்தியம் என்றும் அறியச் செய்கிறது.

"பகவானே நித்தியம், மற்றவைகளெல்லாம் அநித்தியம் என்னும் ஞானமில்லாமல் கேவலம் புத்தகப் படிப்பு, உபந்நியாசம் செய்தல், இவைகளால் என்ன பிரயோஜனம்?

"முதன் முதலில் ஹிருதயமாகிய ஆலயத்தில் பகவானைப் பிரதிஷ்டை செய்; முதலில் பகவானை அறி. நீ பகவானை அறிந்த பின்னர், பேச்சு, பிரசங்கம் முதலானவைகள் செய்யலாம்; அதற்கு முன்னால் கூடாது. ஜனங்கள் இவ்வுலக விஷயங்களில் பற்றுதல் வைத்துக்கொண்டே யிருப்பார்கள்; ஆனால் பரப்பிரம்மத்தைப் பற்றித் தாராளமாகப் பேசுகிறார்கள். இவை யெல்லாம் எதைக்காட்டுகின்றன? பூஜைக்கு யாதொரு விக்கிரகமு-

மில்லாத ஆலயத்தில், சங்கு ஊதுவது போலவே ஆகும். நான் ஒரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள்.

"ஒருகாலத்தில் ஒரு கிராமத்தில் பத்மன் என்னும் பெயருடைய ஒரு வாலிபனிருந்தான். அக்கிராமத்தில் பழைய பாழடைந்த கோவிலொன்றிருந்தது. அக்கோவிலில் வெகு காலத்திற்கு முன், விக்கிரஹங்களுக்குப் பூஜை முதலானவைகள் நடந்துவந்தன. ஆனால் இப்பொழுதோ விக்கிரஹமொன்றுமில்லாமல், அது வௌவாலுக்கு இருப்பிடமாகவிருந்தது. ஒரு நாள் இரவு, அப்பாழுங் கோவிலிலிருந்து மணி, சங்கம் முதலானவைகளின் முழக்கம் வருவதைக் கேட்டு, அக்கிராமவாசிகளனைவரும் ஆச்சரியமடைந்தனர். ஸ்திரீகள், புருஷர்கள், குழந்தைகள் எல்லோரும் அவ்விடம் வந்து கூடினார்கள். அவர்கள், ஒருக்கால் யாரேனும் பக்தர் ஒருவர் பகவத் விக்கிரஹத்தை அவ்விடம் ஸ்தாபித்து, ஸாயங்கால தீபாராதனை செய்கிறாரோ என்று நினைத்தார்கள். அவர்கள் அத்திவ்விய கோஷங்களைச் செவியேற்றுக் கோவிலுக்கு வெளியே கைகூப்பி நின்றார்கள்.

"அவர்களிலொருவன் மிக்க ஆவலினால் தூண்டப்பட்டு, தைரியத்துடன் உள்ளே எட்டிப்பார்க்க, பத்மன் ஆலயத்திற்குள் மணியை அடித்துக்கொண்டும், சங்கநாதம் செய்துகொண்டும் இருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்தான். கோவிலுக்குள் தரை முன் போலவே அசுசியாயிருப்பதையும், அங்கு விக்கிரஹம் எதுவு மில்லாதிருப்பதையும் கண்ணுற்றான்! அவன் உடனே, 'ஏ பத்மா! என்ன, உன் கோவிலில் ஸ்ரீகிருஷ்

ணனே, அல்லது வேறெந்த விக்கிரஹமோ எதையும் காணவில்லையே ! அப்படியிருக்க, ஏன் சங்கநாதம் மாத்திரம் பலமாக முழங்கச் செய்தாய்? வருஷக்கணக்காகச் சேர்ந்திருக்கும் அழுக்கையாவது தள்ளித் தரையைப் புண்ணிய கங்காஜலம் விட்டுச் சுத்தம் செய்ய முயன்றாயா? இன்னும், கட்டிடமோ பதினொரு வௌவால்களினால் (ஞானேந்திரியம் ஐந்து; கர்மேந்திரியம் ஐந்து; மனம் ஒன்று) இரவும் பகலும் அசுத்தம் செய்யப்பட்டுக்கொண்டே யிருக்கின்றது!' என்று கூவினான்.

"முதலில் உனது ஹ்ருதயமாகிய ஆலயத்தில் ஈசுவரனை ஸ்தாபி. அதற்காகச் சர்வ பாபங்களையும் எல்லா அழுக்குகளையும், விஷயப்பற்றுதலையும் முழுவதும் நீக்கிச் சுத்தம் செய். பகவானை அடைய ஒருவன் விஷய இச்சையுள்ள இந்திரிய சுபாவத்திலிருந்து விமோசனமடையவேண்டும். அதன் பிறகு, வேண்டுமானால், சங்கநாதம் செய்யத் தருணமேற்படும். சமூக சீர்திருத்தத்தைப் பற்றியா பேசுகிறாய்? சரி; நீ பகவானை அடைந்த பிறகு அவ்வாறு செய்யலாம். பூர்வகாலத்தில் ரிஷிகள் பகவானை அடைவதற்காக உலகைத் துறந்தனர். இவ்வைராக்கியம் ஒன்றே முதலில் அத்தியாவசியம். அதைப்பெற்றிருந்தால், மற்றெல்லாவற்றையும் தேவையானால் அடையலாம்.

"சமுத்திரத்தினடியிலிருக்கும் இரத்தினங்களையடைய நீ விரும்பினால், உன் மற்ற வேலைகளையெல்லாம் ஒழித்து, கடலின் அடியில் மூழ்கவேண்டும். முதலில் ஈசுவர விக்கிரஹத்தை ஸ்தாபனம் செய்; பிறகு, சங்கநாதத்தைப்பற்றி யோசிக்கலாம். முதலில்

பகவானை அறி; பின்பு, உபந்நியாசங்களையும், ஆசாரச் சீர்திருத்தங்களையும் பற்றிப்பேசலாம்.

"மற்றவர்களுக்கு உபதேசம் செய்வது மிகக் கடினமான வேலை. எவனொருவன் பகவானை அடைகின்றானோ, அவன் அவருடைய ஆக்ஞையை வகிக்கிறான். எவன் ஈசுவராக்ஞையை வகிக்கிறானோ அவனொருவனே மற்றவர்களுக்குப் போதனை செய்ய அருகனாகிறான்."

பிரிவு. 4

## கிரஹஸ்தன் விஷயம்

இதற்குள் பகவான் மேல்கிழக்காக விருக்கும் வடக்குத் தாழ்வாரத்திற்கு வந்துவிட்டார். அத்தாழ்வாரத்தில் தம் அறையின் பக்கத்தில் நரேந்திரர், மணி முதலிய சிஷ்யர்களுடன் நின்றுகொண்டிருக்கிறார். விவேகம், வைராக்கியம் இவ்விரண்டுமின்றி ஈசுவரனைப் பார்க்க முடியாது என்று பகவான் திருப்பித் திருப்பிச் சொல்லுகிறார். மணி என்பவன் சுமார் 27 அல்லது 28 வயதுள்ளவன். ஆங்கிலேயப்பயிற்சியடைந்தவன். விவாகமாய்விட்டது. 'இவர் விவேகம் வைராக்கியம் என்று சொல்லுவது, சந்நியாசியைப்போல் உலகைத்துறத்தலோ? அதாவது பெண்ணாசை பொன்னாசைகளை வெளிப்படையாக நீத்தலோ?' என்று தனக்குள்ளே யோசிக்கிறான்.

மணி (பகவானை நோக்கி):—ஸ்வாமி, மனைவி தன் கணவனிடம், 'நீ என்னை அலக்ஷியம் செய்கிறாய்; நான் தற்கொலை செய்துகொள்ளுகிறேன்' என்று சொன்னால் யாது செய்வது?

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (கேட்பவர்களுக்குப் பயபக்தியை விளைவிக்கும் குரலில்):—எந்த மனைவி பகவானை யடையவொட்டாது தடுக்கிறாளோ, அவள் விதிப்படி யாகட்டுமென்று அவளைக் கைவிடவேண்டியதே. அவள் தற்கொலை செய்துகொண்டாலும் குற்றமில்லை. அவள் இஷ்டப்பிரகாரம் செய்யட்டும்.

அப்பேர்ப்பட்ட மனைவி பகவானை யடையவொட்டாது ஆத்மநாசத்தை யுண்டாக்கும் அவித்யாரூபமே.

இதைக் கேட்டதும் மணி ஆழ்ந்த யோசனையில் மூழ்கினவனாய்ச் சுவரின்மீது சாய்ந்துகொண்டான். நரேந்திரரும் இதர சிஷ்யர்களும் சிறிதுநேரம் மௌனமாயிருந்தனர்.

பகவான் சிறிதுநேரம் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்து மேற்கூறிய நிலைமையிலேயே நின்றுகொண்டிருந்த மணியைத் திடீரென்று திரும்பிப் பார்த்து, அடியில் வருமாறு சொல்லுகிறார்: "ஆனால் ஈசுவரனிடத்தில் உண்மையான பக்தியுடையவனின் விஷயம் வேறு. எல்லோரும், அதாவது அரசர்கள், துஷ்டர்கள், மனைவி முதலிய யாவரும் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறார்கள். மனைவியும் அவன் வழிக்குத் திரும்பி, அவன் செல்லும் ஈசுவரபக்தி மார்க்கத்தையே பின்தொடரக்கூடும். புருஷனுக்குப் பகவானிடம் உண்மையான பக்தியிருந்தால், மனைவி நல்வழியில் திருத்தப்பட்டு, நித்யவாழ்வை யடைய அவன் செய்யும் பிரயத்தனத்திற்கு உதவியாயிருப்பாள்."

இதைக் கேட்டதும் மணி, தன் இருதயத்தில் பொங்கிக்கொண்டிருக்கும் விசாரமாகிய அக்னி யணைய, திரும்பவும் மனச்சாந்தியடைந்தான்.

மணி (பகவானை நோக்கி):—இந்த ஸம்ஸாரம் எவ்வளவு பயங்கரமானது !

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (நரேந்திரர், மணி முதலியவர்களை நோக்கி):—உண்மையாக, ஸம்ஸாரியினுடைய வாழ்க்கை பயங்கரமானதே ! சைதன்யதேவர் ஒரு

சமயம் நித்தியாநந்தரை நோக்கிச் சொன்னதாவது:—
'சகோதரனே! நான் சொல்வதைக்கேள்; ஸம்ஸாரத்தில் மூழ்கினவனுக்கு மோக்ஷம் மிகவும் துர்லபம்.'

(தனிமையாக மணியினிடம்) "ஈசுவரனை மறந்து உலகவாழ்க்கையிலிருக்கும் மனிதனுக்கு மோக்ஷம் மிக துர்லபம். ஆனால், பகவானிடத்தில் உண்மையான பக்தியிருக்கும் மனிதனுக்கு அவ்விதமன்று. ஈசுவரனையடைந்தவன் ஸம்ஸாரத்திலிருந்த போதிலும் பயமின்றி யிருக்கலாம். ஆகையால் ஸம்ஸாரத்திலிருப்பவன் சமயம் ஏற்படும் பொழுதெல்லாம் தனிமையான இடத்திற்குப்போய் ஈசுவரனை தியானம்செய்து, உண்மையான ஈசுவர பக்தியையும், சிரத்தையையும் அடையட்டும். அப்படிப்பட்டவர்கள் ஸம்ஸாரத்திலிருந்த போதிலும் பயமின்றியிருக்கலாம். சைதந்நிய தேவருக்கு அநேக கிரஹஸ்த சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்கள், ஸம்ஸாரத்தி லிருந்தபோதிலும் அதில் பற்றற்றிருந்தனர்."

* * *

இப்பொழுது உச்சிவேளை. அபிஷேகம், தீபாராதனை, அர்ச்சனை முதலியவைகளுடன் பூஜை முடிந்தது. ஆலயத்தில் முழங்கும் மேளவாத்தியம், ஸ்வாமி மத்தியானம் இளைப்பாறுவதற்குத் திருப்பள்ளியிலமர்ந்ததாக அறிவிக்கின்றது. பகவான் போஜனத்திற்கு உட்காருகிறார். நரேந்திரரும், இதரசிஷ்யர்களும் பகவானைப்போலவே கோவிலில் கடவுளுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பிரசாதத்தையே உட்கொள்ளுகிறார்கள்.

# நான்காவது அத்தியாயம்

[பிரம்மஸமாஜத் தலைவரான கேசவ சந்திரசேனருடன் பகவான் கப்பலில் உலாவச் செல்லல்.]

## பிரிவு. 1

## ஸமாதி

1882-வது வருஷம் அக்டோபர் மாதம் 27-ம் தேதி வெள்ளிக்கிழமை பௌர்ணமி. அன்றைய தினம் லக்ஷ்மிபூஜை. ஸ்ரீ ராமகிருஷ்ணர், கோவில் தோட்டத்தி லிருக்கும் தம்மறையில் உட்கார்ந்துகொண்டு, விஜய கோஸ்வாமி, ஹரலால் இவர்களுடன் பேசிக்கொண் டிருக்கிறார். ஒருவன் உள்ளேவந்து, "ஸ்வாமி, கேசவ ஸேனர் வந்திருக்கிறார்; அவர் ஸ்நான கட்டத்திற் கெதிரில் வந்து நிற்கும் ஒரு கப்பலில் இருக்கிறார்" என்று சொன்னான்.

சற்று நேரத்திற்கெல்லாம் கேஸவசேனருடைய சிஷ்யர்கள் அறைக்குள் வந்து பகவானை வணங்கி நின் றார்கள். அவர்கள், "ஸ்வாமி, தங்களுக்காகக் கப்பல் வந்திருக்கிறது. கேசவபாபு அதிலிருக்கிறார்; தாங் கள் தயவுசெய்து அவ்விடம் வரவேண்டுமென்று தங் களை வேண்டிக்கொள்ளும்படியாக எங்களை அனுப்பி யிருக்கிறார். இந்த யாத்திரை தங்களுக்கு மிக்க சந்தோஷத்தைக் கொடுக்கும்" என்றார்கள்.

சாயங்காலம் மணி 4 ஆயிற்று. கப்பலை அடை வதற்காக, பகவான் விஜய கோஸ்வாமியுடன் ஒரு படகி லேறுகிறார். படகில் காலை வைத்தாரோ இல்லையோ

தம் நினைவையிழந்து, அந்தர்முகப்பட்டு ஸமாதியி லாழ்ந்தார்.

ம— கப்பலில் இருக்கிறார். படகு கப்பலினருகில் நெருங்கவும் பகவான் தம் இந்திரியங்க ளெல்லாம் அடங்க, அசைவற்று அந்தர்முகத்தால் பிரம்மானந் தத்தை யனுபவிக்கும் அத் திவ்விய காட்சியை ம— பார்க்கிறார். ம— கப்பலுக்கு மூன்றுமணிக்கே வந்து விட்டார். பகவானும் கேசவசேனரும் சந்திப்பதனால் உண்டாகும் ஆனந்தத்தைப்பார்க்கவும், அவர்கள் ஸம் பாஷணையைக் கேட்கவும், ம— மிகவும் ஆவலாயிருக் கிறார். கேசவஸேனர் தமது பரிசுத்த நடவடிக்கையி னாலும் அற்புத வாக்சாதுர்யத்தினாலும், ம—வைப் போன்ற அநேக சிறுவர்களின் மனதைக் கவர்ந்திருந் தார்.

அநேகர் கேசவஸேனரைத் தங்கள் பந்துவாக வேயெண்ணி மிகுந்த பிரேமை பாராட்டினார்கள். கேசவ ஸேனர் ஆங்கிலக்கல்வி பயின்று ஆங்கிலேயக் காவிய நூல்களிலும், ஆங்கிலேய தத்துவசாஸ்திரங்களிலும் அதிகப் பயிற்சியடைந்தவர். தவிர, அநேக தடவை களில் விக்கிரஹாராதனையை மிகவும் இகழ்ச்சியாகவும் கண்டித்தும் பேசியிருக்கிறார். அப்படிப்பட்டவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரை வியந்து, அவரிடத்தில் பக்தியும் சிரத்தையும் பாராட்டுவதுமன்றி ஆலயத்திற்கு அவ ரைப் பார்க்க அடிக்கடிவருவதும் மிக வியக்கத்தக்கதே. இவ் விருவருக்கும் பொதுவான விஷயம் எது என்று அறிவது, ம— முதலியவர்களுக்கு ஸ்வாரஸ்ய மான வேலையாயிருந்தது.

கேசவரைப்போலவே பகவானும் கடவுள் அரூபி என்று சொல்லுகிறார். ஆயினும், கடவுள் ரூபத்தோடும் இருக்கிறாரென்று அவர் சொல்லுகிறார். அவர் கடவுளைப் பிரம்மமாகத் தியானம் செய்கிறார். ஆயினும் அதே சமயத்தில் ஹிந்து ஐதிகத்திலிருக்கும் அநேக தேவ விக்ரகங்களுக்கும் தேவிவிக்ரகங்களுக்கும் பிரதிதினம் தூப தீப நைவேத்திய முதலிய ஆராதனைகள் செய்துவருகிறார். இன்னும், பிரம்மாநந்தத்தில் மூழ்கி, அவ்விக்ரகங்கள் முன்னிலையில் பாடவும் ஆடவும் செய்கிறார். மற்றத்துறவிகளைப்போ லல்லாமல் பகவான், கட்டிலின் மேல் மெத்தை விரித்துப் படுக்கிறார்; சிவப்புக்கரை போட்ட வஸ்திரம் தரித்துக்கொள்ளுகிறார். மேலும் அவர் மேற்சட்டை, மேஜோடு, ஜோடு இவைகளையும் அணிந்துகொள்ளுகிறார். இவ்வளவு இருந்தும் அவர் உலகப்பற்றற்றவராக விருக்கிறார். கிரகஸ்தனிடம் இல்லாதனவாய்த் துறவியினிடம் மாத்திரம் இருக்கும் அடையாளங்களெல்லாம் அவரிடம் காணப்படுகின்றன. ஆகையினால் ஜனங்கள் அவரைப் பரமஹம்ஸர் என்றழைக்கிறார்கள். இதற்குமாறாக, கேசவரோ, ஈசுவரனை அரூபியென்று மாத்திரமே அபிப்பிராயப்படுகிறார். அவர், தம் மனைவி மக்களோடு உலகவாழ்க்கையி லீடுபட்டிருக்கிறார்; ஆங்கிலத்தில் உபந்நியாஸம் செய்கிறார்; மதவிஷயங்களைக் குறித்த பத்திரிகை யொன்றும் வெளியிட்டு வருகிறார்; தவிரவும் வேண்டியவாறெல்லாம் உலக வியவகாரங்களை அவர் நடத்தி வருகிறார்.

படகு கப்பலோரத்தில் வந்துவிட்டது. எல்லோரும் பகவானைப் பார்க்க ஆவலுடன் வழியில் கூட்டம்

கூடியிருக்கிறார்கள். பகவான் ஜாக்கிரதையாகக் கப்ப லேறவேண்டுமே யென்று கேசவர் மிகக் கவலையுட னிருக்கிறார்.

கப்பலின் மேல்தட்டிலுள்ள அறைக்கு அவரை அழைத்துக்கொண்டு போகவேண்டி, மிகப்பிரயாசத் துடன் ஸமாதியினின்றெழுப்பிப் பிரக்ஞை உண்டாகச் செய்தார்கள். அப்பொழுதும், பிரம்மானந்த உன்மத்த நிலைமை அவரை இன்னும் விடவில்லை. ஒரு சிஷ்யன் மீது சார்ந்தவராய் தாங்கப்பட்டுத் தம்மை யறியாமல் நடந்துவந்தார். கப்பலின் மேல்தட்டு அறைக்கு வந்த தும் கேசவரும், இன்னும் மற்றவர்களும் அவரை நமஸ்கரிக்கவே, இருந்த கொஞ்சம் பிரக்ஞையும் போக ஆரம்பித்தது.

அவ்வறைக்குள் ஒரு பெஞ்சும், ஒரு மேஜையும் சில நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. ஒரு நாற் காலியில் பகவான் வீற்றிருக்க, மற்றொன்றில் கேசவர் உட்கார்ந்தார். விஜயருக்கும் உட்கார இடங்கொடுக்கப் பட்டது. பெரும்பான்மையும் பிரம்மஸமாஜத்தவர்க ளான அங்கிருந்த மற்றப் பக்தர்களும் உட்கார்ந்தனர். அநேகர் கீழே உட்கார்ந்தார்கள். அறை மிகச் சிறியதா யிருந்ததனால் பலர் வாசற்கருகிலும், ஜன்னலருகிலும் நின்றுகொண்டு, ஆவலுடன் உள்ளே எட்டிப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

பகவான் இப்பொழுது திரும்பவும் ஸமாதியில் மூழ்கிவிட்டார்! எல்லோரும் அவர் முகத்தையே கவனித்துக்கொண்டிருக்கிறார்கள். அநேகர் அறைக் குள் வந்திருப்பதையும், பகவானுக்கு அதிக காற்று

வேண்டியிருப்பதையும் கேசவர் அறிந்தார். விஜயர், முன்னர் கேசவஸேனருடைய சிஷ்யராகவிருந்து, கொஞ்சகாலத்திற்குமுன் பிரிவுபட்ட வேறு கொள்கையையுடைய ஸாதாரண பிரம்மஸமாஜத்தைச் சேர்ந்தவர். கேசவசந்திரஸேனர் தம்மதத்தின் கொள்கைக்கு விரோதமாக, சிறுவயதுடைய தம் பெண்ணை விவாஹம் செய்துகொடுத்ததைப்பற்றி, சில சமயங்களில் விஜயர் கேசவரைத் தூஷித்துப் பேசியிருக்கிறார். ஆதலால், சிறிதேனும் எதிர்பார்க்கப்படாமல் கப்பலுக்கு வந்திருக்கும் விஜயரைச் சந்திக்க கேசவர் சகிக்கவில்லை.

கேசவர் தம் ஆசனத்தைவிட் டெழுந்து ஜன்னற் கதவுகளைத் திறந்தார். யாவரும் பகவானைக் கண்கொட்டாமற் பார்த்துக்கொண்டிருக்கின்றனர். அவர் ஸமாதி சிறிது கலைந்தது; ஆயினும் அத் திவ்விய தரிசனம் அவரை விடவில்லை. மெல்லிய குரலில், அவர் "ஆ தாயே! ஏன் நீ என்னை இங்கு அழைத்துவந்தாய்? அவர்கள் நாலாபக்கமும் கட்டுண்டவர்களா யிருக்கிறார்களே! அக் காராக்கிருஹத்திலிருந்து அவர்களை விடுதலை செய்ய என்னால் சாத்தியமாகுமா?" என்று தம் ஜகன்மாதாவினிடம் பேசிக்கொண்டிருக்கிறார்.

உலகத்திலிருப்பவர்கள் ஸம்ஸாரமாகிய காராக்கிருஹத்தில் அடைபட்டவர்களென்பதும், அவர்களால் பிரம்மஞானமாகிய நல்லகாற்றை அடைய முடியாதென்பதும், அத்திவ்விய ஒளியைக் கொஞ்சமேனும் பார்க்க முடியாதென்பதும், அவர்கள் உலக வியவகாரத்தால் கை கால்கள் கட்டுண்டவர்களென்பதும் பகவானுடைய

கருத்தோ ? ஸம்ஸாரமாகிய காராக்கிருஹத்தி விருப்பவர்கள், அக் காராக்கிருஹத்திலிருக்கும் விஷயானந் தங்களையும், லௌகிக வியவகாரங்களையும் மாத்திரமே பார்ப்பார்கள். ஆகையினால்தான் பகவான் தம் ஜகன் மாதாவினிடம் 'என்னை ஏன் இங்குஅழைத்துவந்தாய்?' என்று சொன்னார் போலும் !

காஸிப்பூரிலிருந்து நீலமாதவபாபு இவ்விடம் வந்திருக்கிறார். பகவான் ஸமாதி கலைந்ததைக்கண்டு நீலமாதவரும் மற்றொரு பிரம்மஸமாஜ அங்கத்தினரும் காஸிப்பூரிலிருக்கும் மஹாத்மாவாகிய பவாஹாரி பாபாவைப் பற்றிப் பேச வாரம்பித்தார்கள்.

பிரம்மஸமாஜ அங்கத்தினர் ஒருவர் (பகவானை நோக்கி), 'ஸ்வாமி தங்களைப்போலவே புண்ணிய புருஷராயிருக்கும் காஸிப்பூர் பவாஹாரி பாபாவைப்பார்க்கும் அதிர்ஷ்டம் இவர்களுக்குக்கிடைத்தது' என்றார்.

பகவானுக்கு இன்னும் பேசும் திறமை திரும்பவில்லை. அவர் ஹிருதயம் ஆனந்த வெள்ளத்தினால் பொங்கிப் பெருகியவராய்ப் பேசமுடியாமல், புன்சிரிப்புடன் பாபாவைக் குறித்துப் பேசும் விஷயங்களைக் கேட்டுக்கொண்டுவந்தார்.

பிரம்மோ (பகவானிடம்):— சுவாமி ! பவாஹாரி பாபா தம்மறையில் தங்கள் உருவப்படத்தை வைத்திருக்கிறார்.

பகவான் புன்சிரிப்புடன் தம் சரீரத்தைச் சுட்டிக் காட்டி மெதுவான குரலில், "இது ஒரு தலையணை யுறை ! தலையணையுறையே தவிர வேறில்லை" என்றார்.

'தலையணையும், தலையணையுறையும்.' ஆத்மாவும், சரீரமும். சரீரம் அழிந்து போவது; ஆத்மா ஒன்றுதான் சாசுவதம். படம் அநித்தியமான சரீரத்தினுடையதே என்று சொல்லுகிறார் போலும். இக்காரணத்தாலே பகவான், கேவலம் உடலின் படத்தைப் பெரிதாக மதியாமல், நாம் உடலின் உள்ளிருக்கும் ஆத்ம சொரூபத்தைப் பூஜிக்கவேண்டும் என்கிறாரோ?

பகவான் மேலும் சொல்லுகிறார்: "ஆனால் ஒன்று மனத்தில் வைக்கவேண்டும். பக்தனுடைய ஹிருதயம் பகவானுடைய ஆலயம். ஈசுவரன் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறானென்பது உண்மையே. ஆயினும், பக்தனுடைய ஹிருதயத்தில் அவன் விசேஷமாயிருக்கிறான். உதாரணமாக, அநேக வீடுகளையுடைய ஒரு ஜமீந்தாரரை, அவருடைய எந்தக் கிருஹத்திலும் பார்க்க முடியும்.. ஆயினும் அந்த ஜமீன்தாரரைக்காண விசேஷமான ஒரு குறிப்பிட்ட கிரஹம் இருப்பதாக ஜனங்கள் சொல்லுகிறார்கள். அதுபோல் பக்தனுடைய ஹிருதயமே பகவானுக்குக் கொலுமண்டபம். ஒருவன் பகவானைப் பார்க்கவேண்டுமானால் அந்தக் கிருஹத்தில் பார்க்கமுயலட்டும். (யாவரும் சிரித்தல்)

"எந்த வஸ்து வேதாந்திகளால் பிரம்மமென்று அழைக்கப்படுகிறதோ, அவ்வஸ்துவையே, யோகிகள் ஆத்மாவென்றும் பக்தர்கள் பகவானென்றும் அழைக்கிறார்கள்.

"மேல் ஜாதியாகிய பிராம்மணன் ஒருவன், ஆலயத்தில் ஈசுவரனைப் பூஜைசெய்யும்பொழுது அர்ச்சகன் என்றும், சமையலறையில் சமையல் செய்யும்பொழுது

சமையற்காரன் என்றும் அழைக்கப்பட்டபோதிலும், அவன் எப்பொழுதும் பிராம்மணனாகவேயிருக்கிறான்.

"பிரம்மத்தை அடையவிரும்பும் வேதாந்தியானவன், 'நேதி, நேதி' அதாவது, 'பிரம்மம் இதன்று, இதன்று' என்று சொல்லிக்கொள்கிறான். பிரம்மம் அளவிடக்கூடியது அன்று; ஜீவனன்று; வெளியில் தோன்றும் ஜகத்துமன்று என்று பார்த்து ஒவ்வொன்றாகத் தள்ளிக் கடைசியில் பிரம்மத்தை அடைகிறான். இவ்வித விசாரணையால், மனம் இச்சைகளால் விகாரமடையாமல், தன் ரூபத்தையே எப்பொழுது இழக்கிறதோ, அப்பொழுதுதான், பிரம்மஞானத்தை அடைந்து, சமாதியில் நிற்கமுடியும். அப்படிப்பட்டவன்தான் உண்மையாக பிரம்மஞானத்தை அடைந்து, ஜகத்தை மித்தை—பொய் என்று அறிகிறான். வஸ்துக்களைக் குறித்த நாமரூபங்கள் கனவுபோன்றவை என்றும், பரப்பிரம்மம் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாததென்றும், பரமாத்மாவைப் புருஷனாகக்கூடச் சொல்ல முடியாதென்றும் அறிகிறான்.

"இது அத்துவைதிகளின் கொள்கை. பக்தர்களோவெனில் வேறுவிதமாக நினைக்கிறார்கள்; உணர்கிறார்கள். அத்துவைதிகளைப் போலல்லாமல் ஜாக்கிரதாவஸ்தையை நிஜமாகவும், பிரபஞ்சத்தைக் கனவென்றெண்ணாமல் உண்மையாகவும் எண்ணுகிறார்கள். நாமரூபங்களில் நம்பிக்கை அவர்களுக்குண்டு. அவர்கள், உலகத்திலிருக்கும் வஸ்துக்களெல்லாம் கடவுளின் சிருஷ்டியென்றும், கடவுள் அனந்த கல்யாண குணங்களும், திவ்யமங்கள சொரூபமும் உடையவரென்றும் சொல்லு

கிறார்கள். நக்ஷத்திரங்கள் நிறைந்த வானம், சூரிய சந்திராதிகள், மலை, கடல், மனிதர்கள், மிருகங்கள், பக்ஷிகள் ஆகிய இவைகளெல்லாம் அவனுடைய திவ்விய அற்புதச் சிருஷ்டி. அவன் தனவான்; இவைகளெல்லாம் அவனுடைய தனம். அவன் உள்ளும் வெளியும் எங்குமிருக்கிறான். அன்றியும், பக்தர்களிலேயே மேலான பதவியை அடைந்தவர்கள், 'இதே ஈஸ்வரன் தான் ஜீவாத்மாவாகவும் இருபத்திநான்கு தத்துவங்களடங்கிய ஜகத்தாகவும் உற்பவித்திருக்கிறான்' என்று சொல்லுகிறார்கள். பக்தன், சர்க்கரையின் இனிப்பை அனுபவிக்க விரும்புகிறானேயொழிய தானே சர்க்கரையாகவிருக்கவேண்டுமென்று விரும்புகிறதில்லை. (யாவரும் சிரித்தல்)

"பக்தன் எவ்வாறு நினைக்கிறானென்றும், உணருகிறானென்றும் தெரியுமா? 'ஏ ஈசா! நீ பிரபு, நான் உனது அடிமை; நீ என் தாய், நான் உனது குழந்தை' அல்லது, 'நீ குழந்தை, நான் உனது தாய்' அல்லது தந்தை' அல்லது, 'நீ பூரணம், நான் ஒரு பாகம்' என்று சொல்லுகிறான். 'நான் பிரம்மம்' என்று பக்தன் சொல்லவேமாட்டான்.

"யோகியானவன் ஆத்மாவை அனுபவபூர்வமாக அறிய விரும்புகிறான். ஸமதமாதிகளால், ஜீவாத்மாவை பரமாத்மாவோடு கலக்கும்படிசெய்வது அவன்கருத்து. அவன் முதலில், அங்குமிங்கும் இந்திரியவிஷயங்களில் அலைந்து சிதறியிருக்கும் மனத்தை ஒருமைப்படுத்தி, பின்னர், பரமாத்ம ஸ்வரூபத்தில்* நிறுத்தப் பிரயத்தனப்படுகிறான். ஆகையினால்தான், அவனுக்குத் தனி

மையான இடத்தில், மனம் சஞ்சலமடையாமலிருக்கக் கூடிய ஆசனத்திலிருந்து தியானம் செய்வது அவசியமாகிறது.

"ஆனால், எல்லாம் ஒரே வஸ்துதான்; பெயரளவில் மாத்திரம் பேதமே தவிர வேறில்லை. ஒரே வஸ்துவைத்தான் அத்வைதி 'பிரம்மம்' என்றும், யோகி 'ஆத்மா' என்றும், பக்தன் 'பகவான்' என்றும் சொல்லுகிறான்."

## பிரிவு. 2

---

### ஸகுணப்பிரம்மம்:

### ஆதிசக்தியாகிய காளியும் அவள் மகிமையும்

கப்பல் தக்ஷிணேசுவரத்தை விட்டுக் கல்கத்தா நகரை நோக்கிச்செல்கிறது. அநேகர் கண்கொட்டாமல் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் முகத்தையே பார்த்த வண்ணமா யிருக்கிறார்கள்; அவர் திருவாய்மலர்ந்தரு ளும் வாக்கியங்களாகிய அமிர்தத்தைப் பானம்செய்து கொண்டிருக்கிறார்கள். கப்பல் போவதுகூட அவர் களுக்குத் தெரியவில்லை. கோவில்தோட்டத்தைவிட்டுக் கப்பல் வெகுதூரம் வந்துவிட்டதனால், அவ்வழகிய ஆலயம் கண்ணிற்கு மறைந்துவிட்டது. ஆகாசத்தைப் பிரதிபிம்பிக்கும் புண்ணிய தீர்த்தத்தின்மேல் இவர்க ளிருந்தபோதிலும், அதைக் கப்பல் பிளந்து செல்லும் பொழுதுண்டாகும் நுரைசூடின அலைகளின் சப்தம் பக்தர்களின் காதிற்படவில்லை. பகவானது திவ்விய தரிசனத்தின் அற்புதமானது அவர்களை மயங்கும்படி செய்தது. பக்தியென்னும் மைதீட்டப்பட்ட அழகிய கண்களையும், பிரம்மானந்தத்தினால் ஜ்வலிக்கும் மந்த ஹாஸ வதனத்தையும்கொண்ட ஓர் அற்புத அவதார புருஷன் அவர்கள் முன்னிருக்கிறார். உலகத்தையும் அதன் ஸுகங்களையும் விட்டவர்; பகவத் பிரேமையி னால் பித்துப்பிடித்தவர்; பகவானைத் தவிர வேறெதை யும் தேடாதவர். இத்தகைய மஹா புருஷரின் தரிச

னத்தால் மனம் கவரப்பட்டவர்களாகி அவரையே பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர்:—ஸ்ரீமத் சங்கராசாரியரால் விவரிக்கப்பட்ட அத்வைத வேதாந்த தத்துவத்தின் படி, பிரம்மம் ஒன்றுதான் ஸத்தியம்; ஜகத் மித்தை. ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணபூதமாயிருக்கும் ஸகுணப் பிரம்மமாகிய ஜகன்மாதா (சக்தி) பாரமார்த்திக திருஷ்டியில், அதாவது பிரம்மமே சத்தியம் என்று சொல்லுகிற பொழுது, சத்தியமாக மாட்டாள்.

"ஆனால் ஸாதாரண மனிதன், 'நேதி, நேதி' என்று எவ்வளவு தூரம் விசாரணை செய்து பார்த்தபோதிலும், ஸகுணப் பிரம்மத்தின் ஆதீனத்தைவிட்டு மேற்செல்ல முடியாது. இந்திரியங்களை ஒட்டின மனதையிழந்து, அவனுடைய ஜீவன் ஆனந்த மயமான ஸமாதியில் பிரம்மத்துடன் ஒன்றாகக் கலக்கும்பொழுதுதான் அப்படிச் செல்லமுடியும். 'நான் பிரம்மத்தியானம் செய்கிறேன்' என்று ஒருவன் சொல்லும்பொழுதுகூட, அந்தக் குணத்தோடு கூடிய பிரம்மத்தின் எல்லைக்குள் தான் இருந்து வருகிறான். ஸகுணப் பிரம்மத் தியானத்தை ஒருவன் உதறி விலக்குவது அசாத்தியம்.

"ஆதலால் நிர்க்குணப்பிரம்மம், ஸகுணப்பிரம்மம் எல்லாம் ஒன்றே. ஒன்றில் நம்பிக்கையிருந்தால் மற்றொன்றிலும் நம்பிக்கையிருந்தே தீரவேண்டும். அக்கினியை அதன் தஹிக்கும் குணத்திலிருந்து பிரித்து அறியமுடியாது. அவ்வண்ணமே தஹிக்கும் குணத்தை அக்கினியிலிருந்து பிரித்து அறிய முடி

யாது. அவ்வாறே சூரியனை அதன் கிரணங்களைத் தவிர்த்தோ அல்லது சூரியக்கிரணங்களைச் சூரியனைத் தவிர்த்தோ கருதமுடியாது.

"பால் எப்படிப்பட்டது? அது ஒரு வெள்ளை யான வஸ்து வென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். பாலை நீக்கிப் பாலின் வெள்ளை நிறத்தை மாத்திரம் கருதமுடியாது. அவ்வாறே அதன் வெண்மை நிறத்தை நீக்கிப் பாலைக்கருத முடியாது. அதுபோல் சகுணப் பிரம்மத்தைக் கருதாமல் நிர்க்குணப் பிரம்மத்தைப் பற்றியோ, நிர்க்குணப் பிரம்மத்தைக் கருதாமல் சகுணப் பிரம்மத்தைப்பற்றியோ கருதுதல் முடியாது.

"அகண்டமாய், நிர்க்குணமாய், நாமரூபங்களால் பந்தப்படாதிருக்கிற வஸ்துவும், கண்டமாய் சகுண மாய் நாமரூபங்களுடன் கூடியதாயிருப்பதும் பரஸ்பர சம்பந்தப்பட்டவை. ஒன்றை நீக்கி மற்றொன்றை நினைக்க முடியாது.

"நம் அறிவுக்கெட்டியபடி நாம் ஆதி சக்தியென்று கருதும் ஸகுணப்பிரம்மம், ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹா ரங்களைச் செய்கிறது. தந்திர சாஸ்திரங்கள் அவ்வஸ்து வைக் காளியென்றும் சக்தியென்றும் அழைக்கின்றன.

"எனவே, நிர்க்குணப் பிரம்மமென்பதும் ஸகுணப் பிரம்மமென்பதும் ஒரே வஸ்துதான். ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களாகிய விகாரங்களில்லாததாக நினைக்கும்பொழுது நிர்க்குணப்பிரம்மமென்று அதை அழைக்கிறேன். ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார முத லிய காரியங்களுடனிருக்கும் பொழுது அதையே ஸகுணப்பிரம்மமென்று அழைக்கிறேன்.

"எப்படி ஒரே வஸ்துவானது, 'ஜலம்' என்றும், "வாட்டர்' என்றும், 'பாணி' என்றும், 'வாரி' என்றும், "அக்வா' என்றும் சொல்லப்படுகின்றதோ, அவ்வாறே ஒரே வஸ்து, பற்பல நிலைமைகளில் பற்பல நாமங்களால் அழைக்கப்படுகிறது. ஒரு தடாகத்திற்கு நான்கு படித்துறைகளிருப்பதாக வைத்துக்கொள்வோம். ஹிந்துக்கள் ஒரு துறையிலிறங்கிக் குடித்து, அதை 'ஜலம்' என்று சொல்லுகிறார்கள். மஹம்மதியர்கள் மற்றோர் துறையிலிருந்து குடித்து அவ்வஸ்துவை 'பாணி' என்கிறார்கள். ஆங்கிலேயர்கள் வேறோர் படித்துறையிலிருந்து குடித்து அதை 'வாட்டர்' என்று சொல்கிறார்கள்.

"கடவுள் ஒன்றே; நாமரூபங்கள் பல. சிலர் அவரை அல்லா வென்றும், சிலர் கடவுளென்றும், சிலர் பிரம்மமென்றும், மற்றும் சிலர் காளியென்றும், வேறு சிலர் இராமன், ஹரி, இயேசு, புத்தர் என்றும் அழைக்கிறார்கள்."

கேசவர் (சிரித்துக்கொண்டு) :—பிரபோ! ஜகன்மாதாவாகிய காளி, அவளது லீலாரூபமாகிய இப்பிரபஞ்சத்தில், தன்னை எங்ஙெந்த ரூபங்களாகத் தோற்றுவிக்கிறாள் என்பதை மற்றுமொருமுறை திருவாய் மலர்ந்தருளவேண்டும்.

பகவான் (புன்சிரிப்புடன்) :—இவ்வுலகத்தில் லோகமாதா, பலவித ரூபங்களோடும் பலவித நாமங்களோடும் லீலை புரிகின்றாள். ஒரு சமயம் அகண்ட நிர்க்குணப் பிரம்மமான மஹா காளியாகவும் மற்றொரு சமயம், நித்தியகாளியாகவும் தோற்றுவிக்கிறாள்.

ஒரு நிலைமையில் சுடுகாட்டிற்கு அதிபதியான பயங்கர ரூபத்தோடுகூடிய மயான காளியாகவும், மற்றோர் நிலைமையில் நம்மையெல்லா மிரக்ஷித்து அனுக்கிரகம் செய்யும் ரக்ஷா காளியாகவும் தோன்றுகிறாள். மற்றும் ஓர் நிலைமையிலோ, அகிலாண்ட நாயகனாகிய சிவனுக்குப் பிரியையாகி, பக்தர்களின் கண்களுக்கு சந்தோஷத்தையும் குளிர்ச்சியையும் கொடுக்கின்ற நீலமேக சியாமளையாகத் தோன்றுகிறாள். புண்ணிய கிரந்தங்களாகிய தந்திர சாஸ்திரங்கள், அவ்வகண்டப் பிரம்மமாகிய தாகினீயைப்பற்றிப் பேசுகின்றன. சூரிய, சந்திர, நக்ஷத்திரங்களொன்று மில்லாமல், எங்கும் ஆழ்ந்த இருள் மூடியிருக்கும்பொழுது, எனது ஜகன்மாதா மட்டிலுமே அரூபியாயிருந்தாள். ஹிந்துக்களுடைய கிரஹத்தில் பூஜிக்கப்பட்டுவரும் என் அன்னையின் நீலமேக சியாமள ரூபமானது மனிதனால் சுலபமாக அறியக்கூடியது. அந்த ரூபத்தில் அவள் மனிதர்களுடைய மனோபீஷ்டங்களை ஏராளமாகக் கொடுத்து, அவளுடைய குழந்தைகளை "பயப்படவேண்டாம்" என்று சொல்லி அனுக்கிரஹஞ் செய்து, அவர்களது மனத்தை இழுக்கிறாள். ஹிந்துக்கள் தங்கள் வீட்டில் பூசித்து வரும் தேவி அவள்தான். இன்னும், அவள் மஹாமாரி, பஞ்சம், பூகம்பம், வறட்சி, அதிகமழை இவைகள் ஏற்படும் காலங்களில், அவைகளினின்றும் இரக்ஷிக்கும் ஜகத் ரக்ஷகியாகத் தோன்றுகிறாள். மற்றும், மயானக்கரையில் அவள் காலரூபமா யிருக்கிறாள். பிணம், நரி, யோகினி அவளுடைய பயங்கரமான கூட்டாளிகள். அவள் அவ்வளவு கொடுமையான பிர

தேசங்களின்மத்தியில், மேற்கூறிய பயங்கரமானவைக ளால் சூழப்பட்டு வசிக்கின்றாள். பெருகும் இரத்த வெள்ளமும், அவள் கழுத்தைச்சுற்றிய மண்டையோட் டின் மாலையும், இறந்தவர்களின் கைகளிறாற் செய்த இடைக் கச்சையும், அவளை ஸம்ஹார காளியென்று அறிவிக்கும் குறிகள்.

"அவள் சிருஷ்டிக் கிரமத்தைப் பார்! பிரளய காலத்தில் என் அன்னை ஜகன்மாதா சிருஷ்டிகளின் விதைகளை ஜாக்கிரதையாக எடுத்துச் சேர்த்து வைக் கிறாள். ஒருவீட்டு எஜமானி, வீட்டு உபயோகத்திற்கான விதை முதலான சாமான்கள் போடப்பட்ட பானை யொன்று தன் வசம் தனியாக வைத்துக்கொண் டிருக் கிறாள் அல்லவா?" (இதைக் கேட்டதும், கேசவஸேன ரும் மற்றவர்களும் சிரிக்கிறார்கள்.)

பகவான் புன்சிரிப்புடன் மேலும் சொல்லுகிறார்: "ஆம் அப்பா, அது வாஸ்தவம். ஒவ்வொரு வீட்டு எஜ மானியும், அப்படிப்பட்ட பானையொன்று தன் வசம் வைத்திருக்கிறாள். அதில் கடல்நுரையும், வெள்ளரி, பூசுணி, சுரை முதலியவைகளின் விதைகளடங்கிய சிறு பொட்டணங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. அவள் வேண்டுமென்ற பொழுது அவைகளை வெளியே எடுக் கிறாள். அவ்வாறே என் அம்மை சிருஷ்டியின் விதை களைப் பிரளயகாலத்தில் எடுத்துவைக்கிறாள். (யாவரும் சிரிக்கின்றனர்)

"ஆதி திவ்ய சக்தியாகிய என் அம்மை இம் மாறு படும் உலகத்தின் உள்ளும் புறம்புமாய் இருக்கிறாள். அவள், உலகத்தை உண்டுபண்ணி அதில் வசிக்கிறாள்!

அவள் சிலந்தி; இவ்வுலகம் அவளால் நெய்யப்பட்ட வலே! சிலந்தி தன் சரீரத்திலிருந்து வலையைச் செய்து கொண்டு அதில் வசிக்கிறது. என் அம்மை தானே பாத்திரமாயும், அதனுள்ளிருக்கும் வஸ்துவாயு மிருக்கிருள். ஆதாரமாயும் ஆதேயமாயிருப்பவளும் அவளே.

"காளி நீலமேக வர்ண முடையவளா? இல்லவே யில்லை! அவள் மனிதர் திருஷ்டிக்கு வெகு தொலைக் கப்பால் இருப்பதனுலே பார்வைக்குமட்டிலும் அவ் விதம் தோற்றுகிருள். ஆகாசம் தூரப்பார்வைக்கு நீலவர்ணமாகத் தோற்றுகிறதில்லையா? நம்மருகிலிருக் கும் ஆகாசத்துக்கு யாதொரு நிறமுமில்லை. அவ்வண் ணமேதான் ஸமுத்திரஜலமும். அது, சிறிது தூரத்தி லிருந்து பார்த்தால் ஒரு வித இருண்ட நீலநிறமாகத் தோற்றும். அருகில் சென்று கொஞ்சம் ஜலம் உன் கையிலெடுத்துப் பார்ப்பாயானல் அது வர்ணமற்ற தென்று நீ யறிவாய். அவ்வாறே காளியின் (ஜகன்மாதா) அருகிற்சென்று அவளை யறிந்தால், குணங்களால் விசே ஷணிக்க முடியாத நிர்க்குணப் பிரம்மமாகத் தோற்று வாள்."

பகவான், பகவத் பிரேமையாகிய மதுவினுல் மயங்கினவராய் பின்வரும் கருத்துள்ள பாடலைப் பாடினர்.

"என் ஜகன்மாதா கறுப்புவர்ணமா! ஆ! என்மனமே, நீ என்ன சொல்லுகிருய்? எல்லையற்ற அகண்டத்தை அவள் ஆடையாக அணிந்திருக்கிருள்! அவள் கறுப்பா யிருந்தபோதிலும், ஹிருதய கமலத்தைப் பிரகாசிப்பிக் கிருள்!"

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (கேசவர் முதலியவர்களை நோக்கி):—பந்தம் மோக்ஷம் இரண்டும் அவளுடைய செய்கை. ஒரு மனிதன், பெண் பொன் இவைகளினுற் கட்டுப்படுவது, பிரபஞ்சமுறையில் ஒருபாகமாக என் தாயாரால் சிருஷ்டிக்கப்பட்ட மாயாசக்தியினுல்தான். மனிதன் பந்தங்களிலிருந்து மோக்ஷமடைவதும், அவளுடைய அருளினுலும், கருணையினுலுமே. அவள் தன் குழந்தைகளை, ஸம்ஸாரமாகிய ஸாகரத்தி னின்றும் கடத்தி, அவர்கள் கைகால்களைக் கட்டியிருக்கும் விலங்குகளை நீக்குகிறுள்.

பகவான் கந்தர்வகானத்தையும் பழித்து எழும் இனிய குரலில் கீழ்வரும் கருத்துக்களடங்கிய பாடலைப் பாடுகிறுர்:

ஜகன்மாதாவும் முக்தஜீவனும்

'நீலமேக வர்ணத்தையுடைய என்னம்மா! நீ, ஸம்ஸாரமாகிய சந்தைக்களத்தில், மனிதனுகிய காற்ருடியைப் பறக்கவிட்டு விளையாடுகிறுய்!

'அந்தக் காற்ருடி மாயையென்னும் கயிற்றில் கட்டப்பட்டு நம்பிக்கையென்னும் காற்றினுல் எழும்பிப் பறக்கிறது.

'இக் காற்ருடியின் சட்டமோ மனிதர்களுடைய சரீரத்தின் எலும்புகளும், நரம்புகளும், உள் அவயவங்களும். உன் முக்குணங்களினுலே (ஸத்வ, ரஜஸ், தமஸ்) இக்காற்ருடி செய்யப்பட்டிருக்கின்றது. மற்ற வேலைப்பாடெல்லாம் வெறும் அலங்காரமே.

'மேலும், இக்கயிறு, உலக இச்சையென்னும் கண்ணுடித் தூளினுல் கூராக்கப்பட்டிருக்கிறது. இலக்ஷம் காடிற்று

களில் ஒன்றோ இரண்டோதான் கயிறறுபட்டு முக்தியடைகின்றன ! ஆ ; அப்பொழுது நீ எவ்விதம் கைகொட்டிச் சிரிக்கிறாய் !

'இவ்விதம் விடுபட்ட காற்றாடி, அனுகூலமான காற்றினால் அடித்துக்கொண்டு போகப்பட்டு, சம்ஸார ஸாகரத்திற்கு அப்பாலிருக்கும் அகண்டத்தில் விழுகிறது என்று பிரஸாத் சொல்லுகிறார்.'

"என்னுடைய ஜகன்மாதா எப்பொழுதும் லீலாமயியாக விருக்கிறாள். உண்மையாக இவ்வுலகம் அவளுடைய லீலையே. அவள் தன்னிஷ்டப்படியே செய்பவள். தன் லக்ஷம் குழந்தைகளில் ஒன்று அல்லது இரண்டுபேரை மட்டிலுமே சிறையிலிருந்து விடுவிப்பதும் அவளுடைய இஷ்டமேயாம்."

அங்கிருந்த பிரம்மோ பக்தர் ஒருவர், "ஸ்வாமி, அவளுக்குப் பிரியமிருந்தால் ஒவ்வொருவரையும் விடுவிப்பது சாத்தியமாகுமே. அப்படியிருக்க, அவள் ஏன் எங்கள் கைகால்களை உலகப்பற்றாகிய சங்கிலிகளால் கட்டியிருக்கிறாள் ?" என்றார்.

பகவான்:—அது அவளுடைய இச்சை. தான் சிருஷ்டித்த இவர்களோடு இவ்விதம் விளையாடிக் கொண்டிருப்பது அவளுடைய இச்சை. கண்ணும் பூச்சி விளையாட்டில், தாய்ச்சியைத்தொடும் வரையில் தான் குழந்தைகள் ஓடிக்கொண்டிருக்கும். தாய்ச்சியைத் தொட்ட குழந்தைகள் திரும்பவும் ஓடவேண்டியதில்லை. மேலும் அவ்விளையாட்டில் திரும்பவும் சேர முடியாது. அவளைத் தொடாத மற்றவர்கள், அவள் சந்தோஷமடைய ஓடிக்கொண்டிருக்கவேண்டும். எல்லோ

ரும் ஒரே சமயத்தில் தன்னைத்தொட்டு, அதினால் அவ்விளையாட்டை முடித்துவிட லோகமாதாவுக்கு ஒருவிதத்திலும் பிரியமிராது. ஆகையினால் ஸம்ஸாரத்திற் கட்டப்பட்டிருக்கும் காற்றாடிகளாகிய ஜீவன்களில் லக்ஷத்திலொருவன் கயிற்றை அறுத்துக்கொண்டு முக்தி யடைவதைப்பார்த்து, அவள் கைகொட்டிச் சந்தோஷ மடைகிறாள். (பக்தர்களெல்லாரும் சந்தோஷ மடைகிறார்கள்.)

"என் ஜகன்மாதாவே ஒவ்வொரு ஜீவனுக்கும் அந்தரங்கமாக கண்ணைச்சிமிட்டி ஜாடைகாட்டி 'நான் மறு உத்தரவு கொடுக்கும் வரையில் உலகத்திற்குப் போய் ஜீவி' என்று சொல்லியிருக்கிறார்கள் போலும். நிஜமாக, ஜீவர்களின்மீது குற்றம் சுமத்துவதற்கில்லை. அவள் தன் அருளினாலேயே, உலகவிஷயங்களிலிருந்து மனதைத்திருப்பி, அவளுடைய திருவடித் தாமரைகளில் பக்தியும், முக்தியும் கொடுக்கக்கூடும் என்பது திண்ணம்."

பகவான் ஸம்ஸாரியாகப் பாவித்துக்கொண்டு, லோகமாதாவின் முன்னிலையில் தன் மனதிலுள்ள துக்கங்களை எடுத்துக் காட்டுவதுபோல், அடியில்வரும் கருத்துக்களடங்கிய பாடலைப் பாடுகிறார்:—

## ஜகதீசுவரியும் அவள் குழந்தைகளும்

"என் அம்மா, நீ இங்கிருந்தும், நான் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதே திருடர்கள் (காமாதிகள்) என் சகலத்தையும் அடித்துக்கொண்டு போகிறார்களே என்னும் கவலையே என் மனத்தில் பெரும்பாரமாகக் குடிகொண்டிருக்கிறது.

"நான் சில சமயம் உன் திருநாமத்தைச் சொல்ல வேண்டுமென ஸங்கல்பித்துக்கொள்கிறேன். ஆனால் வேளை வரும்பொழுது நான் மறந்துபோகிறேன். ஆ! இதெல்லாம் உன் மாயை என்று இப்பொழுது அறிகிறேன்.

"உண்ணுவதற்கு,உணவோ,வைத்திருக்கப்பொருளோ ஒன்றும் நீ கொடுக்கவில்லை; ஆதலால் உனக்கும் கிடைக்கவில்லை. இது என் தப்பிதமா? நீ கொடுத்திருந்தாயானால், உனக்கு நிச்சயமாகக் கிடைத்திருக்கும். நீ யளித்தவைகளைக்கொண்டே நானும் உனக்குக் கொடுத்திருப்பேன்.

"கீர்த்தியோ, அபகீர்த்தியோ, இனிப்போ, கசப்போ சகலமும் உன்னுடையதே! அன்பான எண்ணங்களுக்கெல்லாம் அரசியே! அவ்வித எண்ணங்கள் என் மனத்திலுண்டாகும்பொழுது அவைகளைச் சுயேச்சையாக விடாமல் ஏன் தடுக்கிறாய்?

"நீ எனக்கு மனதைக்கொடுத்தாய்; ஆனால், அத்துடன் கண்ணைச்சிமிட்டி ஜாடையாக ஒரு இரகசியத்தையும் அதற்குச் சொல்லிவைத்தாய். அதனால் உனது சிருஷ்டியாகிய இவ்வுலகத்திலே சுகத்தைத்தேடி, கசப்பை இனிப்பாகவும், பொய்யை மெய்யாகவும் நினைத்துக்கொண்டு அலைகிறேன்' என்று பிரஸாத் கூறுகிறார்.

* * * *

"மனிதனை ஸம்ஸாரஸாகரத்தில் தத்தளிக்கச் செய்யும் இம்மாயையை, என் ஜகன் மாதாவே உண்டுபண்ணியிருக்கிறாள். 'என் தாயே! எனக்கு ஆத்மாவைக்கொடுத்து, அத்துடன் அதை ஸம்ஸாரத்தில் கட்டுண்டு வாழும்படி இரகசியமாகக் கட்டளையிட்டிருக்கிறாய்' என்று பிரஸாத் சொல்லுகிறார்."

## பிரிவு. 3

---

### கர்மயோகம்

ஒரு பிரம்மோ பக்தர் :—ஸ்வாமி ! ஒருவன் உலகத்தைத் துறந்தாலொழிய கடவுளை யடைய முடியாதென்பது உண்மையா ?

பகவான் (புன்சிரிப்புடன்) :—இல்லவேயில்லை. எல்லாவற்றையும் துறந்துவிட வேண்டுமென்பது உன் விஷயத்திலல்ல. உன் தற்கால நிலைமையே உனக்குப் போதுமானது. நல்ல தங்கமும், கலப்பிடமான தங்கமும் இருக்கின்றன. இவ்விரண்டும் உபயோகப்படவில்லையா? பளிங்குபோன்ற சுத்தமான சர்க்கரையும் சுத்தம் செய்யாத வெல்லமு மிருக்கின்றன. இவ்விரண்டும் இனிப்பாக விருக்கவில்லையா? (யாவரும் சிரிக்கின்றனர்.)

"நீ இப்பொழுதிருக்கும் நிலைமையே மிகவும் சரியாயிருக்கிறது. 'நாக்ஸ்' என்னும் சீட்டாட்டம் உனக்குத் தெரியுமா? அந்த ஆட்டத்தில் 17 எண்ணிக்கை ஆகிறவரையில்தான் ஆட்டம் நடந்துகொண்டிருக்கும். ஆட்டத்தில் ஐயமடைய 17 எண்ணிக்கைதான் வேண்டும். நான் அவ்வாட்டத்தில் வேண்டியதற்குமேல் பிடித்ததனுல் எனக்கு ஆட்டம் போய்விட்டது. நீங்கள் விளையாட்டில் அதிக கெட்டிக்காரர்களாகையினுல், சிலர் 10, சிலர் 6, சிலர் ஐந்தோடே திருப்தியாயிருக்கிறீர்கள். நீங்கள் அதிகமாக பிடி பிடிக்காததினுல் உங்களுக்கு ஆட்டம் போகவில்லை ; இன்னும் நடந்து

கொண்டிருக்கிறது. அது ஸரிதான்; இல்லையா? (யாவரும் சிரிக்கின்றனர்.)

"நீ இவ்வுலகில் கிரஹஸ்தனாயிருந்தாலும் சரி, லௌகிகனாயிருந்தாலும் சரி; அதனாலொன்றும் பாதகமில்லை. நீ உன்மனத்தைமட்டிலும் பகவானிடம் நிலை நிறுத்தவேண்டும். ஒருகையினால் உன்வேலையைச்செய்; மற்றொரு கையினால் பகவானுடைய பாதங்களைப் பிடித்துக்கொள். இவ்வுலகில் உனக்குச் செய்யவேண்டிய வேலை யில்லாமலிருக்கும்பொழுது, நீ உன் இருகைகளாலும் பகவான் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்து உன் ஹ்ருதயத்தோடு அணைத்துக்கொள்.

"உன் மனம் எப்படியோ அதுபோலவே நீ இருப்பாய். மனம் தன் சுயாதீனத்தை யிழந்தால், நீயும் உன் சுயாதீனத்தை யிழக்கிறாய். மனம் சுவதந்திரமுள்ளதாயிருந்தால், நீயும் சுவதந்திரனாகிறாய். மனமானது, வண்ணானிடமிருந்து அப்பொழுதுதான் சலவைபண்ணிவந்த வெள்ளை வஸ்திரத்திற்குச் சமானமானது. இந்த வெள்ளைவஸ்திரத்தை நீ உனக்கு இஷ்டமான வர்ணத்தில்—சிவப்பு, மஞ்சள், ஊதா, பச்சை முதலானவற்றில் எந்த வர்ணம் வேண்டுமானாலும் அதில் தோய்க்கலாம். நீ ஆங்கில பாஷையைப் படித்தால், உனக்குத் தெரியாமலே ஆங்கிலத்தில் பேசுவாய். (யாவரும் சிரித்தல்.) பூட்ஸ் போட்டுக்கொள்வாய்; சிட்டி (Wistle)அடித்து ஊதுவாய்; உண்மையில் நீ இங்கிலாந்து தேசத்தில் பிறந்தவனைப்போலவே நடந்துகொள்ளப் பார்ப்பாய். ஸம்ஸ்கிருதம் படிக்கும் பண்டிதன் எப்பொழுதும் சுலோகங்களையே மேற்கோளாக எடுத்துக்

காட்டிக்கொண்டிருப்பான். மனம் கெட்ட ஸஹவாஸத்தில் பழகினால் அதன் வர்ணமும் அவ்விதமே மாறி, அதற்குத் தகுந்தபடியே பேச்சும், நினைவும் மாறும். பக்தர்களின் நடுவிலிருந்தால் மனம் பகவானைத் தியானிக்கவும் பகவானைப்பற்றியே பேசவும் செய்யும்.

"மனமே எல்லாவற்றிற்கும் காரணம். மனம் எந்தவஸ்துக்களின் மத்தியில் உஜ்ஜீவித்து வேலை செய்கிறதோ, அதற்குத் தகுந்தபடி அதன் சுபாவத்தை மாற்றிக்கொள்ளும். மனைவியிடமிருக்கும் பிரியம் ஒரு விதம்; குழந்தையினிடமிருக்கும் அன்பு முற்றிலும் வேறுவிதமானது. ஒருவன் தன் மனைவியை ஒரு பக்கம், குழந்தையை ஒருபக்கம் வைத்துக்கொண்டிருக்கிறான். இருவருடனும் கொஞ்சிக் குலாவுகிறான்; என்றாலும் வெவ்வேறு விதமான பிரியத்தோடேதான்."

## கிறிஸ்தவர்களுக்கும் பிரம்மஸமாஜத்தவர்களுக்கும் உபதேசம்

பகவான் (பிரம்மஸமாஜத்தவர்களை நோக்கி):— பந்தம், மோக்ஷம் இரண்டும் மனதைப் பொறுத்தவை. முக்தன் நான்; உலகத்திலிருந்தபோதிலும், கானகத்திலிருந்தபோதிலும், நான் பந்தத்தில் கட்டுப்பட்டவனல்ல. நான் கடவுளின் குழந்தை; அரசர்களுக்கரசனும் கடவுளின் பிள்ளை. என்னைப்பந்தப்படுத்துவதற்கு யாரிருக்கிறார்கள் ?

"உன்னை ஒரு பாம்பு கடித்தால், 'விஷமில்லை, விஷமில்லை' என்று சொல்லிக்கொண்டு உன் மனதைச்

தியை உபயோகிப்பது, விஷத்தை விலக்குவதற்கு ஓர் வழி. அதுபோலவே 'நான் பந்தத்தில் கட்டுப்பட்டவனல்லன்; நான் முக்தன்' என்று சொல்லி உன் மனோசக்தியை உபயோகப்படுத்துவாயானால் நீ முக்தனேயாகிறாய்.

"ஒரு சமயம், கிறிஸ்தவர்கள் எழுதின புஸ்தகமொன்றை என்கையில் கொடுத்தார்கள். நான் அதைப் படித்து அர்த்தம் சொல்லும்படியாகக் கேட்டேன். அதில், ஆரம்பமுதல் கடைசிவரையில், 'பாபம், பாபம்' என்ற விஷயத்தைத் தவிர வேறொன்றும் எழுதப்பட் டிருக்கவில்லை.

(கேசவரை நோக்கி) "பிரம்ம ஸமாஜத்தவர்களும், பாபத்தையும் பாபிகளையும்பற்றியே பேசுகிறார்கள். 'நான் பந்தத்தில் கட்டுப்பட்டிருக்கிறேன்' என்று ஓயாமல் சொல்லிக்கொள்ளும் முட்டாள் ஒருவன் நிச்சயமாக முடிவில் தானாகவே பந்தத்தில் கட்டுப்படுகிறான். எந்த மதியீனன் 'நான் பாபி, நான் பாபி' என்று சொல்லுகிறானோ அவன் பாபியாகவே ஆய்விடுகிறான்.

"ஈசுவர நாமத்தைச் சிரத்தையுடன் ஸ்மரித்தால் பாபியும் மோக்ஷமடைவான். 'ஏன்! நான் ஈசுவர நாம சங்கீர்த்தனம் செய்யவில்லையா? ஏன் இன்னும் பாபியாயிருக்கவேண்டும்? ஏன் இன்னும் பந்தத்திலிருக்கவேண்டும்?' என்பவை கடவுளிடத்தில் உள்ள பக்தியினால் எழும் வார்த்தைகள். கிருஷ்ணகிஷோர் ஒரேமுகமான பக்தியுடன் கடவுளை வணங்கி வருபவன். வைதிகப் பிராம்மணசிரேஷ்டன். அவன் பிருந்தாவனத்திற்கு

யாத்திரைபோனான். ஒருநாள், அநேக ஆலயங்களுக்குப் போய்த் தரிசனம் செய்துவருகையில், அவனுக்கு மிகவும் தாகமாயிருந்தது. ஒரு கிணற்றருகில் ஒருவன் நின்றுகொண்டிருப்பதைப்பார்த்து, அவ்விடம்சென்று, 'அப்பா ! எனக்குக் கொஞ்சம் ஜலம் சேந்திக் கொடுக்கிறாயா ? நீ என்ன ஜாதி ?' என்றுகேட்டான். அதற்கு அம்மனிதன், 'ஸ்வாமி ! நான் தாழ்ந்த ஜாதி; சக்கிலியன்; என்செய்வேன்' என்றான். கிருஷ்ணகிஷோர், 'அதைப்பற்றி அக்கரையில்லை; கடவுள் நாமத்தைச் சொல்; 'சிவ சிவ என்று உச்சரித்துக்கொண்டே ஜலமெடுத்துக்கொடு' என்றான்.

''கடவுள் நாமத்தை உச்சரி. அதையே நம்பியிரு. உன் சரீரம் மனம், ஆத்மா எல்லாம் சுத்தமாய்விடும்.

''உன்வாழ்நாள்முழுவதும் ஏன் பாபத்தையும், நரகத்தையும்பற்றியே பேசவேண்டும்? நீ கடவுளின் திருநாமத்தைப் பக்தியுடன் உச்சரி ; 'ஏ ஈசா ! செய்யத் தகாதவைகளை நான் செய்திருக்கிறேன். செய்ய வேண்டியவைகளைச் செய்யாமல் விட்டுவிட்டேன். பிரபு! என் பிழையைப் பொறுத்தருளவேண்டும் !' என்று ஒரேதரம் சொல் ; சகலபாபமும் உன்னை விட்டு அகலும்.''

பகவான் பாடுகிறார் :—

### ஈசுவர நாமத்தின் மஹிமை

''என் தாயே! உன் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு மாத்திரம் நான் மரணமடைய அருள்புரிவாயாக. அப்பொழுது எளியோனை இந்த உன் குழந்தையை நீ ரட்சிக்கிறாயா, இல்லையா என்று பார்க்கலாம் !

"நான் கோஹத்தி, பிரம்மஹத்தி, ஸ்திரீஹத்தி, மதுபானம், சிசுஹத்தி இவைகளில் எதைச் செய்திருந்தாலும் எனக்குக் கவலையில்லை. இக்கொடிய பாபங்களெல்லாமிருந்தபோதிலும், உன் ஆக்கினைப்படி சிருஷ்டி செய்கிற பிரம்மாவின் பதத்தையும் எளிதில் அடையும்படியான சக்தி என்னிட மிருக்கின்றது."

"நான் என் ஜகன்மாதாவினிடம் வேண்டிக்கொண்டது தூய்மையான பக்திமட்டிலுமே. புஷ்பங்களெடுத்துக் கைகூப்பி, நான் 'அம்மா! களங்கமற்ற பக்தியிருக்கும்படி எனக்குக் கிருபை செய். இதோ பாபம் புண்ணியம் இரண்டையும் உன்பாதத்தில் சமர்ப்பிக்கிறேன். இவ்விரண்டையுமெடுத்துக்கொள். தாயே! இதோ அறிவு அறிவின்மை இவ்விரண்டையும் நீ யெடுத்துக்கொள். எனக்கு பக்திமட்டிலும் இருக்கும்படியாகக் கிருபைசெய். இதோ ஒரு பக்கம் சுசியும், மற்றொரு பக்கம் அசுசியுமிருக்கின்றன. நான் இவ்விரண்டையும் வேண்டேன். இதோபாபமும், புண்ணியமும் இருக்கின்றன. இவ்விரண்டையும் உன்பாதத்தில் சமர்ப்பிக்கிறேன். என் தாயே! எனக்கு உன்னிடம் பக்தியும் அன்பும் மாத்திரம் இருக்கும்படியாகக் கிருபை செய்' என்று பிரார்த்தித்தேன்.

(பிரம்மோ பக்தர்களை நோக்கி) "ராமப்பிரஸாதருடைய பாடலொன்றைக் கேளுங்கள்" என்று கூறி மேலும் பாடுகிறார்:—

## என் ஜகன்மாதாவும் மனத்திற்குப் போதனையும்

"ஓ, மனமே! வெளியில் உலாவப் போவோம் வா. என் ஜகன்மாதாவாகிய கற்பக விருக்ஷத்தினடியில் சென்று, தா

மார்த்த காம மோக்ஷங்களான நான்கு பழங்களைப் பறிப் போம்.

"ஓ, மனமே நீ கற்பக விருக்ஷத்திற்குச் செல்லுகையில், உன் மனைவிகளிருவரில் நிவிருத்தியை உன்னோடு அழைத்துச் செல். நித்தியா நித்தியங்களை நன்றாய்ப் பகுத்தறியும் அவள் பிள்ளையாகிய விவேகனிடம் பகவானைப் பற்றிக் கேள்.

"நீ சுசி, அசுசி இவ்விரண்டையும் சமமாகப்பாவித்து, ஸாதுக்களுடைய நிழலில் எப்பொழுது தங்கப்போகிறாய்? இவ்விரு பத்தினிகளுக்குள் பார்க்கும் வித்தியாசம் எப்பொழுது நசிக்கிறதோ அப்பொழுது நீ என் ஜகன் மாதாவைப் பார்ப்பாய்.

"நீ உன் பெற்றோராகிய அவித்தையையும், அஹங்காரத்தையும் விலக்கு. எனதென்னும் மோஹம் உன்னைத் தன் வளையில் இழுக்க யத்தனம் செய்தால், நீ க்ஷமையாகிய தூணைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்.

"நல்வினை தீவினைப்பயனான தர்மாதர்மங்களாகிய இரு ஆடுகளையும், ஓர் ஸ்தம்பத்தில் கட்டிவிடு. அவைகளடங்காமலிருந்தால், பகவானது பலிபீடத்திற் கெதிரில், ஞானமாகிய கத்தியினால் அவைகளை வெட்டிப் பலியிடு.

"ஓ, மனமே? நீ உன் முதல் மனைவியாகிய பிரவிருத்தியின் மக்களைக் கிட்ட வரவொட்டாமல் எச்சரிக்கை செய். அவர்கள் உனக்குக் கீழ்ப்படியாவிட்டால், ஞானமாகிய சமுத்திரத்தில் அவர்களை ஆழ்த்திவிடு.

"நீ இவ்வாறு நடப்பாயாகில், யமனுக்குத் திருப்தியாகப் பதில் சொல்லமுடியும். நானும் உன்னை அப்பொழுது 'என் குழந்தாய்,' 'என் கண்மணி,' 'என் குலதெய்வமே' என்றும், இன்னும் மற்ற செல்வப்பெயர்களாலும் அழைப்

பேன். அப்பொழுதுதான் நீ என்மனதுக்கேற்ற மனமா யிருப்பாய்."

"கிரஹஸ்தனுக்கும் கடவுளைப் பார்க்கும்படியான பாக்கியம் கிடைக்கலாம். ராஜரிஷியான ஜனகமகாராஜா வின் விஷயம் அப்படி. ஒரு பெரிய பக்தர் இவ்வுலகம் கனவினால் ஆக்கப்பட்டதென்று சொன்னார். ஆனால் மற்றுமோர் பெரிய பக்தனான ராமப்பிரஸாதின் அபிப் பிராயப்படி, அப்படிச் சொல்வது முழுவதும் உண்மை யாகாது. ஒருவன் உலகத்திலிருந்தபோதிலும், அதில் பற்றற்றிருக்கலாம்."

பகவான் மறுபடியும் பாடுகிறார்:—

"வாஸ்தவத்தில் இவ்வுலகம் ஆனந்தமயமானது; நான் உண்டு, களித்து சுகிக்கிறேன்.

"ராஜ ரிஷியாகிய ஜனகர், உலகைத் துறந்த சந்நி யாசியைவிட எவ்விதத்திலாவது தாழ்ந்தவரா ?

"இல்லவே யில்லை; அவரொருவரே சரீரத்தையும் ஆத்மாவையும் சமமாகப் பாராட்டினவர். பாலைக் குடித் துக்கொண்டே பிரம்மத்தையும் அறிந்தார். (யாவரும் சிரித்தல்.)

"ஆனால் ஒருவன் ஜனகராஜாவின் நிலைமைக்குத் திடீரென்று குதித்து வந்துவிடமுடியாது. ஜனக மகா ராஜா இவ்வுலக சந்தடியிலிருந்து ஒதுங்கி, ஏகாந்தத்தி லிருந்து அனேக வருஷகாலம் பக்தியை அப்பியசித்து வந்தார். ஆதலால் ஒவ்வொருவரும் சிறிதுகாலம் ஏகாந் தத்திலிருக்கவேண்டியது மிகவும் அவசியம். ஒருவன் மனித சஞ்சாரமற்ற விடத்திற்குச்சென்று ஏகாந்தத்தி

யிருந்து மூன்றுநாள் கடவுளைக்குறித்து திடமாகக் கதறுவானாகில், அது சிரேஷ்டமானதாகும். அவ்விதம் ஒருநாள் கழித்தாலே மிகுந்த லாபம் உண்டு. ஜனங்கள் மனைவி மக்களின் பொருட்டுக் குடம் குடமாகக் கண்ணீர்விட்டுக் கதறியழத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் பகவான் பொருட்டு யார் கதறுகிறார்கள்? சமுசாரிகள் பகவானை யடையும்பொருட்டு இடைக்கிடை ஏகாந்தத்திற் சென்றிருப்பார்களானால், அதுவே அவர்களுக்கு அளவற்ற நன்மையைக் கொடுக்கும்.

"ஒரு முமுக்ஷுவின் (ஆத்மஞானத்தை நாடுபவன்) முயற்சியின் முதற்படியில், ஆயிரக்கணக்கான இடையூறுகளேற்படுகின்றன. அவ்விடையூறுகளின் காரணம் உலகமும், அதன் விஷயங்களினாசைகளும். பாதையோரத்தில் நடப்பட்ட செடியை ஆடுமாடுகள் தின்னாமலிருக்கும்பொருட்டு அதற்கு ஒரு வேலி கட்ட வேண்டியிருக்கிறது. செடி சிறியதாயும் மிருதுவாயுமிருக்கும் வரையில் வேலி யவசியம்; அது வளர்ந்து, அடிமரமும் வேர்களும் பெரிதாகவும் பலமாகவுமான பிறகு, வேலி அவசியமில்லை. அப்பொழுது ஒரு யானையை அம்மரத்தில் கட்டினபோதிலும் அதற்குத் தீங்குண்டாவதில்லை.

"உலகப்பற்றுள்ளவனுடைய வியாதியோ மிகவும் கடுமையானது. அவனுடைய அவயவங்களும், அவற்றின் தொழில்களும் முற்றிலும் ஒழுங்குதவறி யிருக்கின்றன. அவன் தன் சொந்தப்பிதாவாகிய ஈசுவரனை மறந்து பெண்ணாசை பொன்னாசைகளைக் கைப்பற்றியிருக்கிறான். அவனுடைய கஷ்டமெல்லாம் இவைகளி

னால் வந்ததே. அவனுக்கு அமைதியும், ஏகாந்தமும் அவசியம்.

"சந்நிபாத ஜ்வரமுள்ள ஒருவனைப் படுக்க வைத்திருக்கும் அறையில், பானை நிரம்ப ஜலத்தையும் ருசியுள்ள ஊறுகாய்களையும் வைக்கலாமா? அம்மனிதனைச் சொஸ்தப்படுத்த வேண்டுமென்ற எண்ண மிருக்கும் பக்ஷத்தில், ஊறுகாய்களையும், ஜலத்தையும் அப்புறப் படுத்த முடியாவிட்டால், அவனை அவ்விடத்தி னின்றும் வேறிடத்திற்குக் கொண்டுபோகவேண்டும்.

"உலகப்பற்றுள்ள ஸம்ஸாரி அப்படிப்பட்ட வியாதியஸ்தன். உலக விஷயங்கள் தண்ணீர்ப்பானை; அவைகளை அனுபவிக்கவேண்டுமென்னும் ஆசை அந்நோயாளியின் தாகம். ஊறுகாயை நினைக்கும்பொழுதே வாயில் ஜலம் ஊறுகிறது; அதை நம்மெதிரில் வைத்திருக்க வேண்டுமென்ற அவசியங்கூட இல்லை. காமஇச்சையுடன் பார்க்கப்படும் ஸ்திரீகள் இவ்வூறுகாய்க்குச் சமானம். ஆதலால், ஏகாந்தந்தான் அதற்குச் சரியான ஔஷதம்.

"முதலில் எது நித்யம், எது அநித்தியம் என்ற அறிவுவேண்டும்; இரண்டாவது, இவ்வுலகில் பற்றுதலில்லாமல் வாழ்வதெப்படி யென்றறிய வேண்டும். விவேக வைராக்கியம் என்னும் இவ்விரண்டும் இருந்தால் இல்வாழ்க்கையி லிருக்கலாம். ஸம்ஸார மென்னும் ஸாகரத்தில், காமக்குரோத முதலான முதலைகளிருக்கின்றன அச்சமுத்திரத்தில் நீ ஸ்நானம் செய்யவிரும்பினால், சரீரத்தில் மஞ்சளை யரைத்துப் பூசிக்கொள். அப்பொழுது முதலைகளால் உனக்கு ஒரு தீங்கும் நேரிடாது. நித்யாநித்திய வஸ்து விவேக

மும், வைராக்கியமும் மஞ்சள். கடவுள் ஒருவரே நித்தியம்—மெய்; இவ்வுலகம் அநித்தியம்—பொய்.

"இத்துடன் இன்னொன்றும் வேண்டும்; அதாவது, பகவானிடம் அத்தியந்த பக்தி. பிருந்தாவனத்து கோபிகள் அத்தகைய பக்தியுடையவர்கள். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம் அவர்கள் அத்தியந்த பிரேமையுட னிருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடம் அவர்களுக்கிருந்த அளவற்ற அன்பைக் காட்டுகின்ற பாடலொன்றைக் கேளுங்கள்."

(பாடல்)

கடவுள் வேட்கை

"ஆ! அதோ அவ்வனத்தினின்றும் புல்லாங்குழலின் இனிய கானம் வருகிறது. நான் அவ்விடம் போகவேண்டும்.

"சியாமளஸுந்தராங்களுகிய என் காதலன், எனக்காக அவ்விடம் காத்துக்கொண்டிருக்கிறுன்!

"ஆ! என் பிரிய சகிகாள்! நீங்களும் கூட வருகிறீர்களா, இல்லையா, சொல்லுங்கள்.

"என் தோழிகாள்! அவன் பெயர் உங்களுக்கு வெறும் சப்தமாத்திரமான வார்த்தை மட்டும் போலும்!

"ஆனல் எனக்கோ அவன் உயிர் நிலை. ஆ! என் பிராணனும், ஹிருதயமும், ஆத்மாவும் அவனே."

இப்பாடலைப் பாடும்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ண தேவருடைய கண்களினின்றும் நீர் பெருகிற்று. அவர் உருக்கத்துடன் கேசவர் முதலிய பக்தர்களைப் பார்த்து, "நீங்கள் பிரம்ம ஸமாஜத்தவர்கள்; கடவுள் அரூபியென்றே நம்புகிறீர்கள்; பகவானுடைய அவதாரங்

களில் உங்களுக்கு நம்பிக்கையில்லை. ஸரி, அதனால் பாதகமில்லை. நீங்கள் ராதையையும் ஸ்ரீகிருஷ்ணனையும் இன்னும் பிறரையும் பகவானுடைய அவதாரங்களாகக் கருதவேண்டிய அவசியமில்லை. ஆனால், ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் கோபிகளுக்கிருந்த பற்றுதல், அத்தியந்தப் பிரேமை, அவனுக்காக அவர்கள் மனங்கசிந்துருகியது ஆகிய குண விசேஷங்களை நீங்களும் கைக்கொள்ளலாம்.

"இப்படிக் கசிந்துருகுவதுதான் பகவானை அடைவதற்கு அதாவது ஈசுவர தரிசனத்துக் கடுத்தபடி".

பிரிவு. 4

## கடவுள் ஒருவரே குரு

இப்பொழுது ஆற்றில் தண்ணீர் வடியும் சமயம். கப்பல் விரைவாகக் கல்கத்தாவை நோக்கிச் செல்கிறது. ஹௌரா பாலம் தாண்டி, கல்கத்தாவை ஒட்டினாற் போலவிருக்கும் உத்தியானவனத்திற்கு (Botanical Garden) அருகில் வந்துவிட்டது. இன்னும் சற்று தூரம் போகும்படியாகக் கப்பற்றலைவனுக்கு உத்தர விடப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வார்த்தைகளையும், நிலைமையையும் கவனித்துக் கொண்டிருந்தவர்களுக்கு நதியில் கப்பல் எவ்வளவு தூரம் வந்ததென்று தெரியவில்லை; அவர்கள் முழுமனதையும் செலுத்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்! நாழிகையோ தூரமோ இவ்வளவு ஆயிற்றென்று அவர்களுக்குத் தெரியவில்லை.

கேசவர், பகவானுக்குப் பொரியும், தேங்காயும் கொடுத்தார்; அவ்விடமிருந்தவர்க ளெல்லோரையும் எடுத்துக்கொள்ளும்படி வேண்ட, அவர்கள் தங்கள் வஸ்திரங்களில் கொஞ்சங் கொஞ்சம் வாங்கிக்கொண்டு, சாப்பிட்டு மிக்க ஆனந்தமாயிருப்பதைப் பார்த்தால், அக்கப்பலில் ஏதோ ஒரு உற்சவம் கொண்டாடப் பட்டதைப்போல் தோன்றிற்று.

விஜயர், கேசவர் இருவரும் ஒருவருக்கொருவர் விரஸமாயிருப்பதாக பகவான் அறிந்தார். இவர்க

ளுடைய மனஸ்தாபங்களைச் சரிப்படுத்த வேண்டுமென்பது பகவான் கருத்து. பூமியில், மனிதர்களுக்குள் சமாதானமும், அந்நியோந்நியமும் விளங்கச் செய்வது அவருடைய அவதாரத்தின் கருத்தன்றோ?

பகவான் (கேசவரைப்பார்த்து):—அப்பா, இதோ விஜயன் இருக்கிறான். உங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் வித்தியாசங்களைப்பற்றியும், வாக்கு வாதங்களைப்பற்றியும் நீங்கள் தொந்திரவுபடுத்திக் கொள்ளவேண்டாம். ஸ்ரீ ராமனுக்கும் சிவனுக்கும் கூட சண்டை நடந்திருக்கிறது. (யாவரும் சிரித்தல்)

"சிவன் ஸ்ரீராமனுடைய குரு. அவர்கள் சிறிது நேரம் சண்டையிட்டுப் பிறகு சமாதானமாகி முன் போலவே அத்தியந்த சினேகிதரானார்கள். ஆனால் அந்தச் சண்டை அவர்களுடைய பரிவாரங்களுக்குள் நடந்து கொண்டே யிருந்தது. பூதங்களின் கூக்குரலும், வானரர்களின் கீச்சிடுதலும் சுலபத்திலடக்க முடியவில்லை. நீங்களும் திரும்ப நண்பர்களாய் விடுவீர்கள். ஆனால், உங்கள் சிஷ்யர்களோ மேலும் சண்டையிடுவார்கள். (யாவரும் சிரித்தல்)

"விஜயன் உனக்கு ஆப்த பந்து. இவ்வித்தியாசங்கள் இருக்கத்தான் இருக்கும். பிதாவுக்கும் மகனுக்கும் கூட மனஸ்தாப மேற்படலாம். உதாரணமாக, ஸ்ரீராமனையும், அவர் குமாரர்களான லவ குசர்களையும் பார். இன்னும், தாயும் மகளும் செவ்வாய்க்கிழமை விருதம் அனுஷ்டிக்கையில், ஒருத்தி க்ஷேமத்தை மற்றொருத்தி கோரினவளாயிருந்த போதிலும், அவளவள் தனித்தனியே விருதம் அனுஷ்டிப்பதைப் பார்த்

தால், ஒருத்திக்கொருத்தி விரோதம் பாராட்டுகிறது போல் தோற்றலாம்.

"அவ்வாறே, கேசவ்! நீ ஒரு ஸமாஜம் ஏற்படுத்தி யிருக்கிறாய். விஜயனும் சொந்தமாக வேறொரு ஸமாஜம் ஏற்படுத்தவேண்டியது தானே? (யாவரும் சிரித்தல்.)

"ஈசுவர சிருஷ்டியில், இம்மாதிரி சண்டைகளுக்கும், வித்தியாசங்களுக்கும் போதுமான இடமிருக்கிறது. ஸாதுக்களைத் தன் பிரேமையினால் உத்தாரணம் செய்ய பகவானே பிருந்தாவனத்தில் அவதரித்திருக்க, அவருடைய காரியத்தில் ஜடிலகுடிலர்கள் ஏன் தடையாக நின்றார்கள் என்ற கேள்வி பிறக்கிறது. ஜடிலகுடிலர்களின் இடையூறுகளில்லாவிடில், பிரேமை ரூபமாயிருக்கும் அவ்வவதார புருஷனுடைய லீலைகள் ஒளியுற்று ஓங்காது மங்கியிருக்குமென்று நான் நினைக்கிறேன்! (யாவரும் சிரிக்கின்றனர்.) ஒரு காரியத்தில் தடையேற்படுமாகில், அதுவே அக்காரியத்தைச் சுவையுடைய தாக்குகின்றது. ஸ்ரீமத் ராமானுஜர் விசிஷ்டாத்துவைதி; அவரது குருவோ சுத்த அத்துவைதி. எனவே அவர்களுக்குள்ளும் வித்தியாசமிருந்தது. குருவும் சிஷ்யனும் ஒருவருடனொருவர் விவாதம் செய்தனர். இவ்விதம் ஏற்படுவது ஸகஜம். இருந்த போதிலும் சிஷ்யன் குருவுக்குச் சொந்தமன்றோ!"

யாவரும் சந்தோஷமடைகின்றனர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேசவரைப்பார்த்து மேலும் சொல்லுகிறார்: "உன் சிஷ்யர்கள் உன்னிடமிருந்து விலகிக்கொள்வது

ஆச்சரியமன்று. சிஷ்யர்களாகச் சேர்த்துக் கொள்வ தற்குமுன்னால் அவர்களின் ஸ்வபாவத்தை நீ நன்கு ஆராய்ந்து பார்ப்பதில்லை.

"மனிதர்கள் உருவத்திலும், தோற்றத்திலும் ஒரே மாதிரியாகவே யிருக்கிறார்கள். ஆயினும், அவர்களுடைய ஸ்வபாவ குணங்களில் வித்தியாசங்க ளிருக்கின்றன. சிலர், பகவானை யடையச்செய்யும் வழியில் சேர்க்கக்கூடிய ஸத்வகுணமுடையவர்களாயும், சிலர், பலவேலைகளில் ஈடு படும்படிசெய்யும் ரஜோ குணமுடையவர்களாயும், மற்றும் சிலர், அஞ்ஞானத் திற்குக் காரணமாயிருக்கும் தமோகுணமுடையவர் களாயு மிருக்கிறார்கள். மோதகங்கள் (கொழுக்கட்டை கள்) பார்வைக்கு ரூபத்தில் ஒரே மாதிரியாக விருந்த போதிலும், அவற்றிற்குள்ளிருக்கும் வஸ்துக்களில் வித்தியாசங்களிருக்கின்றன. சிலவற்றில் திரட்டிய பாலும், மற்றும் சிலவற்றில் தேங்காயும் சர்க்கரையும், வேறு சிலவற்றில் தித்திப்பற்ற உளுந்தும் உள்ளே வைக்கப்பட்டிருக்கின்றன. (யாவரும் சிரித்தல்)

"நினைத்தல், உணருதல் முதலியவற்றில் என்னை ஜகன்மாதா வேறு விதமாயிருக்கும்படி செய்திருக் கிறாள். ஜகன்மாதாவின் குழந்தையாகிய எனக்கு உண்ணவும், விளையாடவுந்தான் தெரியும். மற்றவைக ளெல்லாம் அவளறிந்து செய்யவேண்டும்.

"மூன்று வார்த்தைகள் என்னைச் சுறுக்கென்று தைக்கின்றன. அவையாவன: குரு, கர்த்தா, பிதா. நான் கர்த்தாவன்று; என் ஜகதீசுவரியே கர்த்தா; நான் அவள் கைக்கருவி. ஸம்ஸார வாழ்விலிருந்து

குழந்தைகளுக்குப் பிதாவாயிருக்க எனக்குப் பிரிய மில்லை. ஈசுவரனிடமே என்னுடைய காலத்தையெல் லாம் செலுத்தி, ஒரு மனித குடும்பத்தில் மாத்திர மல்லாமல், சகல ஜீவராசி ரூபங்களிலுமிருக்கிற அவ னுக்குத் தொண்டு புரிவதிலேயே எனக்குப் பிரியம். இன்னும் கடவுள் ஒருவரே நம்முடையகுரு.

"அவரே நமக்கு உபதேசம் செய்பவர். நானோ, தாயைக் காணவிட்டால், தன் துர்ப்பலத்தை யறிந்து அழும் குழந்தைபோல விருக்கிறேன். குரு ஸ்தானம் வகிக்க மனிதர்கள் ஆயிரக்கணக்காகக் கிடைப்பார்கள். ஒவ்வொருவனும் குருவாயிருக்கவே ஆவல் கொள்ளு கிறான். சிஷ்யர்களா யிருக்க விரும்புபவர்கள் எத் தனை பேர்?

"குருவாயிருந்து சிஷ்யனுக்கு உபதேசம் செய் வது மிகக்கடினம். குரு ஈசுவரனைப் பார்த்திருந்தால், உபதேசம் செய்ய அவனிடமிருந்து ஆக்ஞை பெற் றிருந்தால், அது விஷயம் வேறு. அவ்விதம் ஆக்ஞை பெற்றவர்கள் நாரதர், சுகதேவர், சங்கராசார்யர் முதலியவர்கள்.

"நீ அப்படி கடவுளின் ஆக்ஞை பெறாதவனாயிருந் தால், உன் வார்த்தையைச் செவிகொடுத்துக் கேட்ப வர் யார்? கல்கத்தா ஜனங்களுக்கு எப்போதும் நூதன விஷயங்களிலேயே பிரீதி யென்பது உனக்குத்தெரிந்த விஷயமே. அடுப்பின் மீது பாத்திரத்தில் வைத்திருக் கும் பால், நெருப்பு எரிந்துகொண்டிருக்கும் பொழுது பொங்கி வருகிறது. ஆனால்,நெருப்பை அவித்தவுடனே பொங்குதல் நின்றுவிடுகிறது. கல்கத்தா ஜனங்

களுக்கு நூதன அனுபவத்தில் பிரீதி வெகு அதிகம். அவர்கள் ஓரிடத்தில் கிணறு வெட்ட ஆரம்பித்து, அவ்விடம் பூமி வலுவாயும், கடினமாயு மிருக்குமாகில், அவ்விடத்தை விட்டு விடுவார்கள். மற்றோரிடத்தில் வெட்ட ஆரம்பித்து அவ்விடம் மணலாக இருக்கக் கண்டால் அதை நிறுத்தி வேறிடம் பார்ப்பார்கள். ஜனங்களுடையபோக்கு இவ்விதம் இருக்கிறது. அவர்களுடைய மதிப்பு உபயோக மற்றது.

"இன்னும் சிலர் தாங்கள் கொண்டிருக்கும் கொள்கைகளையே ஈசுவராக்ஞைக ளென்று நினைக்கிறார்கள். அத்தகைய அபிப்பிராயம் பிசகானது. ஒருவன் கடவுளைப் பார்த்து, அவருடன் பேசினபிறகுதான் அவருடைய ஆதேசம் பெறலாமே யல்லது அதுவரையில் கூடாது. பகவத் ஆக்ஞை! அதற்கு என்ன அற்புத மஹிமை யிருக்கவேண்டும்! அதனால் ஒரு மலையையும் நகர்த்திவிடலாம். கடவுளிடமிருந்து நேரில் ஆதேசம் பெறாத ஒரு உபந்நியாஸமானது சாரமற்றதே. ஜனங்கள் உபந்நியாசத்தில் கவனம் செலுத்துவது சிறிதுநேரந்தான். பிறகு, முழுதும் அவர்கள் நினைவிலிருந்து நழுவிவிடும். அப்படி உபதேசித்ததை வாழ்க்கையில் அனுஸரிப்பதோ, இன்னும் மிகதுர்லபம்.

"காமர்புகூரில் ஹலதார் புகூர் என்ற ஒரு குளமிருக்கிறது. அக்குளத்தைச் சுற்றிலும் ஜனங்கள் அசுத்தப்படுத்தி வந்தார்கள். அக்குளத்தில் காலையில் ஸ்நானம் செய்ய வந்தவர்கள், அவ்விதம் அசுத்தம் செய்தவர்களை மிகவும் கோபத்துடன் உரத்தகுரலில் வைதார்கள். ஆனால் ஒன்றும் பிரயோஜனப்படவில்லை.

மறுநாளும் அவவாறே அசுத்தம் செய்திருந்தார்கள். அதன் பிறகு அவர்கள் முனிசிபல் அதிகாரிகளுக்கு அறிவித்தார்கள். வில்லையணிந்த சேவகன் ஒருவன் அதை விசாரிக்கவந்தான். அவன், அங்கிருந்தவர்களிடம், 'இனிமேல் அசுத்தம் செய்யக்கூடாது' என்று எழுதிக்கொண்டுவந்திருந்த நோட்டீஸ் ஒன்றைப் படித்தான். என்ன ஆச்சரியம்! உடனே அசுத்தம் செய்வது நின்றுவிட்டது. (யாவரும் சிரித்தல்)

"பகவத் விஷயங்களைப் போதனை செய்வதற்குக் கடவுள் ஆக்ஞையொன்றே அத்தியாவசியம். அஃதின்றி ஒருவன் மற்றவர்களுக்குப் போதனை செய்வதோ கேலிக்கு இடம். ஒருவன் தானே யொன்றும் அறியாமல் மற்றொருவனுக்குப் போதனை செய்ய நினைப்பது குருடனுக்குக் குருடன் வழிகாட்டுவது போலாம். அதனால் தீமை யேற்படுகிறதே தவிர நன்மை யேற்படமாட்டாது. நீ கடவுளை யறிந்தபிறகுதான் மற்றவர்களுடைய ஆத்ம வியாதிகளை அறிந்து சொல்லமுடியும்.

"கடவுளிடமிருந்து நேரே ஆதேசம் பெறவேண்டும். அப்படி யில்லாவிடில், 'நான் குரு; நீங்கள் எனது சிஷ்யர்கள்' என்று சொல்வது அகம்பாவமாகும். இவ்வகம்பாவம் அஞ்ஞானத்தினாலுண்டானதாம். ஈசுவரன் ஒருவனே ஜகத்கர்த்தாவென்றும், நாம் அவனுடைய கேவலம் கருவியென்றும் ஒருவன் அறிவானாகில், அவன் இவ்வுலகிலேயே பந்தத்திலிருந்து விடுபடுகிறான். எல்லாக்கஷ்டங்களும், மனோசாந்தமின்மையும் 'நான் கர்த்தா, நான் பிரபு' என்னும் எண்ணத்தினாலுண்டாகின்றன."

கர்மத்தைப்பற்றி மேல் நாட்டாரது அபிப்பிராயம்

*(கர்மம் வாழ்நாளின் முடிவா? அல்லது, முடிவை அடைய ஒரு ஸாதனமா?)*

ஸ்ரீராமகிருஷ்ணர்:—*நீங்கள் உலகத்திற்கு நன்மை செய்வதைப்பற்றி சுலபமாகப் பேசுகிறீர்கள். நீங்கள் நன்மை செய்யவேண்டுமென்று விரும்புகிற இவ்வுலகம் குடுக்கையிலடங்கியதா? நிற்க, உலகிற்கு நன்மை செய்வதற்கு நீங்கள் யார் சொல்லுங்கள்? முதலில் பக்தி ஸாதனைகளைச் செய்து பகவானைப் பாருங்கள்; அப்பொழுது ஞானம் உதித்து, ஸித்திகளும்கை கூடும்; பிறகு நன்மை செய்வதைப்பற்றிப் பேசலாம். அது வரையில் கூடாது.*

ஒரு பிரம்மோ பக்தன் :—*ஸ்வாமி! பகவானைப் பார்க்கும் வரையில், நாங்கள் எல்லாக் காரியங்களையும் விட்டுவிட வேண்டுமென்பது தங்கள் கருத்தா?*

பகவான் :—*இல்லை, எல்லாக் காரியங்களையும் நீங்கள் ஏன் விடவேண்டும்? தியானம், பஜனை, கடவுளின் திவ்விய நாம ஸ்மரணை முதலிய பக்திமார்க்க ஸாதனைகளை நீங்கள் செய்யவேண்டியது அவசியம்.*

பிரம்மோ :—*ஆயின், உலக ஸம்பந்தமான கிரியைகளை நாங்கள் விலக்கவேண்டு மென்பது தங்கள் கருத்தோ?*

பகவான் :—*ஆம்; ஆனால் அதுவும் செய்யலாம். இவ்வுலகிலிருப்பதற்கு எவ்வளவு கிரியை அத்தியாவசியமோ, அவ்வளவு கிரியையில் மட்டும் உன் புத்தியைச் செலுத்து. அதோடு உன் கண்களில் நீர் பெருக*

கடவுளை, கருணை செய்யும்படியும், உன் இகபர பலாபேக்ஷையும், தண்டனையின் பயமுமில்லாமல் உன் கடமைகளைச்செய்ய மனவுறுதியைக் கொடுக்கும்படியும் பிரார்த்தி. அவ்விதம் பிரார்த்திக்கும்பொழுது, 'ஏ ஈசா! உலக சம்பந்தப்பட்ட இக்கிரியைகள் தினே தினே எனக்குக் குறையும்படியாக அருள்புரி. ஏனெனில், என் வேலை அதிகமாவதினால் உன்னை மறக்கும்படியாக நேரிடுகிறது. சில சமயங்களில், நான் என் கடமைகளை நிஷ்காமியமாகச் செய்வதாக எண்ணியிருக்க, என்னை அறியாமலே அது காமியமாக முடிந்து நான் ஏமாந்துபோவது எவ்விதம் என்று எனக்கே தெரியவில்லை. நான் பிச்சை யிடுகிறேன்; அந்தோ, என்னைத் தெரியாமலே அது கீர்த்தியைத் தேடச் செய்கிறது' என்று சொல்லிப் பிரார்த்தி.

"சம்புமல்லிக் எல்லாருடைய நன்மையின் பொருட்டு ஆஸ்பத்திரிகள், ஔஷதசாலைகள், பள்ளிக்கூடங்கள், கலாசாலைகள் இவை கட்டுவதையும், சாலைகள் போடுவதையும், கிணறுகள் குளங்கள் வெட்டுவதையும்பற்றிப் பேசினான். அதற்கு நான், 'சரிதான்! ஆனால் நீ மற்றவர்களுக்கு நன்மை செய்யும்போது பற்றற்றுச் செய்தல் வேண்டும். மேலும், உன் கைக்கு வந்த வேலைகளை மாத்திரமே செய்யவேண்டும். அதிலும், அதிக அவசியமான வேலைகளைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். நீயாக வேலைகளை நாடாதே. அதிலும், உன்னால் பராமரிப்பதற்கு முடியுமான வேலைகளுக்குமேல் அதிகமானவைகளை எடுத்துக்கொள்ளாதே. நீ அவ்விதம் செய்தால் கடவுளை மறப்பாய்.

ஜகன்மாதாவாகிய காளியின் சந்நிதிக்குச் செல்; அங்கே தரிசனம் பெறுவதற்கு முன்னால் ஸந்நிதானத்திற்குச் செல்லும் வழியில் நீ தர்மங்களைச் செய்யலாம். ஆனால், தர்மம் செய்வதிலேயே பொழுதுபோகும் வரையிலும் ஈடுபட்டிருந்து விடுவாயானால் ஆலயத்தின் வாயில் மூடப்பட்டுவிடும். அப்பொழுது ஜகன்மாதாவின் தரிசனம் உனக்குக் கிடைக்காது. புத்திசாலிகள், ஆலயத்தின் வாயில்களிலிருக்கும் அளவற்ற கூட்டத்தை விலக்கி உள்ளே சென்று முதலில் ஜகன்மாதாவைத் தரிசிப்பார்கள். அவளைத் தரிசனம் செய்த பிறகு, தானம் செய்வதிலும், நற்கருமங்களிலும் கவனத்தைச்செலுத்தலாம்.

"முதலில் கடவுளையறி; பின்னர் நீ உன் கடமைகளைப்பற்றிப் பேசலாம். தங்கள் கடமைகளைச் செய்பவர்களின் நோக்கம் யாதாயிருக்க வேண்டுமென்று நினைக்கிறாய்? கர்மம் அல்லது ஒருவன் செய்யவேண்டிய கடமையானது ஸாதனமே; கடவுளை அடைவது தான் முடிவு; ஸாதனத்தையே முடிவாக நினைத்துவிட வேண்டாம். ஆகையினால் நான் சம்புவைப் பார்த்து 'அப்பா, நீ கடவுளைத் தரிசித்தாய், அல்லது, கடவுளை உனக்குப் பிரத்தியக்ஷமானாரென்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது நீ அவரிடம், 'பிரபு! நான் ஏராளமான ஆஸ்பத்திரிகளும், ஔஷத சாலைகளும், பள்ளிக்கூடங்களும், கலாசாலைகளும் வைத்து நடத்தும்படியாக அருள்புரி என்று கேட்டுக்கொள்வாய்?' என வினவினேன். (யாவரும் சிரிக்கின்றனர்.) இல்லை; அவைகளெல்லாம் இவ்வுலக நிலையிலிருக்கும் வரையி

னுமே. இவ்வுலக நிலையோ மோக்ஷ நிலையுடன் ஒப்பிட்டால் கொஞ்சமும் நிலையற்றதாகும். உண்மையான பக்தன், 'ஏ ஈசா! உன் பாதாரவிந்தங்கள் எனது இருப்பிடமாயிருக்கவும், உன் திவ்விய சந்நிதானத்தில் நான் எப்பொழுதுமிருக்க எனக்கு சுதந்திரமிருக்கவும், உன்னிடத்தில் எனக்குக் களங்கமற்றதும் உண்மையானதுமான ஆனந்த பக்தி யிருக்கவும் அருள்புரிவாயாக!' என்று பிரார்த்திப்பான்.

"பற்றுதலின்றிக் கர்மம் செய்வது மிகக் கடினம். நமது சாஸ்திரங்களிற் கூறியிருக்கிறபடி எல்லாக் கர்மங்களையும் செய்து முடிப்பது இக்கலியுகத்தில் சாத்தியமானதன்று. இக்கலியுகத்தில் வாழ்வு அன்னத்தில்தான் நிலைத்திருக்கிறது. தர்மமும், கர்மமும் செய்ய அவர்களுக்குச் சாவகாசம் கிடையாது. ஸம்ஸாரமாகிய கொடிய ஜுரத்தினுல் பீடிக்கப்படும் வியாதியஸ்தனுக்கு, பூர்வ வழக்கப்படி நாட்டு வைத்தியனுடைய மெதுவான சிகிச்சை பிரயோஜனப்படாது. நோயாளிக்குக் கதியுமிராது. இந்த யுகத்தில் ஜனங்களுடைய ஆயுளும் சொற்பம்; இக்காலத்து ஜுரமும் சில மணிநேரத்தில் மனிதனைச் சாகடித்து விடுகிறது. தற்காலத்து ஜுரத்துக்கு ஏற்ற மருந்து, டாக்டர் குப்தாவின் ஜுரஹரி என்ற மருந்துதான். இது உடனே பலன் தரும்.

"ஆம் இக்கலியுகத்தில் கடவுளை அடைவதற்கேற்ற ஒரே வழியானது அவனிடம் அன்பு செலுத்தி பக்தியோடிருப்பதும், அவனை நினைந்துருகிப் பிரார்த்தித்து அவனது அனந்த கல்யாண குணங்களையும் திவ்வியத் திருநாமங்களையும் புகழ்ந்து பாடுவதுமே.

"(கேசவர் முதலான பிரம்ம ஸமாஜத்தவர்களை நோக்கி) உங்களுடைய வழியும் பக்தியோகமும் ஆத்ம பரித்தியாகமுந்தான். உங்களைப்போல பகவந் நாமத்தைப் பாடுகிறவர்கள் பகவத் கிருபைக்குப் பாத்திரராவார்கள். உங்களுடைய வழி தெளிவாயும் யுக்திக் கனுஸரணையாயுமிருக்கிறது. அஹங்காரத்தை உங்களால் உதறித்தள்ளிவிட முடியாது. ஆகையால், 'பிரம்மம் ஒன்றே நிஜம்; உலகம் கனவுபோல் பொய்யானது' என்று கொள்ளும் அத்வைதிகளைப்போல் சொல்வது உங்களுக்குத் தகைமையன்று. நீங்கள் ஞானிகளல்லர்; பக்தர்கள். நீங்கள் ஈசுவரனை நம்புகிறீர்கள். அது சரியே. இந்த வழியிலேயே செல்லுங்கள். உண்மையில் கடவுள் வேட்கை உடையவர்களாய் நம்பிக்கையுடனிருந்தால் உண்மையாகக் கடவுளைக் காண்பீர்கள்."

பிரிவு. 5

## ஒரு சிஷ்யனுடைய வீட்டில்

கப்பல் திரும்பிவந்து கல்கத்தாவை யடைய, யாவரும் கப்பலைவிட் டிறங்குவதற்குத் தயார் செய்துகொள்கிறார்கள். அறையை விட்டு வெளிவந்ததும், புண்ணிய கங்காநதியையும் அதன் கரையையும் பூரண சந்திரன் தன் இனிய கிரணங்களால் பிரகாசிக்கச் செய்வதைக் கண்டார்கள்.

பகவான், ம— உட்பட இரண்டு மூன்று சிஷ்யர்களோடு கரையில் அவருக்காகக் காத்துக்கொண்டிருந்த வண்டியில் ஏறினார். கேசவஸேனர் சகோதரர் மகனை நந்தலால் என்பவரும் வண்டியிலேறினார். அவர் பகவானுடன் சிறிது தூரம் போகவிரும்புகிறார்.

வண்டியில் யாவரும் ஏறி உட்கார்ந்ததும், பகவான் 'அவர் எங்கே' என்று கேசவரைக் குறித்துக் கேட்டார். சில நிமிஷத்தில் 'யாரெல்லாம் கூடப்போகிறார்கள்?' என்று கேட்டுக்கொண்டு புன்சிரிப்புடன் கேசவர் அங்கு வந்தார். கிடைத்த மறுமொழியினால் திருப்தியடைந்து பகவானுக்கெதிரே கீழே தரையில் விழுந்து நமஸ்கரிக்க, பகவானும் அன்புடன் அவரிடம் விடைபெற்றுக் கொண்டார்.

வண்டி புறப்பட்டது. அஃது ஆங்கிலேயர்கள் வசிக்குமிடம்; நன்றாய் ஜலம் தெளிக்கப்பட்ட அழகிய தெருக்கள். இரு பக்கங்களிலும் அழகிய மாளிகைகள். அன்று பௌர்ணமி. அவ்வழகிய அரண்மனைபோன்ற

கட்டிடங்கள், மிருதுவும் நிர்மலமுமான சந்திரிகையில் உறங்குவதுபோல் காணப்பட்டன. வாசல்களில் வாயு தீபங்கள் (Gaslights) வைக்கப்பட்டிருந்தன; உள்ளே அறைகளெல்லாம் தீபங்களால் பிரகாசித்துக் கொண்டிருந்தன. இனிய சங்கீதத்தின் சப்தம் காதிற் கேட்கின்றது; ஐரோப்பிய ஸ்திரீகள் பியானோ வாத்தியத்துடன் ஒத்துப் பாடிக்கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது.

வண்டி போய்க்கொண்டிருக்கும்பொழுது பகவான் ஆனந்த பரிதராயிருந்தார். திடீரென்று அவர், "எனக்குத் தாகமாயிருக்கிறது; என் செய்வது?" என்றார். நந்தலால் இந்தியா கிளப்பிற் கெதிரில் வண்டியை நிறுத்தச் சொல்லி, ஜலம் கொண்டு வருவதற்காக மாடியின் மீது ஏறிச் சென்றார். ஒரு கண்ணாடி டம்ளரில் ஜலம் கொண்டுவர, பகவான் புன்னகையுடன், "இந்த டம்ளர் நன்றாய்க் கழுவப்பட்டதா?" எனக் கேட்டார். நந்தலால், "ஆம்" என்று விடையளிக்க, பகவான் தண்ணீர் சாப்பிட்டார்.

பகவான் குழந்தைபோன்ற சுத்த சுபாவத்துடனிருந்தார். இருபக்கங்களிலுமிருக்கும் பல பொருள்களையும் பார்ப்பதற்காக உற்சாகத்துடன் அவர் தலையை நீட்டி உற்று நோக்கினார். மனிதர், மிருகங்கள், வண்டிகள், வீடுகள், சந்திரிகை, விளக்குகளால் பிரகாசிக்கும் தெருக்கள் முதலியவைகளைப் பார்ப்பதில் அவருக்குண்டான ஆனந்தத்திற்களவில்லை!

கொலுத்தலம் வந்ததும் நந்தலால் இறங்கிவிட்டார். வண்டி ஸுரேசமித்திருடைய வீட்டு வாசலில்

வந்து நின்றது. ஸுரேசர் பகவானிடம் மிகவும் பக்தி யுடையவர்; ஆனால், அவர் இப்பொழுது வீட்டிலில்லை. அவர் காங்கூர்கச்சியில், தாம் புதிதாக வாங்கிய தோட்டத்திற்குப் போயிருந்தார். அவருடைய ஜனங் கள் வீட்டின் ஓரறையைத்திறந்து, வந்தவர்களை உட்கா ரும்படியாக அழைத்தார்கள்.

வண்டி வாடகை கொடுக்கவேண்டும். யார் கொடுப் பது? ஸுரேசர் வீட்டிலிருந்தால் அவர் கொடுப்பார். பகவான் ஒரு சிஷ்யனைப் பார்த்து, "இவ்வீட்டுப் பெண் களை வண்டி வாடகை கொடுக்கும்படியாகக் கேள். அவர்களின் எஜமானர்கள் நம்மிடம் வருவது வழக்கம் என்பதை அவர்கள் நன்கறிந்திருக்கலாமே" என்றார். (சிரிப்பு)

நரேந்திரர் (விவேகாநந்தர்) அருகில்தான் வசிக் கிறார்; ஆகையால் பகவான் அவருக்குச் சொல்லியனுப் பினார். இதற்குள் அவ்வீட்டிலுள்ளவர்கள் அவரை மாடியின் கூடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். தரை யின்மீது பாய் விரிக்கப்பட்டு, அதன்மேல் கம்பளமும் வெள்ளைத்துப்பட்டியும் விரிக்கப்பட்டிருந்தன. மூன்று நான்கு திண்டுகளும் போடப்பட்டிருந்தன. ஸகல மதங்களுடைய ஸமரஸத்தைக் காண்பிப்பதாகக் கருதி ஸுரேசரால் எழுதுவிக்கப்பட்ட அழகிய சித்திரப்பட மொன்று சுவரில் மாட்டப்பட்டிருந்தது. அந்தப்படத் தில், ஹிந்துமதம், மகம்மதியமதம், புத்தமதம் கிருஸ்துமதம் இவைகளும் இவற்றின் பல பிரிவினை களும் கடவுளாகிய ஒரே லக்ஷியத்தையே நாடிச்செல்லு

கின்றன என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேசவருக்குச் சொல்வதாகக் காண்பிக்கப்பட்டிருந்தது.

நரேந்திரர் வந்தபொழுது பகவான் புன்னகையுடன் பேசுகிறார். அவருடைய ஆனந்தமானது இருமடங்கு அதிகரித்தது.

அவர் நரேந்திரரைப் பார்த்துப் புன்சிரிப்புடன், "நாங்கள் கேசவஸேனருடன் வெகு உல்லாஸமாய்க் கப்பலில் வந்தோம்; விஜயனும் வந்திருந்தான். (ம—வைச் சுட்டிக்காட்டி) நீ ம—வைக் கேள். தாயும் மகளும் தன் தன் சௌக்கியத்தைக்கோரிச் செவ்வாய்க்கிழமை விரதம் தனித்தனியே அனுஷ்டிப்பதைப்பற்றியும், இவ்வுலகில் ஈசுவரனுடைய திருவிளையாடலானது, ஜடிலகுடிலர்களின் தடையேற்படாவிடில் ஒளிபெற்று ஓங்காது மங்குமென்றும், கேசவருக்கும் விஜயனுக்கும் எவ்விதம் சொன்னேன் என்று கேள்" என்றார்.

(ம—வைப்பார்த்து) "இல்லையா" எனக்கேட்க, ம— 'ஆம் ஸ்வாமி!' என்றார்.

வெகு நேரமாய்விட்டது. ஸுரேசர் இன்னும் வரவில்லை. பகவான் தக்ஷிணேசுவர ஆலயத்திற்குத் திரும்பிப் போகவேண்டும். இப்பொழுது மணி பத்தரையாய் விட்டது. ஆதலால் அவர் ஆலயத்திற்குப் போவதற்காகப் புறப்பட்டார்.

வீதிகளெல்லாம் சந்திரிகையில் முழுகியிருந்தன. வண்டி வாசலில் தயாராகவிருந்தது. பகவான் வண்டியிலேறினர். நரேந்திரர், ம— இவ்விருவரும் பகவானை வணங்கி, விடைபெற்றுத் தம் வீடு சென்றார்கள்.

# ஐந்தாவது அத்தியாயம்

[கமல குடீரத்தில் பகவான் கேசவ சந்திரஸேனருடன்]

## பிரிவு. 1

## ஜகன்மாதாவும் அவளுடைய அவதாரங்களும்

1883-வது வருஷம் நவம்பர் மாதம் 28-ம் தேதி மத்தியானம் இரண்டுமணிக்குமேல் கமல குடீரத்துக்கு எதிராக விருக்கும் வட்டமான பாதையின் (Circular Road) பக்கத்தில் ஒரு வாலியர் முன்னும் பின்னுமாக உலாவிக்கொண்டிருந்தார். அவ்வொற்றையடிப் பாதையானது கமலகுடீரத்துக்கு அருகில் தெற்கு வடக்காகப் போகிறது.

கமலகுடீரமானது கேசவ ஸேனருடைய ஸமாஜத்தைச் சேர்ந்த பிரம்மோ பக்தர்கள் இருக்குமிடமாகிய மங்களபுரிக்குத் தெற்கே இருக்கிறது. இக்குடீரத்தில் கேசவர் தம் குடும்பத்துடன் வஸிக்கிறார். அவர் இப்பொழுது மிகவும் அசௌக்கியமாக விருக்கிறார். அவர் சௌக்கியப்படுவது மிகவும் துர்லபமென்று அவரது நண்பர்கள் சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேசவரிடத்தில் மிகவும் அன்புடையவர். அவர் இன்று கேசவரைப்பார்க்கவருவார். அவர் இப்பொழுது தக்ஷிணேசுவராலயத்தை விட்டுப் புறப்பட்டிருப்பார். ஆதலாற்றான் அவரது சிஷ்யராகிய இவ்வாலிபர் தம் அன்பார்ந்த குருநாதன் வரவை எதிர்பார்த்துக்கொண்டே பாதையில் மேலும் கீழுமாக

உலாவிக்கொண்டிருக்கிறார். ஒன்றன்பின் ஒன்றாக வந்துகொண்டிருக்கும் வண்டிகளிலெல்லாம், அந்த பக்தர், பகவான் வந்துவிட்டாரோ வென்று பார்க்கிறார்.

அவர் பகவானுடைய வரவை யெதிர்பார்த்துக் கொண்டு வழியில் போகிறவர்களை யெல்லாம் கவனித்துக்கொண்டே யிருக்கிறார். அவர் எதிராகவிருக்கும் பிரம்மோ ஸ்திரீகளும் பிரம்மோச் சிறுமிகளும் வாசிக்குமிடமாகிய விக்டோரியா காலேஜைப் பார்க்கிறார். அக்காலேஜ் கட்டிடத்திற்கு வடக்கே யிருக்கும் பங்களாவில் ஒரு ஆங்கிலேய கனவான் வசிக்கிறார். அந்த பங்களாவும் இவ்வாலிபருடைய எதிர்ப்பார்வையி லிருக்கிறது.

அவர் சிறிது நேரம் அந்த பங்களாவைப் பார்த்துக்கொண்டிருந்தார். அவ்விடத்தில் யாவும் ஸரியாயில்லை. அவ்வீட்டிற்குள் பரபரப்பும் குழப்பமுமாகவிருந்தது; அவர்கள் துக்கமாயிருப்பதாகக் காணப்பட்டார்கள். சற்று நேரத்திற்கெல்லாம், எமனுக்கு அறிகுறியான கறுப்பு உடைதரித்த வண்டிக்காரர்களுடனும், வேலையாட்களுடனும் பாடைவண்டி ஒன்று கொண்டுவரப்பட்டது; ஏனெனில் எமன் அவ்வீட்டிற்கு வந்திருக்கிறான். ஒரு ஜீவன் இந்த மண் சரீரத்தை விட்டுப் போய்விட்டது. அது இவ்வுலகைவிட்டுச் சாசுவதமான உலகை அடைந்தது; நித்தியத்துவத்திலிருந்து இவ் வுலகத்திற்கு வந்த ஜீவன் இப்பொழுது இவ்வுலகைவிட்டு நீங்கியது !

முன்னும் பின்னுமாக உலாவிக்கொண்டே பக்தர் தமக்குள் யோசிக்கலானார்: “இவ்வுலகை விட்டு

ஜீவன் எங்குபோயிற்று? நித்தியத்துவத்திலிருந்து வந்து, நித்தியத்துவத்தை யடைந்தது!"

எதிரே வண்டிகள் போய்க் கொண்டிருந்தன; அவைகளைப் பார்த்தார்; ஆனால் பகவான் வர வில்லை.

சாயங்காலம் மணி ஐந்தாயிற்று. பகவான் வருகிறார். லாட்டு, ராக்கால், ம— இன்னும் மூன்று நான்கு சிஷ்யர்களும் அவரோடு இருந்தார்கள்.

அவர் கேசவரின் ஜனங்களால் வரவேற்கப்பட்டு மாடிக்குப் போனார். கூடத்திற்குத் தென்புறமாக விருக்கும் நடையில் பகவான் உட்கார்ந்தார்.

## பகவான் சமாதி யடைதல்

பகவான் சற்று நேரம் காத்துக் கொண்டிருந்தார். உள்ளே அறையில் அசௌக்கியமாகப் படுத்துக்கொண்டிருக்கும் கேசவரை உடனே பார்க்கவேண்டுமென்று அவர் ஆத்திரப்படுகிறார். கேசவர் வியாதி யவஸ்தையினடுவில் இப்பொழுதுதான் கொஞ்சம் தூங்குகிறாரென்று அவருடைய ஜனங்கள் மிகவும் தாழ்மையுடன் சொன்னார்கள். சீக்கிரம் வந்து பகவானைப்பார்ப்பார்.

கேசவர் அதிக அசௌக்கியமாயிருப்பதால் அவருடைய சிஷ்யர்கள் அவரை மிகக் கவனமாகப் பார்த்து வருகிறார்கள். ஆயினும், பகவான் அவரைப் பார்ப்பதற்கு மிகவும் ஆவலுடையவராயிருந்ததனால், அவர் கேசவரின் சிஷ்யர்களான பிரஸன்னன், அமிருதன் முதலானவர்களிடம் தாமே உள்ளேபோய்ப் பார்ப்பதாகக் கூறுகிறார்.

பகவான் (கேசவரின் சிஷ்யர்களை நோக்கி):—நல்லது. அவர் இங்கு வரவேண்டுமென்ற அவசியமென்ன? நானே உள்ளேபோய் அவரைப் பார்க்கிறேன்.

பிரஸன்னன் (வணக்கத்துடன்):—ஸ்வாமி! ஒரு நிமிஷம் பொறுங்கள்; அவர் சீக்கிரம் இங்கு வந்துவிடுவார்.

பகவான்:—அப்பா, நீதான் தடைசெய்கிறாய்; நான் அவரைப் பார்க்க எவ்வளவு ஆவலாயிருக்கிறேன்!

பிரஸன்னன் அவரது சிந்தனையை மாற்றக் கேசவரைப் பற்றிப் பேசுகிறான்.

பிரஸன்னன்:—ஸ்வாமி! அவருக்கும் பெரிய மாறுதல் ஒன்று ஏற்பட்டிருக்கிறது. தங்களைப்போலவே அவரும் அடிக்கடி ஜகன்மாதாவோடு பேசுகிறார்! தங்களைப்போலவே அவரும் அவளுடைய இனிய குரலைக் கேட்கிறார்! சில சமயங்களில் கண்ணீர் விடுகிறார்!!

கேசவர் குழந்தைபோலச் சிரித்துக்கொண்டும், ஜகன்மாதாவைக் கூவியழைத்து அவளோடு பேசிக்கொண்டும் இருக்கிறாரா? இந்த நற்செய்தி பகவானுக்குத் தாங்கமுடியாத ஆனந்தத்தை யளிக்கிறது. அவர் மெய்மறந்து ஸமாதியை யடைகிறார்!

பிரம்மானந்தத்தில் மூழ்கிய இம்மஹா புருஷர் சிலையைப்போல் அசைவற்று உட்கார்ந்திருக்கிறார். குளிர்கால மாகையினால் அவர், காச்மீரத்துப் பச்சைக் கம்பளிச்சட்டை தரித்திருந்தார். அவர் கைகட்டி உட்கார்ந்திருக்கிறார்; சரீரம் நிமிர்ந்திருக்கிறது; கண்கள் சலனமற்றிருக்கின்றன. ஸமாதியிலாழ்ந்து, இவ்விதமான நிலைமையில் அவர் வெகுநேரம் வரையிலிருந்தார்.

இவ்வித ஒப்புவமையற்ற பிரம்மானந்த நிலைமையானது அவரை விட்டு நீங்கும்படியான குறிகளொன்றும் காண

சாயங்காலமாயிற்று. கூடத்தில் விளக்கேற்றப்பட்டது. பகவான் ஸமாதிநிலை கலைந்து வெளிப்பிரக்ஞையை அடைகிறார். அவரைக் கூடத்திற்கு இட்டுச் செல்ல உத்தேசிக்கிறார்கள்.

அவர் ஒரு சிறு கட்டிலின்மீது உட்கார்ந்திருக்கிறார். விளக்கேற்றி யிருக்கும் அவ்வறையில், மெத்தை போட்ட நாற்காலிகளும், கட்டில்களும், கண்ணாடிகளும் எல்லாப் பக்கங்களிலுமிருந்தன. ஸமாதி நிலையானது அவரை முழுவதும் விடவில்லை. அவர் குடிகாரனைப் போல் சிரிக்கிறார். கட்டில், மெத்தைபோட்ட நாற்காலி, கண்ணாடி முதலியவைகளைப் பார்க்கிறார். தமக்குத் தாமே பேசிக்கொள்ளுகிறார்! தம் அன்னையாகிய ஜகன் மாதாவோடும் ஏதோ பேசுகிறார்!

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (அக்கட்டில் நாற்காலி முதலியவைகளைக் குறிப்பிட்டு):—இவைகள் சிறிதுகாலத்திற்கு முன் பிரயோஜனமுள்ளவைகளா யிருந்தன ! ஆனால் இப்பொழுதோ அவைகள் சற்றும் பிரயோஜனப்படவில்லை.

ஒருவேளை கேசவரின் காலமானது நெருங்கிவிட்டதென்றும், அவர் இவ்வுலகை விட்டுப் பிரிந்து தம் ஜகன்மாதாவினிடம் போவாரென்றும், பகவான் தமது அந்தர்முக திருஷ்டியால் அறிந்தாரோ ?

அவர், ராக்கால் என்னும் வாலிப சிஷ்யரைப் பார்த்து 'யார்; ராக்காலா ? ' என்றார்.

அவர் ஜகன்மாதாவோடு இவ்வண்ணம் பேசுகிறார்: "ஆ! அம்மா! நீ இங்கே வந்திருக்கின்றாய்! நீ அழகாய் அலங்கரித்துக்கொள்ள வேண்டுமென்ற அவசிய மென்ன? ஆ! என்னம்மா! நீ சிரமப்படாதே. இவ் விடத்தில் உட்காரு!!"

இதற்குள் பிரம்மோ பக்தர்கள் அவ்வறையில் நிறைந்திருந்தனர். பகவானது சிஷ்யர்களான லாட்டு, ராக்கால், ம— இவர்கள் அவரருகில் உட்கார்ந்திருந்தார் கள். அவர் ஆத்மாவின் அழிவின்மையைப் பற்றிப் பேசுகிறார். கேசவரின் ஆத்மா சரீரத்தை விட்டுப் போகவேண்டுமென்பதை அவர் தெளிவாகப் பார்க் கிறார்போலும்!

பகவான்:—சரீரமும் ஜீவனும்! ஆரம்பத்தை யுடையது சரீரம். அதற்கு ஒரு முடிவும் இருக்கவேண் டும். சரீரம் நசிக்க வேண்டியதே. ஜீவன்நசிக்கிறதில்லை!

"ஜீவனானது சரீரத்தினின்றும் வேறானது. ஈசு வரனைப் பார்க்கிறவரையில், சரீரமே ஜீவன் என்னும் நம்பிக்கையை ஒருவன் விடமுடியாது. இந்த நம்பிக்கை அஞ்ஞானிக்கு இன்னும் பலமாகப் பிடித்துக்கொண் டிருக்கும். கடவுளைப் பார்த்தவனுக்கு சரீரமே ஜீவன் அல்லவென்பது நன்கு விளங்கும்.

"பழுக்காத கொட்டைப்பாக்கின் தோலானது பாக்கோடு ஒட்டிக்கொண்டிருக்கும். ஒன்றை விட்டு ஒன்றைப் பிரித்தெடுப்பது மிகக் கடினம். ஆனால் நன் றாய்ப் பழுத்த கொட்டைப்பாக்கின் விஷயம் அவ்வித மன்று. தோல் அதோடு ஒட்டிக்கொண்டிராது. அதைக் குலுக்கினால் பாக்கு உள்ளே ஆடுவது தெரியும்."

இச்சமயத்தில் யாரோ உள்ளே பிரவேசித்தனர்! வெறும் எலும்பும் தோலுமாக, நிழலை போன்ற உருவத்தையுடைய ஒருவர் பகவானை நோக்கி வந்தார்! அவர் சுவரைத் தாங்கலாகப் பிடித்துக்கொண்டே கட்டிலினருகில் வந்தார். இப்பொழுது தரையில் கம்பளியின்மீது இன்னும் ஸமாதி நிலையிலேயே உட்கார்ந்திருக்கும் பகவானுடைய திவ்ய சரணங்களில் அவர் விழுந்து நமஸ்கரித்தார். பகவானுக்கெதிரிலிருக்கும் இவ்வுருவம் யாராயிருக்கக் கூடும்? கேசவர்! அல்ல, கேசவரின் உடைந்த பிரதிமை. அவர் நூற்றுக்கணக்கான பிரசங்க மேடைகளிலிருந்து பிரசங்கம் செய்தசூரர்; எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தவர்! வங்காளச் சிறுவர்களின் குலதெய்வம்! ஒருபொழுதும் மறக்க முடியாதபடி அவ்வளவு பலமும், உருக்கமும், இனிமையும், அழகுமுள்ள வார்த்தைகளால் தம் ஜீவனையே குழந்தைபோல் ஜகன் மாதாவிற்குப் பிரார்த்தனையாக வார்த்து, பிரம்ம ஸமாஜத்தின் ஈசுவராராதனையை நடத்திக் கொண்டிருக்கும்பொழுது, பார்த்த மாத்திரத்திலேயே மனக் கிளர்ச்சியைக் கொடுக்கும் தெய்வ உருவத்தை யுடையவர்!

பகவான் இன்னும் ஆனந்தபரவச நிலையிலேயேயிருக்கிறார்! கேசவரை அவர் அறியாததுபோல் பார்த்துக் கொண்டிருக்கிறார்! கேசவர் உட்கார்ந்து கொண்டு உரத்த குரலில், "இதோ வந்திருக்கிறேன். சுவாமி! நானிதோ வந்திருக்கிறேன்" என்று கூறிக்கொண்டே மெதுவாக பகவானுடைய இடது கையைத் தடவினர்.

ஆனால் பகவானுக்கு இன்னும் உலகப் பிரக்ஞை வந்ததாகக் காணவில்லை. அவர் நித்தியானந்தக் கடலில் ஆழ்ந்திருக்கிறார்! சற்று நேரம் கழித்து, பைத்தியம் பிடித்தவனைப்போல் தமக்குத்தாமே பேசிக்கொள்ளுகிறார்! இதுதான் பிரேமைப்பித்து எனப்படுவதோ? பகவான் பேசுகிறார்:—

“எனக்கு ஆத்மாவின் அறிவு இல்லாமலிருக்கிற வரையில்—உபாதிகளுக்குப் பின் உண்மை வஸ்துவானது மறைபட்டிருக்கிற வரையில்—கேசவ், அமிருதன் பிரஸன்னன் முதலியவர்களும், மற்ற வஸ்துக்களும் தனித்தனியாகவும், பலவாகவும் தோற்றுகின்றன. பூரண ஞானம் உதிக்கும்பொழுது எல்லாம் ஒன்றாய் விடுகிறது. ‘பலவாகத் தோற்றும் வஸ்துவொன்றே; அவ்வஸ்துவே கடவுள்’ என்று அறிவதே பூரண ஞானமாம்.

“மேலும் ஞானியானவன், இவ்வுண்மை வஸ்துவாகிய பிரம்மமே—ஜீவர்களாகவும், ஜகத்தாகவும், இருபத்துநான்கு தத்துவங்களாகவும்—தன்னைப் பிரித்துத் தோற்றுவிக்கிறதென்பதைப் பிரத்தியக்ஷத்தில் பார்க்கிறான்.

“எங்கும் வியாபித்திருப்பது அப்பராசக்தியே. உண்மையாக ஒரே ஆத்மா தன்னையே பலவாகப் பிரித்துத் தோற்றுவிக்கிறது. ஆயினும், சிலரிடத்தில் சக்தியானது அதிகமாகப் பிரகாசிக்கின்றது. சிலரிடத்தில் குறைவாகப் பிரகாசிக்கின்றது. வித்தியாஸாகரர் என்னிடம், ‘கடவுள் நமக்குக் கொடுத்திருக்கும் சக்திகளைச் சிலருக்குக் குறைவாகவும், சில

ருக்கு அதிகமாகவும் கொடுத்திருக்கிறரென்பது உண்மையா? கடவுள் பக்ஷபாதமுள்ளவரா?' என்று கேட்டார். அதற்கு நான், உண்மை யில்லாவிட்டால் எவ்விதம் ஒருமனிதன் பத்து மனிதர்களை எதிர்த்தும், சில சமயம் ஐம்பது பேர்களையும் கூட எதிர்த்து நின்றும் சண்டையிட முடியும்? மேலும், அப்படி யில்லாவிடில், தக்ஷிணேசுவரத்திலிருந்து நாங்கள் எதற்காக இவ்வளவு தூரம் உம்மைப் பார்ப்பதற்கு வந்திருக்கிறோம்? ஈசுவர சிருஷ்டியில் வேற்றுமை யிருப்பது வெளிப்படை. அதற்குச் சூக்ஷ்மமான ஆழ்ந்த உட்கருத்து ஒன்றிருக்கவேண்டும். அதனல் கடவுள் பக்ஷபாதமுடையவரென்று ருஜுவாகிறதில்லை' என்று பதிலளித்தேன்.

"எவனிடத்து ஈசுவராம்சம் அதிகமாகத் தோற்றுகிறதோ, அவனிடத்து மற்றவர்களைவிட அதிக சக்தியிருக்கிறது. ஒரு பணக்காரனிடம் வசிப்பதற்கு வீடுகள் அநேகமிருக்கலாம். ஆனல், அவனுக்கு மிகவும் பிரியமான ஒருவீட்டில்தான் அவனை ஸாதாரணமாகக் காணலாம். கடவுளிடம் அன்பு செலுத்துபவன் தான் கடவுளின் கிருஹம். கடவுளிட மிருந்து விசேஷமான சக்திகளெல்லாம் அவனுக்குக் கிடைக்கின்றன.

"அப்பேர்ப்பட்டவனுக்கு யாது அடையாளம்? கடவுள் பெயரால் அவன் செய்யும் அரிய செயல்களே. அவைகள் விசேஷசக்திகளின் பலன்களென்பது உறுதி.

"இந்த ஆதிசக்தி அல்லது ஈசுவரன், பிரம்மத்தைத் தவிர வேறன்று. ஒன்றைத் தவிர்த்து மற்

றொன்றை நினைக்க முடியாது. ஒளியைத் தவிர்த்து மணியையும் மணியைத் தவிர்த்து அதன் ஒளியையும் நினைக்கமுடியாது. இன்னும் அதுபோலவே, சர்ப்பமும் அதன் வளைந்தோடும் குணமும்; ஒன்றைவிட் டொன்றைப் பிரித்து நினைக்கமுடியாது.

"பிரம்மத்தினுடையவும், ஈசுவரனுடையவும் ஒற்றுமையைப் பற்றி வார்த்தைகளால் வியக்தமாகச் சொல்ல முடியாது. உபமானமும் கொஞ்சந்தான் விளக்கிக்காட்டும்.

"என் அம்மையாகிய ஜகதீசுவரி இருபத்துநான்கு தத்துவங்களாகத் தோன்றியிருக்கிறாள். இது 'அனுலோமவிலோம' முறைப்பிரகாரம். அவளிடத்திலேயே ஜீவனும், ஜகத்தும் அனுலோமித்து (அடங்கி) இருந்தன. இவைகள் அவளிடத்திலிருந்தே விலோமித்து (வெளித்தோன்றி) வந்திருக்கின்றன. ராக்கால், நரேந்திரர் முதலிய சிறுவர்களைப் பார்க்க, நான் ஏன் அவ்வளவு ஆவலாயிருக்கிறேன்? அவர்களுக்கு உலகின்—காமினிகாஞ்சனத்தின் (பெண் பொன்)—ஸ்பரிசம் இன்னும் உண்டாகவில்லை. ஜகன்மாதாவே சரீர மெடுத்திருக்கிறாள். ஆதிசக்தியானவள் இவ்வுலகில் தோன்றி, விசேஷமாக இந்த மனித சரீரங்களில் பிரகாசிக்கிறாள்!

"ஹஸ்ரன் என்னிடம், 'தாங்கள் ஏன் இவ்வாலிபர்களைப்பற்றியே நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள்! தாங்கள் எப்படி கடவுளிடம் மனதைச் செலுத்தப் போகிறீர்களோ!' என்று சொல்லி அடிக்கடி என்னைக் கடிந்து கொள்ளுகிறான். (கேசவர் முதலியவர்கள் சிரிக்கிறார்கள்.)

"ஹஸ்ரன் சொன்ன வார்த்தையானது என்னை ஆலோசிக்கும்படி செய்தது. நான் ஜகன்மாதாவி னிடம், 'அம்மா! ஹஸ்ரன் சொல்வதெல்லாம் வாஸ்தவமா? நான் உண்மையாக உன்னை மறந்து வருகிறேனோ?' என்று சொல்லி ஸ்தோத்திரம் செய்தேன். நான் இதைப்பற்றி போலாநாதனைக் கேட்டேன். அவன் மஹாபாரதத்தில் இவ்விஷயத்தைப்பற்றி மிகத் தெளிவாக விளக்கி யிருக்கிறதென்று சொல்லி என்னை ஸமாதானப்படுத்தினன். ஸமாதியில் பிரம்மத்தை யடைந்தவனுக்கு இந்த மித்தையான ஜகத்தில் பிடிப் பொன்று மில்லாததினுல், காமினிகாஞ்சனங்களைவிட்டு ஈசுவரனை நேசிக்கும் பரிசுத்த ஜீவர்களின் ஸஹவா ஸத்தை நாடுவது அவசியமென்று அதில் சொல்லி யிருக்கிறது. இப்படி மஹாபாரதத்திலிருந்த பிரமாண மானது என் மனத்தை ஸமாதானப்படுத்தியது. நியாயாதிபதி முன்வழக்கில் செய்த தீர்ப்பானது, புதிதாக அதுபோன்ற வழக்கைக் கொண்டுபோகும் ஒருவனுக்கு ஆதாரமாயிருப்பது போலாயிற்று. (யாவரும் சிரித்தல்.)

"ஹஸ்ரனைக் குற்றம் சொல்வதற்கில்லை. ஒருவன் கடவுளைக் காண்கிறவரையில், 'நேதி, நேதி' என்று சொல்லி, மனிதன், பிரகிருதி, இவற்றைத் தவிர்த்த வேருன வஸ்து கடவுள் என்று அறிய வேண்டும். ஆனுல், கடவுளைப் பார்த்தவனுடைய விஷயம் முற்றிலும் வேறு. அவன் அனுலோம, விலோமத்தின் உண்மையை—ஜீவனும் ஜகத்தும் பிரம்மத்தில் அடங்கி யிருந்தனவென்றும், பிரம்மத்திலிருந்தே

வெளியில் தோன்றினவென்றும், அப் பிரம்மமாகிய கடவுளே இந்த ரூபங்களாகப் பிரத்தியக்ஷமாயிருக்கிற தென்றும்—அறிகிறான். வெண்ணெயைத் தனியாய் எடுக்க வேண்டுமானால் மோரைப் பிரித்துவிடவேண்டும். மோருக்கு வெண்ணெய் சம்பந்தம்; வெண்ணெய்க்கு மோர் சம்பந்தம்; இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று பரஸ்பர ஸம்பந்தமுள்ளவை. மனிதனும் பிரபஞ்சமும் கடவுளிடத்திலிருந் துண்டானவை. ஆனால் சிலவற்றில் அவனுடைய அம்சம் அதிகமாகவிருக்கிறது.

"ஈசுவரனை அடைவதற்கு மனிதனுடைய அந்தக்கரணத்தில் எவ்வளவுக் கெவ்வளவு பக்தி யதிகரிக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு எல்லா வஸ்துக்களிலும் அவனை உணர்வது சுலபமாகின்றது. ஆற்றில் பிரவாஹம் வந்து கரைபுரண்டுபோகும் வரையில் ஸமுத்திரத்தை யடையவேண்டுமானால், அந்த ஆற்றின்வழியாகத்தான் படகைச் செலுத்திச் சுற்றிக்கொண்டு போகவேண்டும். பிரவாஹம் வரும்பொழுது நிலத்தின்மீதும் ஜலம் ஆழமாக விருப்பதால் நேரே குறுக்காகப் படகைச் செலுத்தலாம்.

"வயல்களில் பயிர்கள் அறுவடையான பிறகு, வரப்பின்வழியாகத்தான் நடக்கவேண்டுமென்ற கட்டுப்பாடின்றி, வயலில் குறுக்கே எவ்விடத்திலும் நடக்கலாம்.

"ஒருவன் கடவுளை ஒருதரம் பார்த்தபிறகு, 'கடவுள் எல்லாவற்றிலும் தோன்றியிருக்கிறார். எல்லாவற்றையும் விட மனிதனிடத்தில், அதிலும், இவ்வுலகின் அற்பப் பொருள்களாகிய காமினி காஞ்சனங்க

களினின்றும் விலகியிருக்கும் பரிசுத்த ஆத்மாக்களில் இன்னும் அதிகமாக விருக்கிறார்' என்றுணர்கிறான்.''

அவ் வறை நிச்சப்தமா யிருக்கிறது.

''ஒருவன் ஸமாதியில் கடவுளைப் பார்த்தபிறகு அதினின்றும் திரும்பிவந்து இவ்வுலகின் அற்பவிஷயங் களில் தன்மனதைச்செலுத்துவது மிகக்கடினம். ஆகை யால்தான் அவன் இவ்வுலகத்தையும், இவ்வுலகி லடை யக் கூடிய பணம், பெயர், கௌரவம், அதிகாரம், இந் திரிய சுகம் முதலானவைகளையும் தொடாத சுத்தாத் மாக்களின் ஸஹவாஸத்தையே நாடுகிறான்.

''ஜகன்மாதாவாகிய சக்தி, பிரம்மமே தவிர வேறில்லை. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களாகிய தொழிலை நடத்துவதாகப் பாவிக்கப்படும்பொழுது, சக்தி அல்லது பிரகிருதியென்றும், இவைகளில்லாம லிருப்பதாகப் பாவிக்கப்படும்பொழுது பிரம்மம், அல் லது புருஷன் என்றும் அப் பரம்பொருள் அழைக்கப் படுகிறது. பிரம்மத்தை அடையாளங்களால் குறிப் பிட்டுச் சொல்லும்பொழுது ஜகன்மாதா என்றும், ஜகத் பிதா என்றும் சொல்லலாம். பிதாவானவன் வீட்டுக் காரியாதிகளை எல்லாம் மாதாவிடம் ஒப்புவிக்கிறான். தாயானவள் தன் எல்லாச்சக்தியையும், அதிகாரத்தை யும் தந்தையிடமிருந்து அடைகிறாள்.

''பிரபஞ்சத்தில் அந்தர்யாமியா யிருக்கும் பிரம் மத்தை, ஜகத்திற்கு அதிகாரியான ஜகன்மாதாவைத் தவிர்த்து நினைக்கமுடியாது. ஒன்றை நினைக்கும் பொழுது, மற்றொன்றும் கூடவே தோன்றும். புருஷனை நினைக்கும்பொழுது, பிரகிருதியின் எண்ணமும் கூடவே

தோன்றும். பிரகிருதியை நினைக்கும்பொழுது, புருஷன் என்ற எண்ணமும் உண்டாகின்றது. தந்தையென்பதென்ன வென்றறிந்தவன், தாய் என்பதென்ன வென்றும் அறிவான். (கேசவர் சிரிக்கிறார்.)

"இருளை அறிந்தவனுக்கு, அதன் பரஸ்பர சம்பந்தமான வெளிச்சம் இன்னது என்ற அறிவும் இருக்கும். இரவு என்பது யாதென அறிந்தவன் அதன் பரஸ்பர ஸம்பந்தமான பகல் என்பதையும் அறிவான். சந்தோஷத்தை யுணர்ந்தவன் அதன் பரஸ்பர ஸம்பந்தமான துக்கத்தையும் உணர்வான். இது உனக்குத் தெரிகிறதா?"

கேசவர்(சிரித்துக்கொண்டு):—ஸ்வாமி, தெரிகிறது.

பகவான்:—நான் மாதா என்று சொன்னது யார் தெரியுமா? சிருஷ்டிப்பவளும், இரக்ஷிப்பவளும், தன் குழந்தைகளைத் தீங்கினின்றும் காப்பாற்றி அவர்களுக்குத் தாங்கள் எவ்விதம் இவ்வுலகில் ஜீவிக்கவேண்டுமென்பதைக் கற்பித்து, இன்னும் எவ்விதம் முக்தியையும் உண்மை ஞானத்தையும் அடைவது என்பதையும் எடுத்துக்காட்டும் ஜகன் மாதாவே. உண்மையாகக் குழந்தை தாயாரைப் பிரிந்து ஜீவிக்கமுடியாது. அவன் ஒன்றும் அறியான். ஆனால் அவன் தாய் எல்லாம் அறிவாள். குழந்தை தன் ஆகாரத்தைத் தாயின் கையிலிருந்து வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டு விளையாடுவான். அவன் தன் எல்லாக்கவலைகளையும் தாயின்மீது போடுகிறான்.

கேசவர்:—ஸ்வாமி! அது முற்றிலும் உண்மை.

பிரிவு. 2

## கேசவருடன் கடைசி ஸம்பாஷணை

இப்பொழுது பகவான் ஸமாதியினின்றும் சுயநிலைமையை அடைந்து விட்டார். அவ்விடம் கூடியிருந்தவர்கள், பகவான் கேசவருடன் பேசிக்கொண்டிருப்பதை ஆவலுடன் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். கேசவராகிலும், அல்லது பகவானாகிலும் 'சௌக்கியமா?' அல்லது, 'எப்படியிருக்கிறது?' என்று ஒன்றும் கேட்டார்களில்லை; கடவுளைத்தவிர வேறொரு பேச்சும் நடக்கவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேசவரை நோக்கி):—பிரம்ம ஸமாஜத்தவர்கள் ஈசுவர சிருஷ்டியின் மஹிமையைப் பற்றியே, ஏன் அவ்வளவு பேசுகிறார்கள்? 'பிரபு! நீ சூரியனைச் சிருஷ்டித்தாய், சந்திரனைச் சிருஷ்டித்தாய், நக்ஷத்திரங்களைச் சிருஷ்டித்தாய்' என்று ஏன் நீங்கள் இவைகளைப்பற்றியே இப்படிப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? அநேகர் தோட்டத்தின் அழகிலேயே—அதன் அழகு மிகுந்த புஷ்பங்களிலும், அவற்றின் இனிய வாஸனையிலும்—மயங்கி நின்று விடுகிறார்கள். தோட்டத்தின் எஜமானனைத் தேடுகிறவர்கள் மிகச் சொற்பமே. இவைகளில் எது சிரேஷ்டமானது? தோட்டமா? அல்லது அதன் பிரபுவா? நம்மிடையில் மரணமானது நிலவிக்கொண்டிருக்கிற வரையில் தோட்டம் மித்தையே. அதன் பிரபுவே நிஜம்!

"சாராயக்கடையில் இரண்டு மூன்று சீசா சாராய முட்கொண்ட பிறகு பீப்பாயில் இன்னும் விலைக்கு விற்பதற்கு எவ்வளவு டன் சாராயமிருக்கிறதென்று எவன் கவனிக்கிறான் ? ஒரு சீசாவே ஒருவனுக்குப் போதுமானது.

"நான் நரேந்திரனைப் பார்த்த பொழுதே ஆனந்தத்தில் மூழ்கி விடுகிறேன். அவன் தகப்பனார் யாரென்றாவது, அவருக்கு எத்தனை வீடுகளிருக்கின்றனவென்றாவது எப்பொழுதும் நான் அவனைக் கேட்டதில்லை.

"மனிதர்கள் தங்கள் சொந்தமான பொருள்களையே விசேஷமாய் மதிக்கிறார்கள். அவர்களுக்குப் பணம், வீடு, சாமான்கள் முதலிய இவைகளே மேலானவை. ஆகையினால்தான், ஈசுவரனும் அதேமாதிரி சூரிய சந்திர நக்ஷத்திரங்களாகிய தன்னுடைய சிருஷ்டியை மதிப்பாரென்று அவர்கள் நினைக்கிறார்கள். மனிதர்கள் ஈசுவர சிருஷ்டிகளைப்பற்றிப் பிரமாதமாகப் பேசினால் அவருக்குத் திருப்தியாய் விடுமென்று எண்ணுகிறார்கள்.

"ஒரு ஸமயம் சம்பு மல்லிக் என்னிடம், 'ஸ்வாமி ! என் சொத்தை யெல்லாம் அம்பாளுடைய திருவடியில் அர்ப்பணம் செய்துவிட்டு நான் மரணமடையும்படி தாங்கள் அனுக்கிரகம் செய்யவேண்டும்' என்று சொன்னான். அதற்கு நான், 'நீ சொல்லுவதென்ன? இதெல்லாம் உனக்குத்தான் சொத்து; ஜகன் மாதாவுக்கு இதெல்லாம் மண்ணுக்குச் சமானம்' என்றேன்.

"ஒரு ஸமயம் விஷ்ணுவாலயத்தில் களவு போயிற்று ; விக்கிரஹத்திற் கலங்கரித்திருந்த நகைகளைத் திருடன் எடுத்துக்கொண்டு போய்விட்டான். ஆலயத்தின் தர்மகர்த்தாவும், ராஷ்மணி ராணியின் மாப்பிள்ளையுமாகிய மதுரநாத பாபுவும் நானும் என்ன ஸமாசாரமென்று பார்ப்பதற்காக அவ்விடம் சென்றோம். மதுர பாபு, 'ஆ தெய்வமே! உனக்குச் சக்தியில்லை! உன் ஆபரணங்களை யெல்லாம் திருடர்கள் அடித்துக் கொண்டு போய்விட்டார்கள்! உன்னால் அவர்களை ஒன்றும் செய்யமுடியவில்லை!' என்று உரக்கக் கூவினன். நான் சுறுக்கென்று அவன் மனத்தில் தைக்கும்படி, 'ஏனிப்படி மூடத்தனமாகப் பேசுகிறாய்! நீ சொல்லுகிற நகைகளெல்லாம், இவ்விக்கிரஹத்தில் நீ ஆராதித்து வரும் ஜகந்நாதனுக்கு மண்ணாங்கட்டிக்குச் சமானம்! அவனிடமிருந்தே ஐசுவரிய லக்ஷ்மி தன் சக்தியை அடைகிறாளென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்' என்றேன்.

"கடவுள், ஒருவன் தமக்களிக்கும் தனத்தை லக்ஷியம் செய்கிறாரா? இல்லை. எவன் அன்பும் சிரத்தையும் செலுத்துகிறானோ அவனுக்கு மாத்திரம்தான் கடவுள் கருணை புரிகிறார். தம் பொருட்டுப் பாராட்டும் நிஜபக்தியும், விவேகமும் வைராக்கியமுமே அவருக்கு சிலாக்கியமானது.

"ஒவ்வொருவனும் அவனவன் ஸ்வபாவத்திற்குத் தக்கபடி கடவுளை ஆராதிக்கிறான். தமோகுணியானவன், மாம்ஸத்தில் தனக்குப் பிரியமிருப்பதினால், தன் தெய்வத்துக்கு மிருகங்களைப் பலி கொடுக்கிறான்.

ரஜோகுணியானவன், அவன மனம பல எண்ணங்களில் ஈடுபடுவதினால், தன் தெய்வத்துக்குப் பலவிதமான ஆகாராதிகளைச் செய்து அர்ப்பிக்கிறான். ஸத்வகுணியானவன் தன்பக்தியை வெளிக்கு ஆடம்பரமாகக் காட்டிக் கொள்ளமாட்டான். புஷ்பங்கூட கிடையாது. வில்வதளமும் கங்கா தீர்த்தமும் கொண்டு அவன் கடவுளுக்குப் பூஜைசெய்து, சாதாரணமான பழம், பாயஸம் கொஞ்சம் சுவாமிக்கு நைவேத்தியம் செய்கிறான்.

"இன்னுமொரு வகுப்பு பக்தர்களிருக்கிறார்கள். அவர்கள் குணாதீதர்கள். குழந்தைபோன்ற சுபாவமுடையவர்கள். அவர்களின் ஆத்மாவானது இம்முக்குணப் பற்றற் றிருக்கும். அவர்களின் ஆராதனையானது, பகவந்நாமத்திலேயே முழுநம்பிக்கை வைத்து அதைச் சிரத்தையுடன் மேன்மேலும் உச்சரித்துக் கொண்டிருப்பதே. ஆம், பகவந்நாமத்தைத் தவிர வேறெதுவுமில்லை!

(கேசவரை நோக்கிப் புன்னகையுடன்) "நீ அசௌக்கியமாயிருக்கிறாய்; அதில் ஒரு ஆழ்ந்த கருத்திருக்கிறது. பகவானை நாடிய எவ்வளவோ உருக்கமான மனோபாவங்கள் உன் சரீரத்தில் நிகழ்ந்திருக்கவேண்டும். உன் தேக அசௌக்கியமே அதற்குச் சான்று. அம்மனோபாவங்க ளுண்டாகும்பொழுது, அவைகளினால் சரீரத்திற்கு இன்னதுதான் வருமென்று அச்சமயத்தில் சொல்லமுடியாது.

" ஒரு கப்பலானது கங்காநதியில் விரைவாகச் செல்கிறது. ஆனால் அதை ஒருவரும் கவனிக்கவில்லை. சிறிது நேரத்திற்குப் பின் பெரிய அலைகளால் கரை

மோதப்பட்டு, சில சமயம் அதன் சில பாகங்கள் அடித்துக் கொண்டு போகப்படுவதைக் காணலாம்.

"ஒரு யானையானது ஒரு குடிசைக்குள் புக நேரிட்டால், அதை யசைத்துக் கடைசியாக கீழே வீழ்த்துகிறது. பகவான்மீதிருக்கும் பக்தியானது யானைக்குச் சமானம். அது மனித சரீரமென்று சொல்லப்பட்ட களிமண் குடிசையை அநேகமாகக் கீழே தள்ளி விடுகிறது.

"ஒரு வீடு நெருப்புப் பற்றிக்கொண்டால் முதலில் உள்ளிருக்கும் சில சாமான்கள் எரிந்து போகின்றன. பின் அவ்வீடு முழுதும் எரிந்துபோகின்றது. அவ்வண்ணமேதான் கடவுளைப் பார்க்கும்பொழுதும் ஏற்படுகிறது. பகவத் காக்ஷியென்னும் நெருப்பினால் முதலில் காமக் குரோதங்களான மனோவிகாரங்களும், பின், நான் கர்த்தா என்னும் அகங்காரமும், முடிவில் வீடு முழுதும், அதாவது சரீரமும் எரிந்து போகின்றன.

"எல்லாம் முடிந்துவிட்டதென்று நீ நினைக்கலாம். ஆனால், வியாதியல்தன் முழுதும் சொஸ்தமாகிறவரையில் டாக்டர் அவனை விடுவதில்லை. உன் பெயரை ஆஸ்பத்திரி புஸ்தகத்தில் பதிவு செய்து கொண்டாய் விட்டது; ஆகையினால், டாக்டர் துரை உன்னைப் பார்த்து நீ சௌக்கியமென்று சொல்லுகிற வரையில் நீ போகமுடியாது. அவ்விதம் உன் பெயரை எழுதிக் கொள்வதற்கு நீயேன் இடம் கொடுத்தாய்?" (யாவரும் சிரித்தல்.)

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கடவுளுடைய ஆஸ்பத்திரியைக் குறிப்பிட்டுப் பேசியது கேசவருக்குத் தாங்கமுடியாத சிரிப்பை யுண்டாக்கிற்று.

பகவான் (கேசவரை நோக்கி):— ஹிருதயன், 'இப்பேர்ப்பட்ட பக்தியும் பார்த்ததில்லை; அதோடு கூட அவ்வளவு அசௌக்கியமும் நான் பார்த்ததில்லை' என்று சொல்லுவதுண்டு. அச்சமயத்தில் நான் கடுமையான வயிற்றுப்போக்கினால் மிகவும் அசௌக்கியமாயிருந்தேன். அப்பொழுது இலக்ஷக்கணக்கான எறும்புகள் என் மூளையை அரித்துத் தின்பதுபோல் தோன்றிற்று.

"ஆயினும் நான் கடவுளைப்பற்றியே பேசுவேன். நடகூர் கிராமத்து வைத்தியனாகிய ராம் என்பவன் என்னைப் பார்க்கவந்தபொழுது, நான் அந்நிலைமையிலும் விசாரணை பண்ணிக்கொண்டிருப்பதைப் பார்த்து, 'என்ன, இவர் வெறும் எலும்பும் தோலுமாயிருக்க, இப்படிப் பேசிக்கொண்டிருக்கிறாரே! இவருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதோ!' என்றான்.

"ஒவ்வொன்றும் என் தாயின் ஆக்கினைப்படியே நடக்கின்றது! ஆ, என் அன்னையே! நீ உன்னிச்சைப் படியே செய்கிறாய்! உன் காரியத்தை நீ செய்கிறாய்! ஆனால், மூட மனிதன், 'நான் செய்தேன்' என்று சிலாகித்துக்கொள்ளுகிறான்.

"தோட்டக்காரன், ஸாதாரண ரோஜாச்செடியையும், உயர்ந்த ஜாதி பஸ்ஸோரா ரோஜாச்செடியையும், எப்படி வைத்து வளர்க்கவேண்டுமென்று நன்கறிவான். பின் சொன்னவற்றிற்கு, அவன், இரவில் பனி விழும்

படியாக அதன் வேரைச் சுற்றிலுமிருக்கும் மண்ணைக் கிளறியெடுத்துவிடுகிறான். பனியானது செடிக்கு அழகும், பலமும் கொடுக்கிறது. உன் விஷயத்திலும் அப்படியேயிருக்கலாம். கடவுளாகிய தோட்டக்காரனுக்கு எவ்விதம் உன்னை நடத்தவேண்டுமென்று தெரியும். அவர் உன் வேர் வரையில் கிளறுகிறார். அதனால் ஞானமாகிய பனி உன்மீது விழ, அதன் பயனாக நீ முன்னிலும் பரிசுத்தனாகி அதிக வல்லமை பெற்று உன் வேலையும் அதிகமாக நிலைத்திருக்கும்.

"எப்பொழுதாகிலும், நீ அசௌக்கியமாயிருக்கிறாயென்று நான் கேள்விப்பட்டால் என்மனது மிகவும் வருத்தமடையும். போனதடவை நீ அசௌக்கியமாயிருக்கையில், இரவில் கடைசி ஜாமத்தில் எழுந்து என் ஜகன்மாதாவினிடம், 'ஆ,என்னம்மா! கேசவனுக்கேதாகிலும் தீங்கு நேரிட்டால் நான் கல்கத்தாவுக்குச் செல்லும்பொழுது உன்னைப்பற்றி யாருடன் பேசுவேன்?' என்று கதறுவேன். நான் கல்கத்தாவுக்கு வந்து நீ சௌக்கியமடைவதற்காக, அம்பாளுக்குப் பழமும் சர்க்கரையும் நைவேத்தியம்செய்து உருக்கத்துடன்பிரார்த்தித்தேன்."

அவ்விடமிருந்தவர்களெல்லோரும் கேசவரின் மீது அவருக்கிருக்கும் சொல்லமுடியாத ஆழ்ந்த அன்பைப் பார்த்து ஆச்சரியத்துடன் பிரமித்து நின்றவர்களாய்ப் பகவானைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பகவான் மேலும் சொல்லுகிறார்:

"வாஸ்தவமாக, உனக்கிப்பொழுதிருக்கும் அசௌக்கியத்தைப்பற்றி எனக்குக் கவலை முன் அவ்

வளவு தீவிரமாயில்லை. ஆனால், இப்பொழுது இரண்டு மூன்று நாட்களாகக் கவலையாயிருக்கிறது."

கூடத்திற்குச் செல்லும் கிழக்கு வாசற் கதவிற் கருகில் கேசவரின் தாயார் நின்றுகொண்டிருந்தாள்.

உமாநாத் பகவானிடம் "ஸ்வாமி! இதோ அம்மாள் உங்களை நமஸ்கரிக்கிறாள்" என்று உரக்கக் கூறினான்.

பகவான் புன்னகை கொள்கிறார். உமாநாத் மேலும், "ஸ்வாமி! கேசவர் சீக்கிரம் சௌக்கியமாகக் கடவ தென்று ஆசீர்வாதம் செய்யும்படியாக அம்மாள் தங்களைக் கேட்டுக் கொள்ளுகிறாள்" என்று சொன்னான். அதற்குப் பகவான், "உங்கள் பிரார்த்தனைகளை நித்தியானந்தமயமாகிய ஜகன்மாதாவிடம் செய்யுங்கள். அவளே வியாதிகளை யெல்லாம் விலக்கக் கூடியவள்" என்றுரைத்து மேலும் கேசவரை நோக்கிச் சொல்லுகிறார்:

"ஸ்திரீகளும் குழந்தைகளும் உள்ள அறைகளில் நீ வெகுநேரம் இருக்கக் கூடாது. அப்படியிருந்தால் தெய்வத்தை மறந்து அஞ்ஞானமாகிய கடலில் முழுகுவதற்கு இடமாகும். உனது நண்பர்களால் பகவானைப் பற்றிச் சொல்லப்படும் வார்த்தைகளைக் கேட்டால் உனக்கு நலமுண்டாகும்."

கேட்பவர்களுக்குப் பயபக்தியை உண்டு பண்ணத்தக்க விதமாய்க் கம்பீரமாக பகவான் இவைகளைச் சொன்னார். இவ்வளவு நேரம் குருவாக உபதேசித்துக் கொண்டிருந்தவர் சிறிது நேரத்தில் ஒரு குழந்தையின் சுபாவத்தை யடைந்தார். அவர் புன்னகையுடன் கேசவரை நோக்கி, "எங்கே, உன் கையைப் பார்க்கட்டும்"

என்று கூறி, தம் உள்ளங்கையில் கேசவரின் கையை வைக்கச் செய்து அதன் நிறையைப் பார்ப்பவர் போல் மேலும் கீழும் மெதுவாகத் தூக்கிப் போட்டுக்கொண்டிருந்தார். பின் அவர் கூறுகிறார்: "இல்லை; எல்லாம் சரி தான். உன் கை இலேசாகத்தானிருக்கிறது. கெட்ட எண்ணமுள்ளவர்களுடையவும், கெடுதி செய்பவர்களுடையவும் கைகள் இம்மாதிரி யிருக்கமாட்டா. (யாவரும் சிரித்தல்.)

"ஜகன்மாதாவே ஒவ்வொன்றையும் விதிக்கிறாள். அப்படியிருக்க, இப்பொழுதிருந்து அடுத்த நிமிஷம் மறைந்து போகும் மூடனாகிய மானிடன், எல்லாம் தான் செய்ததாக சிலாகித்துக் கொள்கிறான்.

"இரண்டு சந்தர்ப்பங்களில் கடவுள் நகைக்கிறார். ஒன்று: இரண்டு ஸகோதரர்கள் தங்கள் பிதிரார்ஜிதமாகிய நிலத்தைக் கயிற்றினால் அளந்து, 'இது என்னுடையது; அது உன்னுடையது' என்று சொல்லிப் பங்கிட்டுக்கொள்ளும் பொழுது, 'இம்மூடர்கள் பூமியெல்லாம் என்னுடையதென் றறியாமல் தங்களுடையதென்று சொல்லிக்கொள்ளுகிறார்களே!' என்று கடவுள் புன்னகை கொள்கிறார்.

"இரண்டாவது: ஒரு குழந்தை வியாதியினால் மிகவும் அசௌக்கியமுற்று அபாய நிலையிலிருக்கையில், வைத்தியனானவன், அழுதுகொண்டிருக்கும் தாயாரை நோக்கி, 'அம்மா பயப்படவேண்டாம்; உன் குழந்தையை நான் சௌக்கியப் படுத்திவிடுகிறேன்' என்று சொல்லும் பொழுது, கடவுள் புன்னகை கொள்கிறார். மரணத்தை விளைவிப்பது ஈசுவரனென்பதையும், மனி

தனுக்கு அதைத்தடுக்கச் சக்தியில்லை என்பதையும் இம்மூட வைத்தியன் அறியவில்லை.'' (அறை நிச்சப் தமா யிருக்கிறது.)

கேசவருக்கு இருமல் வந்தது. அது தொடர்ச்சி யாக வெகு நேரம் வரையில் இருந்தது. அவர் நோயி ஞல் படும் கஷ்டத்தைப் பார்த்து அவ்விடமிருந்தோ ரனைவரும் மிக வருத்தப்பட்டார்கள். யாவரும் இரு மல் எப்பொழுது நிற்குமென்று இடைவிடாமல் பார்த் துக்கொண்டிருந்தார்கள். அவருடைய கஷ்டமானது அவ்வளவு கடுமையாக விருந்தது. ஆதலால் கேசவர் அவ்வறையை விட்டுத் தம் படுக்கைக்குப் போக வேண் டியதாயிற்று. அவர் தம் சிரஸு தரையில் பட பக வான் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தார்.

கேசவர் அவ்விடத்தை விட்டுத் தம் படுக்கை யறைக்கு முன்போலவே சுவரைப் பிடித்துக் கொண்டு நடந்து போனர்.

* * *

தக்ஷிணேசுவரம் கோவிலுக்குப் புறப்படு முன் னல் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கொஞ்சம் பக்ஷணம் சாப் பிடும்படி கேட்டுக் கொண்டார்கள். அவர் அங்கிருப் பவர்களுடன் பேசிக்கொண்டிருக்கிறர். அவரருகில் கேசவரின் மூத்தகுமாரன் உட்கார்ந்திருந்தான்.

அமிருதன்:—இவன்தான் அவருடைய மூத்த பிள்ளை. தயவுசெய்து தாங்கள் இவனை ஆசீர்வதிக்க வேண்டும்.

பகவான் அச்சிறுவனை மெதுவாகத் தடவிக்கொ டுக்க, அதைப் பார்த்து அமிருதன் மேலும், "ஸ்வாமி!

தங்கள் கரத்தை இவன் தலையில் வைத்து ஆசிர்வாதம் செய்யமாட்டீர்களா?" என்று கேட்டுக்கொள்ள, பகவான், "எனக்கு ஆசிர்வாதம் செய்ய அதிகாரமில்லை; அதைச் செய்வது என் ஜகன்மாதாவே; எல்லா ஆசிர்வாதங்களும் அவளிடமிருந்துதான் வருகின்றன" என்று விடையளித்தார்.

பகவான் புன்னகையுடன் சிறுவனைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் கேசவரின் சிஷ்யர்களான அமிருதன் முதலான பிரம்மோ பக்தர்களிடம் கேசவரைப்பற்றி மேலும் சொல்லுகிறார்.

"ஒரு மனிதனுக்கு 'அவன் சௌக்கியமடையட்டும்' என்று சொல்ல எனக்குச் சக்தியில்லை. அப்படிப்பட்ட சக்தியைக் கொடுக்கும்படியாக என் ஜகன்மாதாவிடம் நான் எப்பொழுதும் கேட்டதில்லை. எனது இடைவிடாத பிரார்த்தனையானது, 'ஆ, என்னம்மா! எனக்குத் தூய்மையான பக்தி—அதாவது, சரீர சௌக்கியம் இன்பம், பணம், கீர்த்தி முதலியவைபோன்ற யாதொரு ஆசையுமில்லாத நிர்மலமான உண்மைப் பக்தி—இருக்கும்படியாக அருள்புரிவாயாக' என்பதே. வியாதிகளைச் சௌக்கியப்படுத்துவது போன்ற சித்திகளைக் கொடுக்கும்படியாக நானவளை எப்பொழுதும் கேட்டதில்லை.

"கேசவர் மஹா பெருமையை யுடையவர். ஐசுவரியத்தைத் தேடும் லௌகிகர்களாலும், பக்தியைத் தேடும் புண்ணிய புருஷர்களாலும் ஸமமாக அபிமானிக்கப்படுகிறார்.

"நான் ஒரு ஸமயம் தயானந்தரை ஒரு பங்களாவில் பார்த்தேன். அன்றைக்கு அவர் கேசவர் வரவை

எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஒவ்வொருவரையும், கேசவர் வந்துவிட்டாரா என்று கேட்டுக்கொண்டே யிருந்தார். கேசவர் மீது அவருக்கிருந்த ஆவலினால் அடிக்கடி அவர் தம்மறையை விட்டுக் கேசவரை விசாரிப்பதற்காக வெளியே சென்றார்.

"தயானந்தர் வங்காள பாஷையைக் கௌரந்த பாஷையென்று சொல்லுவார்.

"கேசவருக்கு வேதத்தில் சொல்லியிருக்கும் தேவதைகளிலும், ஹோமத்திலும் நம்பிக்கையில்லை போலிருக்கிறது. ஆகையால் தயானந்தர், 'கடவுள் அநேக வகைகளைச் சிருஷ்டித்திருக்கிறார்; அவ்வாறே இத்தேவதைகளையும் சிருஷ்டிக்க அவரால் முடியாதா?' என்றார்."

பகவான் கேசவரைப்பற்றி அவரது சிஷ்யர்களிடம் மிகவும் பெருமையாகப் புகழ்ந்து பேசுகிறார்:

"கேசவர், தாம் குருவென்னும் கர்வமற்றவர். அவர் அடிக்கடி தம் சிஷ்யர்களிடம், 'தக்ஷிணேசுவரம் கோவிலுக்குச் சென்றால் உங்கள் ஸந்தேகம் நிவர்த்தியாகும்' என்று சொல்வார். எனக்கு என்னத்திற்கு கீர்த்தி? நானும், 'கேசவருடைய கீர்த்தி கோடிமடங்கு அதிகரிக்கட்டும்' என்று சொல்வேன்.

"ஆம், கேசவர் லௌகிகர்களாலும், ஈசனையே நாடும் மகாத்மாக்களாலும் ஸமமாக அபிமானிக்கப் படும் பெருமையுடையவர்."

பக்ஷணம் கொஞ்சம் சாப்பிட்டார். அவர் தக்ஷிணேசுவரம் போவதற்காகப் புறப்பட்டார்; பிரம்மோ பக்தர்கள் அவரை வழியனுப்ப அவருடன் கீழேயிறங்கி

வந்தார்கள். இறங்கி வந்துகொண்டிருக்கையில், கீழே மெத்தைப்படி யருகில் விளக்கில்லாமலிருப்பதைப் பகவான் கவனித்து, அமிருதன் முதலானவர்களை நோக்கி, "இவ்விடங்களிலெல்லாம் விளக்கேற்றியிருக்க வேண்டும். ஏனெனில் ஜகன்மாதா ஒவ்வொரு வீட்டிலும் வாஸம் செய்கிறாள். இப்படித் தீபமேற்றாமல் விட்டிருப்பது வறுமை விளைவிக்கும். இனிமேல் இப்படி தீபமேற்றாமல் இருக்கக்கூடாது" என்றார்.

பகவான் இரண்டு மூன்று சிஷ்யர்களுடன் வண்டியிலேறி ஆலயத்திற்குச் சென்றார்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

பொதுஜனங்களின் அறிவைப் பரவச்செய்து
ஸநாதன தர்மத்தைப் பலரும் அறிந்துய்யும்
வண்ணம் வெளியாகும் ஒரு மாதாந்தரத்
தமிழ்ப் பத்திரிகை.

1921ஞு ஆரம்ப முதல் சென்னை ஸ்ரீ ராம கிருஷ்ண மடத்தாரால் இப்பத்திரிகை தவறாமல் பிரசுரிக்கப்பட்டு வருகின்றது. பகவான் ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்வாமி விவேகாநந்தர் இவர்களின் அரிய உபதேசங்களும், நாட்டின் முன்னேற்றத்திற்கான பல கட்டுரைகளும், இப் பத்திரிகையில் வெளிவரும்.

*வருஷ சந்தா: தபாற்கூலியுள்பட உள்நாடு: ரூ: 3. வெளிநாடு ரூ. 4. உடனே மணியார்டர் அனுப்பவும். இல்லையேல் V. P. அனுப்பும்படி எழுதவும்.*

*சந்தாதாரர் ஒவ்வொரு தைமாஸ அல்லது ஆடிமாஸத்திலிருந்தும் ஒரு வருஷத்துக்குக் குறை வில்லாமல் சேர்த்துக் கொள்ளப்படுவர்.*

*மானேஜர்:—*

*ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்,*

மைலாப்பூர், சென்னை.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அருளிய

# 1003 உபதேச மொழிகள்

(இரண்டாம் பதிப்பு)

சாதாரணபைண்டு ரூ. 1-6 காலிகோபைண்டு ரூ. 1-12

## குருதேவர் வாக்கியம்

இதில் அடங்கியுள்ள பரமஹம்ஸரின் உபதேசங்கள் அவருடைய பிரதம சீடர்களுள் ஒருவரான ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளால் தொகுக்கப்பட்டு தமிழில் சிறு புத்தக ரூபமாக வெளிவந்துள்ளன.

சாதாரண பைண்டு 0-5-0 காலிகோ பைண்டு 0-8-0

---

## ஸ்வாமி விவேகாநந்தர் அருளியவை

[இந்துமதத்திற்குப் புத்துயிரளித்து நாட்டின் பெருமையைக் காத்த இப்பெரியாருடைய நூல்களின் மேன்மையை அறியாதவர் எவருமிலர்.]

| | அ. பை. | | அ. பை. |
|---|---|---|---|
| கர்மயோகம் | 12—0 | நமது தாய்நாடு | 8—0 |
| பக்தியோகம் | 10—0 | எனது போர்முறை | 3—0 |
| கடிதங்கள் | 8—0 | பவாஹாரி பாபா | 3—0 |
| சிகாகோபிரசங்கம் | 5—0 | விதிவசம் | 0—6 |

ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாமணி தேவியார் ஸ்வாமி விவேகாநந்தர் இவர்களது புகைப்படங்களும் அச்சுப்படங்களும் வெவ்வேறு அளவில் கிடைக்கும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் மயிலாப்பூர், சென்னை.